மறைமலை வெளியீடு: கூ0௩

# சாதிவேற்றுமையும் போலிச் சைவரும்

பல்லாவரம்
பொதுநிலைக் கழக ஆசிரியர்
மறைத்திரு. சுவாமி வேதாசலம்
என்னும்
**மறைமலையடிகள்**
இயற்றியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. சென்னை-1.

First Edition: - (Author) 1911.
Reprints: 1926; (Kazhagam) Aug., 1957

# SATHIVETTRUMAIYUM POLICH SAIVARUM



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1. C. 1100

க. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# பதிப்புரை

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை."

என்பது செந்தமிழ்த் 'திருமுறையின் சிறந்த தமிழக ஒழுக்கத் திருமந்திரம். இதனை அருளிச் செய்தவர் தமிழ் வேதாகமமாகிய 'திருமந்திரமாலை' யருளிய திருமூல நாயனாராவர். இதுவே தொன்மைத் தமிழர் நன்மைவித்து. தமிழக நனிநாகரிகத்தின் துனியிலா இனிய விளக்கு. தமிழர் மக்கட்குலம் ஒன்றே எனக் கொண்டு மாண்புடன் வாழ்ந்தனர். வாழ்வருளுவதும் வாழ்வுக்கு உள்ளழிக்கலாகா அரணாக இருப்பதும் ஒரு கடவுள் வழிபாடு. இவ்விரண்டும் இம்மையும் அம்மையும் பயக்கும் செம்மைசேர் நன்மையாகும். இந்நன்றினையே நினைப்பது நல்லோர் தன்மையுமாகும். நம்மனோர் கடமையுமாகும். அங்ஙனம் நினைப்பார்க்கு நமனால் வரும் துன்பமும் இல்லை. இம்முறையில் ஒழுகுவார்க்குப் பகையும் இல்லை; பகைவரும் இலர். மேலும் அத்தகையோர்க்கு எல்லாரும் உறவினர்; யாண்டும் ஒற்றுமை. ஒற்றுமையே நாடு, மொழி, நன்னெறி மூன்றும் பீடுற ஓங்கி ஈடும் எடுப்புமின்றிக் கூடும் உயர்வற உயர்நலமெய்தி வாழ்வதற்கு வாயிலாகும்.

இத்தகைய ஒற்றுமைக்குக் களைகளாக இருப்பன சாதிவேற்றுமையும், தீதினை மிகுவிக்கும் பல கடவுட் கொள்கையும் ஆகும். இக் களைகள் தமிழகத் தொல்காப்பிய முனிவர் காலத்துக்கு ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்குப் பின் றோன்றிய தந்நயம் பற்றிய ஆரியர் கட்டி வைத்த மனுநூலின் தீமையால் முளைத்தனவாகும். அக் களை தோன்றிய

காலந்தொட்டுத் தமிழகச் சான்றோரும் அருளாளரும் அவற்றை யகற்ற அரும்பாடுபட்டு வந்துள்ளனர். எனினும் மீண்டும் மீண்டும் வாய்ப்பு அமைத்துக்கொண்டு அக் களைகள் தோன்றிவிடுகின்றன. அவற்றால் நம் நாடும், மொழியும், நன்னெறியும் நலிவுறுகின்றன; மெலிவடைகின்றன; வலிவிழக்கின்றன; பொலிவழிகின்றன. இங்ஙனமேயிருந்தால் விரைவிற் பொன்றி ஒழியும் போலும்.

இக் களைகளை இனி எஞ்ஞான்றும் யாண்டும் முளையா வாறு வலிய சான்றமை ஏதுவும் எடுத்துக்காட்டும் பொருத்தமுறக் காட்டிச் சிவத்திரு, மறைமலையடிகளார் 'சாதிவேற்றுமையும் போலிச் சைவரும்' என்னும் பெயர் சூட்டித் தமிழக மட்டுமன்று, உலகமே நல்லொழுக்கில் ஒழுகி ஒற்றுமையுற்று இன்புடன் வாழுமாறு ஓர் அரும் பெரும் தன்மைவாய்ந்த இந் நூல் யாத்துள்ளார்கள். இதன்கண் தென்றமிழ்ப் பொதுமறையாம் தொல்காப்பியம் திருக்குறள் முதலிய தெய்வப் பனுவல்களிலும், திருமுறை சித்தாந்த முதலிய திருவருட் சிறப்பு மறைகளிலும் சாதி வேற்றுமை இனைத்தனையும் கிடையாதென்பதும், அதற்கு மாறாக அதனை அகற்றவேண்டுமென வலியுறுத்தப்பட்டுள்ள தென்பதும் நன்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இது போலவே பழைய வேதங்களிலும் சாதிவேற்றுமை இல்லை யென்பதும் காட்டப்பட்டுள்ளது. அங்ஙனமே உபநிடதங் களிலும் சாதி இல்லை எனவும், பிற நூல்களிலும் இல்லை எனவும் பொறிக்கப்பட்டுள்ளன.

உயர்ந்த சாதியாரென்பது கல்வி அறிவு ஒழுக்கங்கள், கடவுள் வழிபாடு, அன்பு அருள் இரக்கம், ஆருயிர் அனைத் திற்கும் துன்பகற்றல், இன்பமாக்கல் ஆகிய நற்பண்புகளை ஓவாது வளர்த்து வருவோராவர். இதற்கு அகம்புறம்

தூய்மையும்; கொல்லாமை, புலாலுண்ணாமை, கட்குடியாமை, கற்பழியாமையாகிய கடமை நல்லறமும் இன்றியமையா உறுப்புகளாகும். இவற்றை மேற்கொள்ளாதார் உயர்வல்லாத சாதியாராவர். அவரை அந் நிலையிலேயே ஆழ்ந்துவிடுமாறு செய்வது உயர்ந்த சாதியார்க்கு அறமுறையாகா. அவரொடு நெருங்கிப் பழகி அவர்கட்கும் உயரொழுக்கங்களைப் பயிற்றித் தம் நிலைக்குக் கொண்டுவருவதே தக்கோர் தன்மையாகும்.

இவற்றிற்குரிய வழிவகைகளும் இவை செய்யா வழிப் படுங் கேடும் அடிகளாரால் இதன்கண் நன்றாக வலியுறுத்தப்பட்டுள்ளன. எனவே இஃதோர் உயரிய மக்கள் ஒழுகலாற்று ஒண்மை நூலாகும். இதனை அனைவருங் கற்று அவ்வழி நின்று நாட்டையும், மொழியையும், நன்னெறியினையும் வழுவின்றி விழுமிதாக முன்னேறச் செய்வது பெருங்கடனாகும். பல்கலைக் கழகத்தார் இதனைப் பாடமாக அமைத்து மாணவர்க்கு நன்னெறி புகட்டுவது ஏனுடைமாண்பாகும்.

அடிகளார் கக௯௩0-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் ஒன்பதாம் நாள் எழுதி வைத்துள்ள விருப்ப ஆவணத்தின் படி அடிகளார் நூலனைத்தையும் வார முறைப்படி கழகத்தார் அச்சிட்டு வருகின்றனர். அதுபோல் இதுவும் அச்சிட்டு வெளிப்படுத்தப்படுகின்றது. இதனை அடிகளார் 1926-ஆம் ஆண்டு இரண்டாம் பதிப்பாக வெளியிட்டுள்ளார்கள். இப்பொழுது இது மூன்றாம் பதிப்பாக வெளிவருகின்றது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



மறைமலையடிகள்

**1875—1950**

## PREFACE TO THE SECOND EDITION

This Tamil work on 'Caste And Its Evil' first appeared in the form of a somewhat long essay in the sixth volume of my Tamil magazine Jnanasagaram in October, 1911. The occasion which called it into existence was in this wise. In response to the invitation of the Saiva Siddhanta Sabha at Tuticorin, I had to go there in December, 1910, in order to preside at its grand annual gathering and so to conduct it as to make it meet the needs of the time. I took an active part in its proceedings, as it was ably managed by learned, intelligent and well-meaning Saivites and was also attended by a large number of men and women of enlightenment, earnestness and understanding. Everything went on smoothly and delightfully on the first day, except in one important respect. Able lecturers filled with enthusiasm for introducing reforms into religious and social matters, came from distant parts of the country, but some of them were not treated with that respect which learning, good intentions and good manners claim, but were treated, as appeared to my mind, rather badly, simply because they happened to belong to non-vegetarian castes. Whether learned or unlearned, good or bad, religious or irreligious only those who were known to be Saivites, that is, those only whose lineage was known to have originated with the vegetarian velala parents, were invited to sit in one hall and dine together, while others, whose adherence to Saiva religion and clean vegetarian mode of living could not be questioned but whose only fault was what was occasioned by the mere accident of birth, were made to sit aloof in a separate place and served meals rather lately. This I observed on the first day and, on the

next, I questioned some of the prominent members of the society why they were treated thus. One amongst them replied me that they belonged to non-vegetarian castes, and, therefore, could not be admitted into the dining-hall of the Saivites. But I said that though they were no born vegetarians, they too were Saivites in so far as they followed the principles of Saiva religion and adopted the vegetarian mode of living, and that, therefore, they ought to be encouraged, so that others like them might also come up in the hope of mingling with a higher class people and lead a purer and a truer form of religious life. I added that, if their object of conducting such religious meetings were sincere, they should spread the beneficial teachings of the Saiva religion not in theory alone, but in practice also by breeding in all a brotherly love and affection towards each other as all are the children of a single Heavenly Father Lord Siva and by prompting those of them who are morally and intellectually stronger to uplift the weaker and make them their own, and that such merciful, tender and benevolent kind of service, by drawing together the choice people from every class and community, would not only tend to increase the strength of the Saivite community but would also heighten the value of their service to humanity at large. To this the man curtly replied that it was not the custom to do so. Again, I argued with him at some length pointing out to him that what he called 'the custom' was not really so but the reverse of it was the true one as is evident in the lives of the Saints and Sages who founded and spread the Saiva religion. But unfortunately the man was not amenable to reason, since his false and arrogant notion of the superiority of his caste blinded his whole mental vision. Thereupon I made up my mind to dine rather with the excluded party than

with such self-conceited Saivites. And accordingly I did dine with the forbidden brethren. But so much did this action of mine enrage the Saivite brethren that, on the next day, they forbade me entering their dining hall during meal-times. This put me on my mettle and I told them point blank that, as the way to my room lay through their dining-hall. I could not go but through it as usual; and said also that I should not take the meals cooked by their men under their supervision, since I thought the meals prepared in the midst of such inhuman people get themselves contaminated. On that day, the sitting of the Conference was to commence at 3 p. m. with me in the chair; it was nearly 2 p. m., still I had not touched my meals; having seen me persevering in my determination, all the Saivite members, except one or two, had the kindness to come to me and apologize for what they had done and expressed their willingness to treat henceforth the lecturers and others with equality and without minding any caste-distinctions. Of course, there were one or two dissenting elements but these were eliminated from our group. We then sat together, prayed to God for blessing us with that bond of unity, and partook of our meals with one joyous heart. On that third sitting day of the conference, the lectures had been very illuminating and the proceedings were brought to a successful close by my concluding speech which impressed on the minds of the audience the urgent necessity of cutting at the root the evils of caste-distinctions.

Nevertheless, a few mischievous elements with whom caste was everything, while virtue, learning, intelligence, piety, religiousness and such other great qualities count for nothing, could not be silenced either

by reasoning or by any regard to social unity, but they bestirred themselves most actively and attacked me in a magazine-article which, with much abusive matter, asserted the superiority of their caste on false and most erroneous grounds. I might have treated it with indifference, for it contained no argument worth contending for, but for the harmful influence it was likely to have on the minds of the unenlightened. I had, therfore, to take up the cudgels on behalf of the down-trodden and in the interest also of the trwe Saiva community whose progress consisted not in its exclusiveness but in absorbing into it and assimilating with itself persons of higher qualities turned out from lower orders and having an eager expectation to be lifted up from above; and the result was the first edition of this treatise.

The first edition was merely a booklet of 22 pages, which dealt chiefly with the practical aspect of the caste-question, while its theoretical part it touched but rather too briefly. How the barriers raised between one caste and another are mere fictitious ones existing only in the imagination of certain class of people in whom it was bred by their own arrogance and ignorance, how a mixture of castes results as a product of natural human needs and takes place both openly and covertly from the very beginning of the human family, and how easily a fusion of the good and cultured people picked up from every caste and community can be effected for the immense benefit of all, were clearly shown in it. That the tenets of Saiva religion do not stand against but lend a free, unstinted, undisguised support to such a wholesome fusion of the select, was also shown by quotations taken direct from the writings of the founders and exponents of that religion. How useful the booklet

proved to those who looked forward with eagerness to such a reform of castes, though they themselves had not the courage to express the need of it, might be seen from the rapid sale the thousand copies of it had in a few months.

Inevitably the book had been long out of print, though demands for it increased day after day, The elaborate research-work unaided I had to do, in order to redeem the literary and religious history of the land from the thick gloom of myth and uncertainty created and cast over it by selfish and self-interested persons, the constant and unremitting study I pursued of works on 'New Psychology,' stimulated by a strong desire to introduce its subjects into Tamil, left me little leisure to devote to the preparation of its second edition earlier. But, now that I was enabled to undertake the work, years of study aud research-work facilitating it for me, I set myself to enlarging the briefly-touched-subject on 'The origin and growth of the institution of caste,' since I thought that, for healing its present corruption and infusing new life into it, only a thorough knowledge of its past history could afford a proper and effective remedy. And accordingly the subject has been amplified and treated fully and extensively in the first five chapters of this edition.

In the first chapter, it is shown that the present day castes cannot be identified with those of the past, since the callings of the former have undergone so radical a change as is opposed to the ordinances laid down in the Sanscrit Vedas and Dharma Sastras. Modern castes have become hardened into unworkable masses by losing completely their pliancy of meaning and original good quality. When the composition of the first nine

mandalas of the Rig Veda took place, the four castes were quite unknown to the Aryans. But, by the time when the tenth was added, the institution of four castes had become almost an established fact. Still it should be borne in mind that this division of the Indian people into four castes was based merely upon division of labour and was introduced as a convenient theoretic classification intended for the purposes of social and economical sciences. Practically there was no any hard and fast rule that one caste should not adopt the profession of another nor should the one mix with another. Many Dravidian kings, merchants and even slaves took part in the composition of the Vedic hymns and followedi professions that suited best their taste and capacity.

In the second chapter, the same subject is continued and discussed how, even at the time of the twelve oldest upanishads and the two epics the *Mahabharata* and the *Ramayana* when attempts were made by brahmins to make castes hereditary and exalt themselves at the expense of others, only merit and not birth was regarded as constituting a high caste.

In the third chapter are shown how, at the time when a series of Sanscrit works called Dharma Sastras came to be written, the hereditary claims of castes were just beginning to tighten their hold on the people, how the brahmins were attempting to demand exclusive privileges for themselves and devise the cruellest and the most oppressive measures for the labouring classes, how, even then, importance was attached not to birth but to merit, and how the brahmins and others who failed, in the smallest degree, to perform the prescribed duties and functions of their caste lost their caste and became low-born. Here, for the first time, the mischief is

pointed out of including the Tamilians in the Sudra or slave caste. The institution of caste-system originated not with the Aryans as is erroneously supposed by oriental scholars, but with the statesmen of the ancient Tamilians themselves who had attained to a high degree of civilisation long before the Aryans entered India.

In the fourth chapter, a critical inquiry of the 'Tolkappiam,' a very ancient Tamil work which is older than even some portions of the Rig-Veda, is taken up—especially of its sections dealing with the social classifications of the Tamil people. How the Tamil people reached the agricultural stage many centuries before when the Aryans were still in the pastoral stage leading the life of nomads and how the life of an agricultural people necessitated the classification of its men and women into different classes according to their occupations, are clearly proved by the aid of its study. Though this division of the Tamil people was rendered necessary by the conditions of their civilized life, there was no prohibition in any Tamil classics of old of any caste-intermixture. On the other hand there are clear references in them to free intermingling of castes.

In the fifth chapter in which the later day Saiva and Vaishnava religious literatures are taken up for solving this intricate and difficult problem of caste, are given numerous instances and clear quotations from the lives and writings of the Saints of the two great religions, in proof that it was only Love towards God and his servants and not caste was regarded and respected in them.

In the sixth chapter the whole of the first edition which dealt with the practical aspect of the caste-question is included with necessary alterations.

In the seventh and the concluding chapter, easy and practical means for wiping away caste-distinctions and consolidating the refined elements coming above from every grade of society, are set forth.

Another prominent feature of this edition is its pure Tamil style entirely free from Sanscrit words.

In fine it is my great pleasure to express my thanks and heart-felt gratitude to my esteemed friend Mr. C. Ariya Nayagam, Proctor, at Matale (Ceylon), for the extreme kindness with which he promptly sent me a charitable contribution of Rs 250 towards the printing expenses of this book. Words are inadequate to express sufficiently my deep debt of gratitude to this generous-hearted gentleman for similar contributions which he was making frequently for the past ten years and more towards the printing expenses of my writings. But for his munificent help, I would have been much embarassed in carrying out my literary and religious work successfully. By the grace of God may he live long in all glory!

The Sacred Order Of Love
Pallavaram,
1st June, 1926.

VEDACHALAM.

# உள்ளுறை

பக்கம்

## க. பழைய வேதத்தில் சாதி இல்லை

பக்கம்

## ௨. பழைய உபநிடதங்கள் இதிகாசங்களில் சாதி இல்லை



## ௩. மிருதிகளிற் சாதிப்பிரிவும் ஒழுக்கம் பற்றியதே

## ௪. தொல்காப்பியத்திற் சாதிப்பிரிவு தொழில்பற்றியது

## ரு. சைவ வைணவ நூல்களிலுஞ் சாதிவேற்றுமை இல்லை



## சூ. உலக வழக்கிலும் சாதி இல்லை

# சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்



"சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் ளருளும் மாற்பேறரே."
—திருநாவுக்கரசு சுவாமிகள்.

## க. பழைய வேதத்தில் சாதி இல்லை

சைவசமயமானது அருள் ஒழுக்கத்தையும் சிவபிரான் மாட்டும் அவன் அடியார்மாட்டும் ஏனையெல்லா உயிர்கள் மாட்டும் அன்பு பூண்டொழுகும் ஒழுக்கத்தையும் அறிவுறுத்துவதென்று உணரும் நல்வினை இல்லாத போலிச் சைவர் சிலர் சாதிவேற்றுமையே தாம் சைவசமயத்தாற் பெறும் மெய்யுணர்வாகும் என்று மயங்கி உணர்ந்து, அம் மயக்கவுணர்ச்சியைத் தம்மிடத்தும் தம்மோ டொத்தவரிடத்தும் வைத்து மகிழ்வதோடு அமைதிபெறுமல், அதனைத் தமக்கு இசைந்த பத்திரிகைகளினும் எழுதி வெளியிடுவித்துச், சைவவுண்மைகளை உள்ளவாறே எடுத்து விளக்கிவரும் தவவொழுக்கமுடைய பெரியாரையும் தமக்குள்ள பொறுமையாலும் இழிந்ததன்மையாலும் தமக்குத் தோன்றியவாறெல்லாம் இகழ்ந்து பேசுதலுஞ் செய்கின்றார். ஒருவருடைய உயர்வுந் தாழ்வும் அறிவான் மிக்க சான்றோர் மதிக்கற்பாலரே யல்லாமல், அறிவில்லாக் குறும்பர் மதிக்கற் பாலரல்லர்; ஆகவே, அறிவில்லார் கூறும் இகழுரைகளையும்

பொய்ம்மொழிகளையும் அறிவுடையார் ஒரு பொருட்டாக எண்ணாராகலின் அவர் கூறும் பழிச்சொற்களை விடுத்து, அவர் கூறும் மற்றப் பகுதிகளில்உள்ள குற்றங்களைமட்டும் ஒரு சிறிது எடுத்துக்காட்டி மறுத்தல் அவர் கூறியவற்றைக் கண்டு ஆராய்ச்சி புணர்வில்லாதார் மயங்காமைப் பொருட்டேயாம்.

சாதிவேற்றுமை பழையகாலந்தொட்டே வேதம் முதலான நூல்களிற் காணப்படுகின்றதாகலின், அந் நூல்களை ஒப்புக்கொண்டவர்கள் அவ் வேற்றுமையினைக் கைப் பற்றி யொழுகுதலே செயற்பால ரென்பது ஒருசாரார் கொள்கை.

சாதிவேற்றுமை பழமையாக உள்ளதென்றே கொண்டாலும், அதனைத் தழுவியொழுகல் வேண்டுமென்பது பகுத்தறிவில்லார் கூற்றும். பழையனவெல்லாம் நல்லன வாதலும் இல்லை, புதியனவெல்லாம் தீயனவாதலும் இல்லை; பழையனவற்றில் தீயனவும் உண்டு, புதியனவற்றில் நல்லனவும் உண்டு. இவ்வுண்மையைச் சைவசித்தாந்த ஆசிரியருள் ஒருவரான உமாபதி சிவாசாரிய அடிகள் "தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று தோன்றியநூல் எனும் எவையும் தீதாகா." என்று அறிவுறுத்தருளினமையுங் காண்க.

இஞ்ஞான்றுள்ள பல்வகை மக்கட்பிரிவினரும் தத் தமக்குப் பண்டுதொட்டே உரிய கடமைகளிலாவது பிறழாமல் வாழ்கின்றனரோ வென்றால் அதுவுமில்லை. பார்ப்பனரிற் பெரும்பாலார் தமக்கு உரிய நூல் ஓதுதல், வேள்விவேட்டல், பிறர்கொடுக்கும் பொருளை யேற்று வயிறு வளர்த்தல் முதலான தொழில்களை அறவே கைவிட்டு ஆங்கில நூல்களைக் கற்றுத், தம்மால் மிலேச்ச

ரா௧க் கருதப்பட்ட வெள்ளைக்காரரின்கீழ் அலுவல்களில் அமர்ந்து, அவர்கள் ஏவிய பற்பல தொழில்களையும் செய்து வருகிறார்கள் அல்லரோ? இங்ஙனமாகத் தமக்குரிய தொழில்களைக் கைவிட்டு, அரசரின்கீழ் அலுவல் பார்ப்போர் பார்ப்பனர் ஆகமாட்டார் என்று மனுமிருதி (௩, ௬௪) வற்புறுத்திக் கூறியும், அரசரின்கீழ் ஊழியம் செய்வதே இப்போது அவர்கட்கு இயற்கையாய் விட்டதன்றோ? கடல் கடந்து வேற்றுநாடுகளுக்குப் போதல் பார்ப்பனர்களுக்கு விலக்கப்பட்டிருந்தும் (மனு, ௩, ௧௫௮) அவர்களிற் பலர் கடல்கடந்து சென்று ஆங்கிலங்கற்றும், பொருள் தேடியுந் திரும்பிவந்து தம்மினத்தவரோடு உறவுகலந்து பார்ப்பனரிற் சிறந்தோராகக் கருதப்படுதலை நாம் காண்கின்றனம் அல்லமோ? உணவு சிற்றுண்டிவிற்றலாலும், இசைபாடுதலாலும், சோதிடஞ் சொல்லுதலாலும், சம்பளம் பெற்றுக்கொண்டு பிறர்க்குக் கல்வி கற்பித்தலாலும் உயிர் பிழைப்போர் பார்ப்பனர் ஆகமாட்டார், அவர் மிகஇழிந்தோரே யாவர் என்று மனுமிருதி (௩., ௧௫௨, ௧௫௫, ௧௫௬, ௧௬௨) நன்கு வலியுறுத்திச் சொல்லியும், இப்போது இத்தகைய தொழில்களைச் செய்து வயிறுவளர்த்தலே அவர்கட்கு இயற்கையாய் வந்துவிட்டதன்றோ? இன்னும் ஆவின் (பசுமாட்டின்) இறைச்சியைத் தின்று உயிர்வாழ்தல் பண்டைக் காலத்திருந்த பார்ப்பனர்க்கு வழக்கமாயிருந்த தென்று 'தைத்திரியசங்கிதை, எ, ௧, ௬,' விளக்கமாகச் சொல்லியும், அதற்கு ஒப்ப இன்றுகாறும் வடநாட்டின்கண் உள்ள பார்ப்பனர்கள் மீன் மறி முதலியவற்றின் ஊனை வெளிப்படையாகத் தின்று உயிர் வாழாநிற்பவும், தென்னாட்டிற் புகுந்து குடியேறிய பார்ப்பனர் மட்டும் இங்குள்ள சைவ வேளாளர்களின் புலால் உண்ணா அருளொழுக்கத்தைக் கண்டு தாமும் தமது பழைய புலைத்தொழிலைக் கைவிட்டுப்,

புலால் உண்ணுப் புதியநடையைக் கைக்கொண்டு ஒழுகுதல் எல்லாரும் அறிந்த தொன்றன்றோ? இவ்வாறு பார்ப்பனர்கள் தமக்கு உரிய பழைய வழக்க ஒழுக்கங்களைக் கைவிட்டு, இக்காலத்துக்கு ஏற்ற வழக்க ஒழுக்கங்களையும் நடையுடை சாயல்களையுங் கைப்பற்றி உயிர் வாழ்தல் போலவே, மற்றை வகுப்பினருந் தத்தமக்குரிய பழைய தொழில்களையும் முறைகளையுங் கைவிட்டுப் புதிய தொழில் களையும் முறைகளையும் கைப்பற்றி நடந்துவருகின்றார்கள். உழுதுண்ணும் வேளாளரிற் பலர் அவ்வுழுதொழிலைவிடுத்துப், பற்பல கைத்தொழில்களிற் புகுந்திருக்கின்றார்கள். உழுவித்துண்ணும் வேளாளரிற் பலர் தேவார திருவாசகம் ஓதல், தமிழ்நூல்கள் கற்றல் கற்பித்தல், சிவபிரானுக்கு வழிபாடு ஆற்றல், திருக்கோயிற் றொண்டு புரிதல், அரசரின்கீழ் அமைச்சராயும் பிறராயும் அலுவல் பார்த்தல், அயல்நாடுகளிலும் தம் நாடுகளிலும் உள்ள பண்டங்களைக் கொண்டு விற்றல், கற்றோர்க்கும் இரவலர்க்கும் வேண்டிய உதவிகளைச் செய்தல், தமிழையும் சைவத்தையும் வளர்த்தல் முதலான தமக்குரிய விழுமிய செயல்களைக் கைந்நெகிழ விட்டுக், கல்வியறிவும் சிவநேயமும் இலராய், அவையில்லாமையால் அரசர்க்கும் உலகினர்க்கும் பயன்படாராய்த், தம் வயிறு வளர்த்தற்கு எத்துணை இழிதொழிலாயினும் அதனைப் புரிதற்குப் பின்னிடையாராய்த், தம்மை யோம்புதலினும் தம்மை வீணே உயர்த்தி இறுமாத்தலினுங் கருத்து மிகுந்து பிறரது நன்மையைப் பொருட்படுத்தாமற், காலம் வாய்த்தபோது பிறர் உடைமைகளைக் கவர்ந்து அவர்க்குத் தீமைசெய்வதிலும், அரசமன்றங்களில் அழி வழக்காடுவதிலும் முனைத்துநிற்கின்றனரல்லரோ? என்றாலும், இவர்களுட் சிலர் இக் காலத்திற்கு வேண்டும் பயனுள்ள முறைகளையும் ஒழுகலாறுகளையுந் தழுவி, ஆங்கிலத்தோடு

தமிழ்கற்றும், ஆங்காங்கு அரசியற் றொழிலை மேற்கொண்டும், சாதிவேற்றுமைகளை ஒழித்தும், திரைகடலோடிச் செல்வத்தினைத் தொகுத்தும் வருகின்றனரென்பதூஉம் மறுக்கற்பாலதன்று. ஆயினும், இவ் வழுவித்துண்ணும் வேளாளர் தமக்குரிய பண்டை நற்பெருங் கடமைகளை முற்றுஞ் செலுத்துகின்றிலர்; அவற்றிற் பெரும்பாலும் வழுவியே நிற்கின்றனர். மேலும், இந் நாட்டவர்களுள் ஆண்பாலார் தமக்கு வழக்கமாயுள்ளபடியே உடையுடுத்தாது, மேல்நாட்டவரைப்போற் காற்சட்டை மேற்சட்டை யிட்டும், தலையிற் குல்லா தொப்பி கவித்தும், அடிகளுக்குச் சப்பாத்து மாட்டியும் பலவகையால் தமது பழைய முறையை மாற்றி வருகின்றனரல்லரோ? பெண்பாலார் தம் காதுகளைத் தொளைத்து அவற்றை மூக்குச்சளிபோல் தொங்கவளர்த்து அவற்றிற் சுமை மிகுந்த பொன்னுருக்களை யிடும் பழைய அழகற்ற முறையை மாற்றி, அவற்றிற் சிறுதுளை யிட்டுச் சிவப்பு வைரம் முதலியவற்றாற் சமைத்த அழகிய தோடுகளை அழகுறப் பொருத்தி எழில்மிகுந்து உலவக்காண்கின்றனம் அல்லமோ? பெண்பாலார் தமது மார்பை மூடாமல் திறப்பாக விடுதலும், மார்பின்மேல் துணியிடுவார்கூட இரவிக்கையிடாது உலவுதலுமே நன்முறையென்று சொல்லிவந்தவர்களெல்லாம், பார்க்க அருவருப்பான அந்த முறையையொழித்து மார்பைப் புடைவையால் நன்கு மறைத்தும் இரவிக்கை யணிந்தும் வரக் காண்கின்றேமே. இன்னும், பத்தாண்டுகளுக்குமுன் காலையிற் பழையசோறும் மோரும் உண்டு நன்கு வளர்ந்தவர்களெல்லாம், இப்போது விடியும் நேரத்திலேயே காப்பித்தண்ணீரும் உரொட்டியும் உண்ணக் கற்றுக்கொண்டனரே. இங்ஙனமெல்லாம் நம் நாட்டவர் வாழ்க்கையிற் புதிது புகுந்திருக்கும் மாறுதல்களையெல்லாம்

எடுத்துரைக்கப் புகுந்தால், இவ்வேடு இடங்கொள்ளாது. இம் மாறுதல்களில் நல்லனவும் உண்டு, தீயனவும் உண்டு. இவையெல்லாம் பழைய காலத்தில் இருந்தவைகள் அல்ல; புதிதுவந்தவைகளே.

இவ்வாறு மக்களுடைய நாகரிக வளர்ச்சிக்கும் அறிவின் மேன்மைக்கும் ஏற்பக் காலந்தோறும் பழைய ஏற்பாடுகள் அழிந்துபோதலும் புதிய ஏற்பாடுகள் புகுந்து பொருந்துதலும் இயற்கையாம். இதுபற்றியன்றோ "பழை யன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையி னானே" என்னும் ஆன்றோர் மொழியும் எழுந்தது.

ஆகவே, சாதிவேற்றுமை பழைய காலந்தொட்டு இருத்தல் பற்றியே அதனை விடாது கைப்பற்றி யொழுகல் வேண்டுமென்பது சிறிதும் பொருத்தமில்லாத போலியுரை யாம்.

இனிச், சாதிவேற்றுமை பழமை தொட்டே உள்ள தென்பதும் ஆராய்ச்சி அறிவில்லார் கூற்றும். மிகப் பழைய நூலாகிய இருக்கு வேதத்தின் முதல் ஒன்பது மண்டிலங் களினும் சாதி வேற்றுமையைப் பற்றிய குறிப்பு ஒன்றுமே காணப்படவில்லை. இருக்கு வேதம் முதல் ஒன்பது மண்டி லங்களினும் 'பிராமணன்' என்னுஞ் சொல் 'வேள்வி வேட் கும் முனிவனை'யும், 'பதிகங்கள் பாடும் புலவனை'யுங் குறிக் கின்றதே யல்லாமற், பிற்காலத்தில் வழங்கும் பார்ப்பன வகுப்பினனைக் குறிக்கவில்லை. ஏனை மூன்று வகுப்பினரின் பெயர்களான சத்திரியன், வைசியன், சூத்திரன் என்னுஞ் சொற்களுங்கூட அவ் வொன்பது மண்டிலங்களினுங் காணப்படவில்லை. இதனால், அவ் வொன்பது மண்டிலங் களும் எழுதப்பட்ட காலங்களில் மக்கள் எல்லாரும் ஒரே வகுப்பினரா யிருந்தனரே யல்லாமல், நால்வேறு வகுப்பின

ராய்ப் பிரிந்திலரென்பது புலனாகின்றதன்றோ? மக்கள் முதன்முதல் மலைகளிலுங் கடலோரங்களிலும் உயிர்வாழ்ந்தன ரென்றும், அக் காலங்களில் அவர்கட்கு வீடுகள் இல்லையென்றும், அத்தகைய கிருத ஊழியிற் சாதிவேற்றுமை சிறிதுமே இல்லையென்றும் வாயுபுராணமும் (அ. ருக, சுஉ) புகலாநிற்கின்றது. எனவே, இறைவனாற் படைக்கப்பட்ட பண்டைக் காலத்தே மக்களுள் ஏதொரு வேற்றுமையும், உயர்வு தாழ்வுகாட்டும் ஏதொரு பிரிவும் இருந்ததில்லை யென்பதும் புலனாம்.

இனி, அவ் விருக்கு வேதத்தின் முதல் ஒன்பது மண்டிலங்களுக்குப் பின், பத்தாம் மண்டிலம் எழுதப்பட்ட காலத்திலேதான் முதன்முதல் நால்வகை மக்கட்பிரிவு தோன்றுவதாயிற்று. அங்ஙனந் தோன்றியவிடத்தும், மக்களுள் இவ் வகுப்பினர் உயர்ந்தோர், இவ் வகுப்பினர் தாழ்ந்தோர் என்னும் வேறுபாடு தோன்றிற்றில்லை. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் நால்வகைத் தொழில்களைச் செய்வோர் நால்வேறு வகுப்பினராகச் சொல்லப்பட்டன ராயினும், அந் நால்வகுப்பினரும் எல்லாம்வல்ல இறைவனுக்குப் புதல்வர்களே யாவர் என்பதுங் கூடவே வைத்துத் தெளித்துரைக்கப் பட்டது. யாங்ஙனமெனிற் காட்டுதும்: இருக்கு வேதத்தின் இறுதிக் கண்ணதாகிய பத்தாம் மண்டிலத்தில் உள்ள புருடசூத்த மந்திரமானது (கஉ), "பிராமணன் அவனது வாய் ஆயினன்; ராஜந்யன் அவனுடைய தோள்கள் ஆயினன்; வைசியன் எனப்பட்டோன் அவனுடைய தொடைகள் ஆயினன்; சூத்திரன் அவனுடைய அடிகளிற் றோன்றினன்" என்று ஓதுமாற்றால், நால்வகைப் படுத்துச் சொல்லப்பட்ட மக்கள் அனைவரும் எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளினின்றே தோன்றினா ரென்னும் உண்மை இனிது புலப்படாநிற்கும்.

அற்றேற், பார்ப்பனன் இறைவனது மேலுறுப்பாகிய வாயி லிருந்தும், மற்றையோர் மற்றைக் கீழ் உறுப்புகளாகிய தோள் தொடை அடி என்பவற்றிலிருந்தும் தோன்றினர் என அம் மந்திரம் உரைத்தது என்னையெனின்; அந் நால் வகை வகுப்பினரின் தொழில் வேறு பாடுகளை அறிவித் தற்கு அஃது அங்ஙனம் உருவகவகையாற் கூறினதே யன்றி, அவர்களுள் உயர்வு தாழ்வு கற்பித்தற்கு அங்ஙனங் கூறிற்றில்லை. நூல் ஓதுதல் வாயின்தொழில் ஆதலால், ஓதுதற்றொழிலையே தமக்குச் சிறப்பாகக்கொண்ட பார்ப் பனர் இறைவனது வாயினின்றும் பிறந்தவராகச் சொல்லப் பட்டார்; விலங்குகளாலும் பகைவர்களாலுங் குடிமக்க ளுக்குத் தீங்கு நேராமல் வில்லுங் கணையும் பிடித்துவேட்ட மாடுதலும் போர்புரிதலுந் தோள்களின் தொழில்களாத லால் அத்தொழில்களைச் செய்யும் ராஜந்யர் இறைவனுடைய தோள்களினின்றும் பிறந்தவராகச் சொல்லப்பட்டார்; ஓரிடத்துண்டாகிய பண்டங்களை விலைகொண்டு பிறிதோ ரிடத்திற் சேர்ப்பித்தும், பிற இடங்களில் உண்டாகிய பண்டங்களை ஓரிடத்திற் கொணர்ந்து தொகுப்பித்தும் விற்று மக்கள் எல்லாரும் வேண்டும் பொருள்களை அவர்கள் எளிதிற்பெறத் திரட்டித் தந்து பெரிது பயன்படுங் கொண்டுவிற்றற் றொழிலைச் செய்தல் கால்களினால் ஆகுந் தொழிலாகலின் அதனைப் புரியும் வைசியர் இறைவனுடைய தொடைகளினின்றும் பிறந்தவராகச் சொல்லப்பட்டார்; இனி இம் மூவகைத் தொழில்புரிவாரும் ஏவிய பிறதொழில் களை விரைந்துசென்று முடித்து அவர்க்கு மிகவும் பயன் படுங் குற்றேவற்றொழிலைச் செய்தல் பெரும்பாலுங் காலடி களினால் ஆகற்பாலதாகலின் அதனைச் செய்யும் சூத்திரர் இறைவனுடைய திருவடிகளினின்றும் பிறந்தவராகச் சொல்லப்பட்டனர். ஆகவே, இப் பகுப்புகள் தொழில்

பற்றி வந்தனவே யல்லாமல் வேறல்லவென்பது சொல்லாமே இனிது விளங்கும். அற்றன்று, இறைவனது வாய் மேலுறுப்பும், அவன்றன் அடி கீழுறுப்பும், ஏனைத் தோளுந் தொடையும் இடைப்பட்ட உறுப்புக்களுமாகலின், அம் முறையே மேலுறுப்புக்களிற் றோன்றிய பிராமணர் சத்திரியர் வைசியர் என்னும் மூவகுப்பினரும் மேலோரெனவும், கீழ் உறுப்பிற் றோன்றிய சூத்திரர் கீழோரெனவுங் கொள்ளுதலே பொருத்தமுடைத்தெனின்; இக் கூற்றும் பகுத்துணர்ச்சி இன்மையால் நிகழ்வதொன்றாம்; என்னை? எவ்வகைப்பட்ட உயிரும் உடம்போடு கூடிப் பிறத்தல் என்பது, தந்தை தாயை மருவ வெளிப்படும் பாற்றுளியானது தாயின் வயிற்றுள்ளே கருப்பையிற் புகுந்து தங்கிக் கருவாய்ச் சமைந்து கை கால் முதலான எல்லா உறுப்புக்களும் பொருந்திப் படிப்படியே வளர்ந்து முற்றிப், பின் அக் கருப்பையை விட்டகன்று வெளிப்படுதலாகவே எங்கும் எக்காலத்தும் நிகழ்ந்து வருதலைக் கண்டுங் கேட்டும் அறிந்தும் வருகின்றோமாகலானும், இவ்வாறு எங்கும் மாறாமல் நிகழ அமைத்த இறைவனது அமைப்புக்கு மாறாக வாயிற் பிறத்தலும் தோள் தொடை அடி என்னும் உறுப்புக்களிற் பிறத்தலும் எஞ்ஞான்றும் எவ்விடத்தும் நிகழக் காணேமாகலானும் என்பது. அங்ஙனமன்று, மக்களுக்குத் தான் மகவுகளை வயிற்றில் அமைத்துப் பிறக்கவைத்தனனே யல்லாமல், எல்லாம்வல்ல இறைவன் தன்னினின்று மக்களைத் தோற்றுவித்தற்கு அத்தகைய அமைப்பை வேண்டுவான் அல்லன்; அவன் தனது உறுப்பில் எந்த இடத்தினின்றும் அவரைத் தோற்றுவிக்க வல்லன் எனின்; அங்ஙனம் எல்லாம்வல்ல இறைவன் மக்களைத் தோற்றுவித்தற்கு அவனது நினைவொன்றே போதுமாயிருக்க, வாய் தோள் தொடை அடி முதலிய

உறுப்புக்களும் அதற்கு வேண்டுமோ எனக் கூறமறுக்க மேலும், இறைவன் தன் உறுப்புக்களினின்று மக்களைப் படைத்ததனை அம் மக்களுள் ஒருபாலாராகிய கற்றவு கண்டறிவ தெங்ஙனம்? எவரும் தாய் வயிற்றினின்று பிறக்கின்ற ஞான்று தாம் அங்ஙனம் பிறத்தலை அறிந்தவ ரல்லர். தாம் பிறந்து வளர்ந்து அறிவுடையரானபின் குழவிகள் தாய் வயிற்றினின்றும் பிறத்தலைப் பலகாலுங் கண்டு வைத்தே தாமும் அங்ஙனம் பிறந்திருத்தல் வேண்டு மென எல்லாரும் உய்த்துணர்கின்றார். இம் முறையோடு ஒப்ப, முழுமுதற் கடவுளும் இப்போது எவ்விடத்தாயினும் தம்முடைய வாய் தோள் தொடை அடி முதலான உறுப்புக் களிலிருந்து பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரர் என் பாரைத் தோற்றுவிக்க நாம் காணினன்றே, முதன்முதல் அவர் அந் நாற்பிரிவினரையும் படைத்த காலத்தில் அவர் களை அங்ஙனமே தோற்றுவித்திருப்பாரென உணரலாம். அவ்வாறு கடவுள் தம்முடைய நால்வேறு உறுப்புக்களி னின்று நால்வேறு வகுப்பினரைத் தோற்றுவித்தல் எங்கும் நிகழக் காணாமையானும், இயங்கும் உயிர்கள் அத்தனையும் தாய் தந்தையரின் சேர்க்கையாற் றாயின் கருப்பையினின்றே தோன்றக் காண்டலானும், இவ்வாறு நடைபெறும் உயிர் களின் பிறப்பு உலகம் உண்டான காலமுதற் பிறழாமல் நிகழ்ந்து வருதல் முன்னுள்ள உண்மையறிஞர் தொன்று தொட்டு வரன்முறையாக எழுதி வைத்திருக்கும் உண்மை நூல்களால் அறியக் கிடத்தலானும், தாய் தந்தையரின் சேர்க்கையினால் தாயின் கருப்பையினின்றே பார்ப்பனர் அரசர் வணிகர் அடியோர் என்னும் எல்லாமக்களும் பிறத் தலைக் கண்கூடாக யாவரும் கண்டுவருதலானும், இம் முறையையே தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார் "பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்" என்று இரண்டாயிர ஆண்டு

கட்கு முன்னரே அருளிச் செய்திருத்தலானும், இங்ஙனம் பிறவியெடுக்கும் அமைப்புக் கடவுள் வகுத்ததே யல்லாமற் பிறரெவரும் வகுத்ததல்லாமை யானும், தான் வகுத்த இவ் வமைப்புக்கு மாறாக இறைவன் வேறொருவாற்றால் மக்களைத் தோற்றுவித்தானென்றல் பிறழா இயற்கையனாகிய அவனது இறைமைத் தன்மைக்கு இழுக்காதலானும், மற்று அவ் வாறு மாறான தோற்றங் கூறுதல் எல்லார்க்கும் புலனாய் நிகழும் உண்மை நிகழ்ச்சிக்கும் பண்டுதொட்டு உண்மை யறிவினர் கூறிவரும் எல்லா உண்மையுரைக்கும் முற்றும் முரணாய் முடிதலானும் அங்ஙனங் கடவுள் வாய் முதலான உறுப்புக்களினின்றே நால்வகை மக்கட் பிரிவினரையுந் தோற்றுவித்தானென வரையறை கடந்து பேசுதல் பெரி தும் ஏதமாமெனக் கூறிவிடுக்க. அதனால், அந் நால்வகை மக்கட்குரிய நால்வேறு தொழில்களை உணர்த்துதற்கே உருவகவகையால் இறைவன்றன் வாய் முதலிய உறுப்புக் களினின்று அந் நால்வருந் தோன்றினரென அப் புருட சூத்தவுரை மொழியலாயிற்றென அதற்குப் பொருந்து மாறு பற்றிப் பொருளுரைத்துக் கொள்க.

அங்ஙனமாயின், மேல்கீழ் என்னும் உயர்வு தாழ்வுகளை உணர்த்துதற்கே, அஃது அங்ஙனம் உருவக வகையால் மேலுறுப்பாகிய வாயினின்று பார்ப்பனரும் ஏனைக் கீழ் உறுப்புக்களாகிய தோள் தொடை அடிகளினின்று ஏனை யோருந் தோன்றினர் எனக் கூறிற் றென்றாற் படும் இழுக் கென்னையெனிற்; புலால் நாற்றம் வீசும் மக்களின் உடம் புகள் வினைகளை நுகருதற்பொருட்டு மாயையில் அமைத்துக் கொடுக்கப்பட்டனவாகலின், இவ் வுடம்புகளிற் பொருந்திய மேலுறுப்புகளை உயர்ந்தனவென்றும், மலக்கழிவுகளுக்கு இடமான கீழ் உறுப்புகளைத் தாழ்ந்தனவென்றுங் கூறுதல் ஒக்கும். மற்று எல்லாம்வல்ல இறைவனது திருவுருவமோ

அங்ஙனம் பிறரொருவரால் மாயையினின்று ஆக்கப்படுவது அல்லாமையினாலும், அவன் தன் அன்பர்க்குப் புலப்பட்டுத் தோன்றி அருள்செய்தற்கு நினைந்தவளவானே அஃது அவ்வருள் நினைவிற் றோன்றி மின்னொளியினும் மிக்க பேரொளியும் நுண்மையுந் தூய்மையும் வாய்ந்ததாய் மறைவதொன்றாகலானும், அப் பெற்றித்தாகிய அவனது தூய அருளுடம்பில் ஓர் உறுப்பினை உயர்ந்ததென்றலும் மற்றை ஓர் உறுப்பினைத் தாழ்ந்ததென்றலும் ஒருவாற்றானும் ஒவ்வா. பைம்பொன்னினாற் சமைக்கப்பட்ட ஒரு பாவை மேல்கீழ் இடமெங்குஞ் சுடர்விடு பொன்வடிவாயே விளங்குதல் போலவும், தூய கன்னற்பாகினால் வார்த்தமைக்கப்பட்ட ஒரு பாவையின் உடம்பெங்குந் தித்திக்கும் இயல்பிற்றாகவே இருத்தல் போலவும் இறைவனது உடம்பு முழுதும் ஒரே தூய்மைத்தாய் விளங்குமல்லாமல், அது தன்னிலே உயர்வு தாழ்வுகள் உடைத்தாய் இருப்பதன்றென உணர்ந்துகொள்க. ஆகவே, இறைவனது மேலுறுப்பிற் றோன்றினானென்பது பற்றிப் பார்ப்பனரை மேலோர் என்றலும், கீழுறுப்பிற் றோன்றினானென்பது பற்றி ஏனை மூவரைக் கீழோர் என்றலும் சிறிதும் ஒவ்வா. அந் நால்வரும் இறைவனுடைய நால்வேறு உறுப்புகளிற் றோன்றினார் என்றது, அந் நால்வகுப்பார்க்குந் தனித்தனியே சிறப்பாக உரிய நால்வகைத் தொழில்களை உணர்த்தியபடியாம்; இதுவே அப் புருடசூத்த உரையின் உண்மைப்பொருளென்று கடைப்பிடிக்க. மேலும், இந் நால்வகுப்பினரும் இறைவன் ஒருவனிடத்தே நின்று தோன்றினவரென்பது அதனுள் விளக்கமாகச் சொல்லப்பட்டிருத்தலின், அவர்கள் ஒரு தந்தைக்குப் பிறந்த மக்களேயாவரென்பதும், அதனால் அவர்தமக்குள் உயர்வு தாழ்வு கற்பித்தல் சிறிதும் ஏலாதென்பதும் கருத்திற் பதிக்கற்பாலனவாகும். இச்

நால்வகை மக்கட்பிரிவினரின் பெயரை அவ்வவர் தொழில் வேறுபாடுபற்றி எடுத்தோதும் பதிகம் இப் புருடசூத்த மந்திரத்தைத் தவிர வேறேதும் இருக்குவேதத்தில் எங்குங் காணப்படாமையாலும், ஒன்பதாஞ் செய்யுளில் இருக்கு எசுர் சாமம் என்னும் மூன்றுவேதங்களின் பெயரை எடுத்துச்சொல்லும் இப் புருடசூத்தம் அம் மூன்றுவேதங் களுந் தோன்றிய பின்னன்றி முன்னிருந்தது ஆகாமை யாலும், நால்வேறு மக்கட் பாகுபாடும் அதனையெடுத்துக் கூறும் புருடசூத்தமும் இருக்கு எசுர் சாமம் என்னும் மூன்றுவேதங்களும் இயற்றப்பட்டகாலத்தில் இருந்தன அல்ல என்பதும் உணர்ந்துகொள்ளல் வேண்டும்.

இனி, மாபாரதப்போரில் மூண்டுநின்ற குருகுல பாஞ்சால அரசர்களையும், அவர் வழியில்வந்த ஜனகன், அஜாதசத்துரு, ஜனமேஜயபரிக்ஷித், இவற்கு ஆசிரியனாகிய வைசம்பாயனன் முதலியோரையும் எடுத்தோதும் கிருஷ்ண சுக்லயஜுர் வேதமும் அதனோடு ஒரு காலத்ததாகிய சாம வேதமும் அம் மாபாரதப்போர் நிகழ்ந்ததற்குப்பின் ஆக்கப் பட்டனவாதல் தெளியப்படும் இவ்விரண்டு வேதங்கள் இயற்றப்பட்டகாலத்தை யடுத்தே, அவ் வேதங்களுக்கு விளக்கவுரைகளாய் எழுந்த 'பிராமணங்க'ளும், அவற்றை யடுத்தே வேள்வி வேட்டலை மறுத்து முழுமுதற்கடவுளின் மெய்ம்மையைப் புலப்படுத்தும் பன்னிரண்டு பழைய 'உபநிடதங்க'ளும் ஆக்கப்பட்டன. இவைகளுண்டான காலத்திலுங்கூடப், பிறப்பளவில் சாதிவேறுபாடு சொல்லப் படவில்லை. சுக்கிலயசுர்வேதத்தின் முப்பதாம் இயலிற் பல வேறுதொழில்களைச்செய்யும் பலவேறு மக்கட்கூட்டத்தின் பெயர்கள் மட்டுமே எடுத்துரைக்கப்பட் டிருக்கின்றன; இங்ஙனமே தைத்திரீயபிராமணத்திலுஞ் சொல்லப்பட்டிருக் கின்றன; ஆனல், அவற்றுட் சாதிவேறுபாடுகளும்,

அவற்றின் உயாபு இழிபுகளும் பேசப்படவில்லை. அதற்கு ஒருசான்று எடுத்துக் காட்டுதும்: முன்னொருகால் சரசுவதி யாற்றங்கரையிலே இருடிகள் ஒருவேள்வி வேட்க லாயினர். அப்போது 'இல்லூஷை' என்னும் ஓர் அடிமைப் பெண்ணின் புதல்வரான 'கவஷா' என்பவர் அவ் வேள்விக்கு வந்திருந்தனர். அவர்கள் அவரை ஓர் அடிமையின் பிள்ளை என்பதுபற்றி இகழ்ந்து, அவ் வேள்விக்களத்தினின்றுந் துரத்த, அவர் சென்ற இடத்திற்கே அவ் யாற்றுநீர் செல்லுமாறு கடவுள் அருள்செய்தனர்; அதனையுணர்ந்த இருடிகள் அவரை யிகழ்ந்த தமது அறியாமைக்கு வருந்திப் பின்னர் அவரை ஒரு சிறந்த இருடியாக ஏற்று வணங்கினர்; என்று ஐதரேயபிராமணம் (உ, ௧௯) புகலுகின்றது. இக் 'கவஷா' என்பவரே இருக்கு வேதத்தின் பத்தாம் மண்டிலத்திற் பலபதிகங்களை இயற்றியிருக்கின்றனர். இவ்வாற்றாற் பிராமணங்கள் எழுதப்பட்ட காலத்திலும் சாதி வேற்றுமை நிலைபெறவில்லை யென்பது புலனாகின்றதன்றோ?

இன்னும், பல வேள்விகளைச் செய்து முடித்தவனும், அவ் வேள்விகளில் முனிவரர்க்கும் பிறர்க்கும் ஏராளமான நன்கொடை வழங்கினவனும், விசுவாமித்திர முனிவரைப் பாதுகாத்தவனும், இருக்கு வேத ஏழாம் மண்டிலத்தின் ௧௮-ஆம் பதிகத்திற் பாராட்டப்பட்டவனுமான 'பைஜவனன்' என்பான் ஒரு சூத்திரனே என்று மாபாரதம் சாந்திபர்வம் (உ௩௦௪-ஆம் செய்யுளிலிருந்து) நுவல்கின்றது.

இன்னும், இருக்குவேதப் பதிகங்களை ஆக்கிய முனிவரர் பலரும் அரச வகுப்பினையும் வணிக வகுப்பினையுஞ் சேர்ந்தோர் ஆவரென்று மற்சபுராணத்தின் ௧௩௨-ஆம் இயல்

லக்குத் துரைக்கின்றது. இருக்குவேதத்தின் மூன்றும் மண்டிலத்தை ஆக்கிய விசுவாமித்திரரும், மற்றை மண்டிலங்களிற் பதிகங்கள் பலவற்றை ஆக்கிய வைவசுவதமனு, இடன், புரூரவர் முதலாயினாரும் அரசவகுப்பினரே ஆவர்; பலந்தர், வந்தியர், சங்கீர்த்தி முதலியோர் வைசிய வகுப்பினராவர். இருக்குவேதத்தின், முதல் மண்டிலத்துள்ள ா-ஆம் பதிகத்தை இயற்றிய ரிஜ்ராசுவர், அம்பரீஷர், சகதேவர், பயமானர், சுராதர் முதலான இருடிகள் ஐவரும் விருஷாகிர் அரசன் புதல்வராவர் என்று இருக்குவேதத்தின் அநுக்கிரமணிகையே புகல்கின்றது. இங்ஙனமே, அவ்விருக்குவேதத்தின் சு-வது மண்டிலத்திலுள்ள கரு-ஆம் பதிகத்தைச் செய்த வீதஹவ்யரும், கo-வது மண்டிலத்து சு-ஆம் பதிகத்தை ஆக்கிய அம்பரீடர் மகனான சிந்துத் வீபரும், அதன் எரு-ஆம் பதிகத்தை இயற்றிய பிரியமேதர் மகனான சிந்துக்ஷித்தரும், அதன் கஎசு-ஆம் பதிகத்தைப் பாடிய உசீநரரின் மகன் சிபியும், காசிமன்னன் திவோதாசன் மகன் பிரதர்த்தனரும், அதன் கூஅ-ஆம் பதிகத்தைப் புகன்ற சந்தநுவின் மகன் தேவாபியும் எல்லாம் அரசஇனத்தைச் சேர்ந்தோரேயாவர். இவ்வாறே இன்னும் பலர் உளர்.

மேற்சொல்லிய இருக்குவேதப் பதிகங்களை ஆக்கிய சத்திரிய வைசியர் என்பார் தமிழ வேளாள வகுப்பினரேயாவர். யாங்ஙனமெனிற் கூறுதும்: மேற்காட்டிய ரிஜ்ராசுவர் முதலான அரசமுனிவர் ஐவரும் சேர்ந்தியற்றிய பதிகத்தின் கட-ஆம் செய்யுளில் 'சோமன்' என்னுங் கடவுள் ஐந்து இனத்தாரைக் காப்பவராகச் சொல்லப்படுகின்றனர். இச் 'சோமன்' என்னுஞ் சொல் 'ச உமா' என்னும் இருமொழிப் புணர்ச்சியாற் றோன்றி 'உமையோடு கூடினவர்' என்று பொருள்படும் என அதர்வசிரஸ் உபநிடத

உரையிலே விளக்கப்பட்டிருத்தலின், அச் சொல் சிவபிரான் மேற்றாதலும், 'சோமநாதம்' என்னும் வடநாட்டுச் சிவபிரான் திருக்கோயில் அப் பெயர்பெற்றிருத்தலின் அஃது அதற்குப் பின்னும் ஒரு சான்றாதலும் நன்கு விளங்கும். இனிச் சிவபிரானாற் காக்கப்படும் ஐவகை இனத்தினர் ஆவார் துருவாசர்களும் யதுக்களும் அநுக்களும் துருகியர்களும் பூருக்களும் என ஐவர் ஆவரென்று கிரிபித் என்னும் ஆசிரியர் நன்கெடுத்துக் காட்டியிருக்கின்றார்.[1] இவ் வைவகை இனத்தினரும் தமிழ்மக்கட் பிரிவினரே யாவரென்று ராகொசின் என்னும் வரலாற்று நூலாசிரியர் தாம் ஆழ்ந்தாராய்ந் தெழுதிய வேதஇந்தியா என்னும் நூலில் விரித்து விளக்கியிருக்கின்றார்.[2] வடக்கிருந்துவந்து இந்திய நாட்டுள் நுழைந்த ஆரியமக்களை எதிர்த்த பத்து அரசர்களுக்குத் தலைவராய் நின்றோர் பூருக்களும், அவர்க்குத் துணைவராய் அஞ்சா நெஞ்சினராய் நிலவிய பரதர்களும் ஆவர். இத் தமிழ அரசர் பதின்மருட் சிவர் (சைவர்) விஷாநியர் (வைஷ்ணவர்) என்பார் இருவரும் சேர்த்துச் சொல்லப்படுகின்றனர்.[3] ஆகவே, அத்துணைப் பழைய காலத்திலேயே தமிழருட் சிவபிரானை வணங்குஞ் சைவரும், விஷ்ணுவை வணங்கும் வைஷ்ணவரும் வலியரா யிருந்து ஆரியரை எதிர்த்து நின்றமை புலனாகும். பழைய தமிழ் மக்களுட் போர்வலிமையில் மிகச் சிறந்துநின்ற பரதர் தம் குடியிற் றோன்றிய அரசர்களே இவ் இந்தியநாடு முழுமையும் ஆண்டுவந்தனர்; அதுபற்றியே, அவர்களின் செங்கோல் நீழலில் வந்து வைகிய ஆரியமக்கள் இவ் இந்தியநாட்டைப்

1. See R. T. H. Griffith's English translation of the Rig Veda, Vol. I, p. 10, foot note.

2. Vedic India by Zenaide A. Ragozin, pp. 323-329.

3. இருக்குவேதம், ௭, ௧௮.

'பாரதவர்ஷம்' என்று அழைப்பாராயினர். குமரிநாடு கடல்கொண்டபின் அங்கிருந்த தமிழர்களே வடநாடு வரையிற் சென்று ஆங்காங்குக் குடியேறிப் பத்துவகை அரசியலை நாட்டினார்கள். அவர்களுள் வடமதுரையில் அரசாண்ட யதுகுலத்தவர்களே பின்னர்க் கண்ணனைத் தலைவனுய்க்கொண்டு துவாரகையில் வந்து குடியேறினர். அவ் யதுகுலத்தவரில் ஒரு பகுதியாரே பெயர்த்துந் தமிழ் நாட்டிற் போந்து எருமையூரிற் குடியேறினர்.[1] எருமையூரிற் குடியேறிய யதுகுலத்தவராகிய வேளிர்க்குத் தலைவனே புறநானூற்றிற் கூறப்படும் இருங்கோவேள் என்னும் மன்னன் ஆவன். இவ்வாறு இவர்போற் றமிழ் நாட்டினும் பிறநாடுகளினும் அந்நாளிற் பரவியிருந்த வேளாள மன்னர்கள் வரலாறுகளை உரைக்கப்புகின் இது மிக விரியும். இத்தமிழ வேளாள அரசர்களையே பழைய வடமொழி வேதங்களும் உபநிடதங்களும் 'ராஜந்யர்,' 'சத்திரியர்' என்னும் பெயர்களாற் குறிப்பவாயின என்பதற்கு, மநு திராவிடர்களை 'சத்திரியர்' என்று கூறுதலே (கo, சங, சச) சான்றும்.[2] தமிழ வேளாளரில் உழவு தொழில் செய்தாரும், உழவுதொழிலாற் பெற்ற பண்டங்களைக் கொண்டு விற்றாருமே வடநூல்களில் 'வைசியர்' என்று நுவலப்படுவாராயினர். இவ்வாறு காட்டப்பட்ட சத்திரியரும் வைசியருமாகிய தமிழ வேளாளரே தொன்றுதொட்டுச் சிவபிரானை வணங்கிவருபவராய் இருந்தமையின், அம் மக்கட்பிரிவினர் ஐவரையுங் காப்பவர் 'சோமன்' என்னும் சிவபிரானாக இருக்குவேதம் புகலுவதாயிற்றென்க. எனவே, இருக்குவேதத்திற் பலப்பல

1. See A History of Civilisation in Ancient India, by R. C. Dutt, Vol. 1, 219.

2. Ibid, Vol. II, p. 86.

பதிகங்கள் இயற்றிய சத்திரிய வைசியர்கள் அனைவரும் தமிழ வேளாளர்களே யாதலைத் தெற்றென உணர்ந்து கொள்க.

இவ்வாறு சத்திரிய வைசியராகிய வேளாளர்களும், இவர் தமக்குக் குற்றேவற்றொழில் புரிவாரான சூத்திரரும், மற்றை ஆரியரும் கலந்து வேதங்களையும் பிராமணங்களையும் பன்னிரண்டு உபநிடதங்களையும் ஆக்கிவைத்த காலத்திற், பிறப்பளவில் தமக்குள் உயர்வுதாழ்வு காணாது, உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத நால்வேறு தொழில்களையுஞ் செய்துகொண்டு உண்ணல் கலத்தல்களில் ஏதொரு வேறுபாடுமின்றி ஒருமித்து வாழ்ந்தனராகலின், அக் காலத்திற் பிறப்பளவில் உயர்வுதாழ்வு கொள்ளும் சாதிவேற்றுமை சிறிதுமில்லையென்று தெளிக. இதனாலன்றே வாயுபுராணமும் (அ, ௧௯௦-௧௯௩) "தீயவனுக்கு, மனத்தூய்மை இழந்தவனுக்கு வேதங்களும் அவற்றின் சடங்குகளும் வேள்விகளும் பட்டினிகிடத்தலும் தென்புலத்தார் கடனிறுத்தல் முதலான வினைகளும் பயனைத் தருகின்றில; அகத்தே இழிந்த இயற்கையுடையனாயிருப்போன் புறத்தே எத்துணை முயற்சியோடு சடங்குகளைச் செய்தானாயினும், அவை சிறிதும் பயன்படா. ஒருவன் அழுக்கு நெஞ்சத்தோடு தனக்குள்ள பொருள் முழுதுங் கொடுத்தானேனும், அதனால் நன்மை எய்தமாட்டான்; ஆதலால் நல்லதன்மையே உயர்ச்சிக்கு ஏதுவாகும்." என்று கூறுவதாயிற்று.

இனி, மூன்று வேதங்களுக்கும் பிற்பட்டதாகிய புருட சூக்தத்திலும், அதற்கும் பிற்பட்டதாகிய பிருகதாரணியக உபநிடதத்திலும் (௧, ௪, ௧௫) நால்வகைச் சாதிப்பெயர் காணப்படினும், முன்னையதில் அந் நாற்சாதியினரும் ஒரு முழுமுதற்கடவுளின் பிள்ளைகளாதலும், பின்னையதில் அந்

நாற்சாதியினரிடத்தும் இறைவன் நிறைந்து விளங்குதலும் நன்கு வற்புறுத்து உரைக்கப்படுதலின், இந் நூல்கள் தோன்றிய காலத்தில் நால்வகைச் சாதிகள் இருந்தமை பெறப்படினும், அவருள் உயர்வுதாழ்வுகள் இருந்தமை புலனாகவில்லை.

பிராமணங்கள் தோன்றுவதற்கு முற்பட்ட வேத காலத்தில் பூணூல் அணியும் வழக்கங் காணப்படாமையால், அதுபற்றி யுண்டான சாதிவேற்றுமையும் அஞ்ஞான்று இருந்ததில்லை. சதபதபிராமணத்திலும் (உ, ச, உ), கௌஷீதகி உபநிடதத்திலுமே (உ, எ) பூணூல் அணியுங் குறிப்பு முதன்முதற் காணப்படுகின்றது. இவ்விரண்டிலுங்கூடப் பகலவன் கீழ்பால் எழும்போது அவனை வணங்குங் காலைப்பொழுதிலும், வேள்வி வேட்கும் பொழுதிலுமே மாந்தர் பூணூல் அணிந்து மற்றைக் காலங்களில் அதனைக் கழற்றிவிடும் வழக்கம் நன்கு தெரித்தோதப் பட்டமையால், இந் நூல்கள் உண்டான காலத்திலும் சாதிவேற்றுமையின் பொருட்டுப் பூணூல் அணியப்படவில்லை யென்பதும், இறைவனை வழிபடுந் தொழிலிற் புகுந்திருப்போர் அத்தொழிலிற் புகாதார் தம்மை அணுகாமல் விலகிப்போதற்கு ஓர் அடையாளமாகவே அதனை அத்தொழில் இயற்றும் நேரங்களில் மட்டும் அணிந்திருந்தனரென்பதும் இனிது விளங்கும். மற்று இக்காலத்திலோ இறைவனை வணங்காமல், உலகியற் றொழில்களையே அல்லும் பகலும் புரிந்து தமது வயிற்றுக்குந் தம்மைச் சேர்ந்தாரது வயிற்றுக்குமே பாடுபட்டு உழன்று தீவினைகளை ஈட்டுவோர் எந்நேரமும் அப் பூணூலை அணிந்துகொண்டு தம்மை உயர்ந்த சாதியாராக எண்ணி இறுமாந்து ஐயகோ! மேன்மேற் றீவினைகளைப் பெருக்கி வருகின்றனரே! அது கிடக்க.

## உ. பழைய உபநிடதங்கள் இதிகாசங்களில் சாதி இல்லை

இனி, ஈசகேன கடம் முதலான பழைய பன்னீருபநிடதங்களிற் பல தோன்றிய காலத்தும் நால்வகைச் சாதி வகுப்பு மிகுதியாய்க் காணப்படாமல், பிராமணர் ராஜந்யர் என்னும் இரண்டு பிரிவுமட்டுமே அடுத்தடுத்துக் காணப்படுகின்றது. இவ்விரண்டு பிரிவும் அவ்வவர் தொழில்பற்றி வந்தனவே யல்லாமல், அவர் தமக்குள் எவ்வகையான வேறுபாடேனும் இருந்தமைபற்றி வந்தன அல்ல. வேள்விவேட்டலும் நூல் ஓதுதலுமாகிய தொழில்களைச் செய்பவர் பிராமணர் என்றும், போர்புரிதலும் நாடு காத்தலுமாகிய தொழில்களைச் செய்பவர் ராஜந்யர் அல்லது சத்திரியர் என்றும் வகுக்கப்பட்டனர். இங்ஙனம் வகுக்கப்பட்டாலும் அவர்கள் அவ்வத் தொழில்களையே செய்யவேண்டுமென்னும் கட்டுப்பாடு சிறிதும் இருந்ததில்லை. துரோணரும் அவர் ஆசிரியர் அக்கினிவேசரும் அவர் புதல்வர் அசுவத்தாமரும் அவர் மைத்துனர் கிருபரும் போன்ற பிராமணர் போர்த்தொழில் பயின்றமையும், பிரியமேதர் சினி கார்க்கியர் திரையாருணி முதலான சத்திரியர் நூல்கள் ஓதிப் பிராமணரானமையும் (விஷ்ணுபுராணம், ௪, கக, கூ, க0) மேற்கூறியதனை நாட்டுதற்குப் போதுமான சான்றும். இவைமட்டும் அல்ல. இவ்விருவகுப்பாரும் ஏதும் வேறுபாடின்றி ஒன்றுசேர்ந்து உணவருந்தியும், பெண் கொண்டு கொடுத்தும் ஒருமையாய் வாழ்ந்து வந்தார்கள். சர்யாத அரசன் புதல்வி சுகன்யையைச் சியவநர் மணந்தமை சதபதபிராமணத்திற் சொல்லப்பட்டது; ரதவீதி அரசன் புதல்வியைச் சியாவாசுவர் மணந்தமை இருக்குவேதத்தில் (ரு, சுக) சொல்லப்பட்டது.

விதர்ப்பன் என்னும் சத்திரியன் புதல்வியை அகத்தியர் மணந்துகொண்டார்; உலோமபாதன் புதல்வியை இருசிய சிருங்கர் மணந்துகொண்டார் (மாபாரதம்); இங்ஙனமே ராஜந்யர் புதல்விகளைப் பிராமணர் மணந்துகொண்ட வரலாறுகள் இன்னும் எண்ணிறந்தன இருக்கின்றன. இனிப் பிராமணர் புதல்விகளை மற்றை வகுப்பாரான ராஜந்யர் மணந்துகொண்ட வரலாறுகளும் பல இருக்கின்றன. சுக்கிராசாரியார் என்னும் பிராமணர் தேவயானீ என்னும் தம் புதல்வியை யயாதி என்னும் அரசனுக்குக் கொடுத்தார்; மற்றொரு பெண்ணை அனூகனுக்குக் கொடுத்தார் (மாபாரதம்). இழிகுடிப்பிறந்த அக்ஷமாலை என்னும் பெண்ணை வசிட்டரும் சாரங்கியை மந்தபாலரும் கூடினமை மனுமிருதி (கூ, உஉ) இற் சொல்லப்பட்டது.

இங்ஙனமே ஞானோபதேசங்களும் வேற்றுமையின்றிச் செய்யப்பட்டு வந்திருக்கின்றன. விதேகமன்னனாகிய ஜனகன் சுவேதகேது அருணேயர், சோமசுஷ்மசாத்ய யஞ்ஞி, யாஞ்ஞவல்கியர் முதலான பார்ப்பன முனிவர் பலர்க்கு ஞானோபதேசஞ் செய்தனன் என்று சதபத பிராமணம் (கo, சா, உ, க) புகல்கின்றது; காசிமன்னனாகிய அஜாதசத்துரு என்னும் அரசனால் பாலாகி என்னும் பிராமணருக்கு ஞானோபதேசஞ் செய்யப்பட்ட வரலாறு பழைய கௌஷீதகீபிராமண உபநிடதத்திற் (ச, க) காணப் படுகின்றது. பாஞ்சால மன்னனாகிய பிரவாகநஜைவலி என்பான் சுவேதகேது அருணேயர்க்கு மெய்ப்பொருள் அறிவுறுத்தினமை, சதபதபிராமணம் (கச, கூ, க, க), பிருகதாரணியக உபநிடதம் (சா, உ, க), சாந்தோக்கிய உபநிடதம் (ரு, ங, க) முதலியவற்றில் நன்கெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. இவ்வுண்மைகளால் இருக்குவேதத்திற்குப் பிற் பழைய உபநிடதங்கள் எழுந்த காலத்திலும் பிராமணர்

சத்திரியர் என்னும் இரண்டு வகுப்பே இருந்தனவென்பதும், அவ்விரண்டு வகுப்புந் தொழில்பற்றி உண்டாயினவே யல்லாமற் பிற்காலத்திற்போலப் பிறப்பளவால் உண்டாயினவல்ல வென்பதும், அவ்விரு வகுப்பாரும் தமக்குள் ஏதும் வேற்றுமையின்றி உண்ணல் கலத்தல்களால் ஒருமித்து வாழ்ந்தனர் என்பதும் இனிது விளங்கும்.

இனிப் புராணங்கள் இதிகாசங்கள் பிற்பட்ட உபநிடதங்கள் தோன்றிய காலத்திலேதான் பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் நான்கு வகுப்புகள் பிரிந்தன. இந் நால்வகைச் சாதியாரும் ஒரே தந்தைக்குப் பிள்ளைகளாய்ப் பிறந்து நால்வேறு தொழிலால் நால்வகைப் பட்டார்களே யல்லாமல் அவர்களுள்ளும் உண்ணல் கலத்தல்களில் ஏதும் வேற்றுமை ஏற்பட்டதில்லை. சூத்திரன் சமையல் செய்த உணவைப் பார்ப்பனன் அருந்தும் முறை[1] பழைய கற்பசூத்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. வாயுபுராணத்தும்[2] பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கின்றது: "கிருதயுகத்தின்கண் சாதிகள் ஏதுமே இல்லை அதன் பின்னர் நான்முகன் அவ்வவர் தொழில்களுக்கு ஏற்ப மக்களுள் நான்கு வகுப்புகள் ஏற்படுத்தினான் பிறரை ஆளுதற்கேற்ற ஆண்மைச்செய லுடையவர்களைப் பிறரைக் காக்கும் பொருட்டுச் சத்திரியரென்று நியமித்தான். தந்நயம் பாராட்டாமற் பிறர்நலங் கருதி உண்மையே பேசி வேதத்தைச் செவ்வையாக ஓதினவரைப் பிராமணர் என வைத்தான். முன்னே வலியற்றவர்களாய் நிலத்தை உழுவதிலும் கைத்தொழில் புரிவதிலுந் தலையிட்டு உழைப்பால் உயிர்வாழ்க்கைக்கு வேண்டுவனவற்றை எடுத்துத் தந்தவர்களை வைசியர் என வைத்தான். துப்புரவு செய்பவர்

1. ஆபஸ்தம்ப தர்மசூத்திரம், உ, உ, ந, ச-அ.
2. வாயுபுராணம், அ, கசக-கசஞ.

களாய் ஏவிய தொழில்மட்டுஞ் செய்யும் வலியற்றவர்களைச் சூத்திரர் என்று வைத்தான்.'' இவ் வாயுபுராண உரையுள்ளும் சாதியானது தொழில்பற்றி வந்ததென்று சொல்லப்பட்டிருக்கின்றதே யல்லாமற், பிறப்பினால் வந்ததென்று சிறிதும் சொல்லப்படவில்லை. இனி, இந் நால்வகைச் சாதியாருள்ளும் எவர் உயர்ந்தோர் எவர் தாழ்ந்தோர் என்று வினவுங்கால், ஒழுக்கத்தால் மிக்கவரே உயர்ந்த சாதியாரெனவும், ஒழுக்கமில்லாதவரே தாழ்ந்த சாதியாரெனவும், மகாபாரதம் சாந்திபருவத்தின்கண் (௬௯௩௫) உறுதிப்படுத்துரைக்கப்பட்டிருக்கின்றது. அப்பகுதி வருமாறு:

"பாரத்துவாச முனிவர் பிருகு முனிவரை வினவுகின்றார்:

"நால்வகைச் சாதிவேற்றுமைக்கும் நிறந்தான் ஏதுவாகுமென்று சொன்னால் எல்லாச் சாதியுள்ளும் நிறங்கள் பலதிறப்பட்டுத் தோன்றுகின்றன.

"விருப்பும் வெகுளியும் அச்சமும் பேராவாவும் கலக்கமும் கவலையும் பசியும் களைப்பும் நம்மெல்லாரிடத்தும் மிகுந்து தோன்றுகின்றன; இங்ஙனமாயின் சாதிப்பகுப்பு எவ்வாறு பொருந்தும்?

"வியர்வையும் சிறுநீரும் மலமும் சளியும் பித்தமும் இரத்தமும் எல்லார்க்கும் பொதுவாய் உள்ளன; எல்லாருடைய உடம்புகளும் அழிந்துபடுகின்றன; இங்ஙனமாயின் எதனைக்கொண்டு சாதி வகுக்கப்படும்?

"அசையும் பொருளும் அசையாப் பொருளுமாகிய வகைகளும் எண்ணிறந்தனவா யிருக்கின்றன; இப் பகுப்புகள் பலவற்றுள்ளும் சாதிவகுப்புச் செய்தல் எங்ஙனம்?

"இவற்றிற்குப் பிருகு மறுமொழி கூறுகின்றார்:

"சாதிவேற்றுமை என்பது ஒன்றில்லை. உலகமுழுதும் நான்முகனுற் படைக்கப்பட்டமையால் தொடக்கத்தில் எங்கும் பிராமணர் மட்டுமே இருந்தனர். தொழில்களினுலேயே சாதிகள் உண்டாயின.

"ஐம்பொறி யின்பநுகர்ச்சியில் விழைவுள்ளவர்களும், கொடுமையும் எரிச்சலும் நிறைந்தவர்களும், தாம் வேண்டும் பொருள்களைப் பெறுவதில் ஊக்கம் வாய்ந்தவர்களும், தாம் செய்தற்குரிய கடமைகளை விட்டவர்களும், செந்நிறம் வாய்ந்தவர்களும் ஆய் இருபிறப்பாளரான பிராமணர் சத்திரியருடைய நிலைமையை அடைந்தார்கள்.

"ஆடு மாடு மேய்க்குந் தொழிலை மேற்கொண்டவர்களும், மஞ்சள் நிறம் வாய்ந்தவர்களும், உழவுதொழிலாற் பிழைப்பவர்களும், தம்முடைய கடமைகளில் நில்லாதவர்களும் ஆய் இருபிறப்பாளரான பிராமணர் வைசியருடைய நிலையை அடைந்தார்கள்.

"குறும்பு செய்வதிலும் பொய் கூறுவதிலும் விருப்பமுள்ளவர்களும், பேரவாப் பிடியுண்டவர்களும், எல்லா வகையான தொழில்களையும் செய்து அவற்றாற் பிழைப்பவர்களும், கரியநிறம் வாய்ந்தவர்களும், தூய்மை துப்புரவு இல்லாதவர்களும் ஆய் இருபிறப்பாளரான பிராமணர் சூத்திரருடைய நிலைமையை அடைந்தார்கள்.

"இத்தகைய தொழில்களாற் பிரிக்கப்பட்டு இருபிறப்பாளரே சாதிகளாக வகுக்கப்பட்டனர். அறமும் வேள்விச் சடங்குகளும் இவர்களில் எவர்க்கும் எப்போதும் விலக்கப்பட்டனவல்ல."

ஐந்தாம் வேதமாகிய பாரதத்திலே பாரத்துவாசரும் பிருகுவும் உரையாடியதாகப் பெறப்பட்ட இந்தப் பகுதி

யினுற் சாதிவகுப்பு ஒழுக்கத்தினுல் வகுக்கப்பட்டதே யல்லாமற் பிறப்பினுல் அன்றென்பது இனிது விளக்கப்பட்டிருக்கின்றது.

அக் காலங்களில், உண்மை பேசுதலே மிகச் சிறந்த ஒழுக்கமாகவும், அதனையுடையோரே பிராமணராகவுங் கருதப்பட்டனர். பிறப்பினுல் இழிந்தவராயிருப்பினும், அவர் உண்மைபேசுதலிற் பிறழாதவராயின் அவரே பார்ப்பனராகப் பாராட்டப்படுவாராயினர். இது சாந்தோக்கிய உபநிடதத்திற் (௪, ௪, ௧-௫) போந்த சத்தியகாமஜாபாலன் கதையினுல் நன்கு விளங்கும்; அது வருமாறு:

"ஜபாலா என்பவளின் மகனுகிய சத்தியகாமன் என்பான் தன் அன்னையை நோக்கி, 'அம்மா, நான் பிரமசரிய ஒழுக்கத்தை மேற்கொள்ள விரும்புகின்றேன். நான் எந்தக் குடும்பத்திற் குரியவன்?' என்று வினவினுன்.

"அதற்கு அவள்: 'குழந்தாய், நீ எந்தக் குடும்பத்திற்கு உரியை என்பதை யான் அறியேன். என் இளமைக் காலத்தில் யான் ஓர் ஊழியக்காரியாய் அங்குமிங்குமாய் இருக்கையில் நின்னைக் கருக்கொண்டேன். ஆதலால், நீ எந்தக் குடும்பத்திற்கு உரியையென்பதை யான் அறியேன். என் பெயர் ஜபாலா; உன் பெயரோ சத்தியகாமன். ஆகவே, நின்னைச் சத்தியகாமஜாபாலன் என்று தெரிவித்துக்கொள்' எனக் கூறினுள்.

"அதன்பின் அவன் ஹாரித்ருமத கௌதமரிடம் போய், 'ஐய, நான் ஒரு பிரமசாரியத்தவனுய்த் தங்களிடம் இருக்க விரும்புகின்றேன். அதனுலேதான் ஐய, யான் தங்கள்பால் வந்தேன்' என்றுன்:

"அவர் அவனைநோக்கி, 'ஓ நண்பனே, நீ எந்தக் குடும்பத்திற்கு உரியை?' என வினவினுர். அதற்கு அவன்,

ஐயா, யான் எந்தக் குடிக்கு உரியேன் என்பதை அறியேன். யான் என் அன்னையைக் கேட்டபோது அவள், 'எனது இளமைக்காலத்தில் யான் ஓர் ஊழியக்காரியாய் அங்குமிங்குமாய் இருக்கையில் நின்னைக் கருக்கொண்டேன். அதனால் நீ எக்குடிக்கு உரியை என்பதை யான் அறியேன். என்பெயர் ஜபாலா, நின்பெயரோ சத்தியகாமன்' என மறுமொழி தந்தாள். ஆகையால், ஐய, யான் சத்திய காமஜாபாலன் எனப்படுவேன் என்றான்.

"அதன்பின் அவர் அவனைநோக்கிப், 'பிராமணன் அல்லாதவன் இங்ஙனம் உண்மைபேசுந் தகுதியுடையவன் ஆகான். குழந்தாய், ஓமவிறகு கொண்டுவா, நீ உண்மை பேசுதலிற் பிறழாமையால், யான் நினக்கு மெய்ப்பொருளை அறிவுறுத்துவேன்' என்றார்."

பழைய விழுமிய அறிவுநூலாகிய சாந்தோக்கிய உபநிடதத்திற் போந்த இவ்வரிய கதையைக்கொண்டு, பிறப்பினால் எத்தகையவராயிருப்பினும் உண்மை கூறுதலில் வழுவாதவரே பார்ப்பனராய் உயர்குடிப் பிறப்பினராய்ப் பாராட்டப் பட்டதனை அறிகின்றனம் அல்லமோ?

இன்னும், உயர்ந்த சாதியான் எவன் என்று ஆராய்ந்து முடிவு கட்டிய வஜ்ரசூசி உபநிடத உரை பெரிதுங் கருத்திற் பதிக்கற்பாலதொன்றாய் இருத்தலின் அதனையும் இங்கே மொழிபெயர்த்துக் காட்டுவாம்:

"அறியாமையைப் போழ்வதும், அறிவிலாரை இழித்துத் தெய்வவுணர்ச்சி யுடையோரை உயர்த்துவதும் ஆகிய வஜ்ரசூசி என்னுங் கருவி ஈதெனத் தெரித்துரைக்க இப்போது புகுகின்றேன்.

"பிராமணரும் சத்திரியரும் வைசியரும் சூத்திரரும் என நால்வகைச் சாதியினர் உளர். அவர்களுட் பிராமணரே

பழைய உபநிடதங்கள் இதிகாசங்களில் சாதி இல்லை உள

மிகச் சிறந்தோராவரென்று வேதவுரைகளுக்குப் பொருத்த மாகவே ஸ்மிருதிகளும் புகலுகின்றன.

"ஆதலால் இஃது ஆராயற்பாலதா யிருக்கின்றது. பிராமணன் என்னுஞ் சொல்லால் குறிக்கப்படுவது யாது? அஃது ஓர் உயிரா? அல்லது அஃது ஓர் உடம்பா? அஃது ஒரு வகுப்பா? அல்லது அஃது ஒரு ஞானமா? (அறிவா?). அன்றி அஃது ஒரு கர்மமா? (வினையா?) அல்லது அஃது ஒரு தருமத்தை (அறத்தைப்) புரிவோனா?

"முதலிற், பிராமணன் என்பது உயிரா? அன்று. கழிந்துபோன பல உடம்புகளிலும், இனி வரக்கடவ பல உடம்புகளிலும் புகுந்தும் புகுவதாயும் வருவது ஓர் உயிரே யாகலானும், வினைக்கீடாகக் கிடைத்த பலதிற உடம்புகளி லிருந்து வரும் உயிர் ஒன்றேயாகலானும் உயிர் பிராமணன் ஆகமாட்டாது.

"அற்றேற், பிராமணன் என்பது உடம்பா? அன்று. ஐவகைப் பொருள்களால் ஆக்கப்பட்ட உடம்பானது சண்டாளன் ஈறாக எல்லா மாந்தர்க்கும் ஒரே தன்மைத்தாய் இருத்தலானும், முதுமையும் இறப்பும் அறமும் (தர்மமும்) மறமும் (பாவமும்) அவர்களெல்லார்மாட்டும் பொதுமை யில் நிகழ்தலானும், பார்ப்பன ரெல்லாரும் வெண்ணிறத் தினராயும் அரசரெல்லாரும் செந்நிறத்தினராயும் வணிக ரெல்லாரும் மஞ்சள் நிறத்தினராயும் அடியோரெல்லாரும் கருநிறத்தினராயுமே இருப்பரென வரையறுத்த வேறுபாடு யாண்டும் இல்லாமையானும, தன் றந்தை முதலாயினோர் பிணத்தைச் சுடுகையில் ஒரு பார்ப்பனனைக் கொன்ற பழி புதல்வர் முதலாயினோர்க்குச் சேருமாதலானும் உடம்பு பிராமணன் ஆகமாட்டாது.

"இனிப், பிராமணன் என்பது ஒரு வகுப்பா? அன்று. மகருஷிகள் (பெரிய முனிவரர்) பலர் படைப்பின்கண் உள்ள மற்றை வகையினரிலிருந்துஞ் சாதியினரிலிருந்துந் தோன்றினர். ருஷ்யசிருங்கர் ஒரு மான்வயிற்றிற் பிறந்தார்; கௌசிகர் குசைப்புல்லிற் பிறந்தார்; ஜாம்புகர் ஒரு நரிவயிற்றிற் பிறந்தார்; வால்மீகி ஒரு புற்றிலிருந்து உண்டானார்; வியாசர் ஒரு செம்படவன் மகள்வயிற்றிற் பிறந்தார்; கௌதமர் ஒருமுயலின் பிட்டத்திலிருந்து உண்டானார்; வசிட்டர் ஊர்வசி என்னுந் தாசிவயிற்றிற் பிறந்தார்; அகத்தியர் ஒரு கும்பத்தில் (குடத்தில்) உண்டானார்; இவ்வாறு யாங்கள் சொல்லக்கேட்டோம். இவர்களுட் சாதிக்குப் புறம்பானோருங்கூடப், பிரமஞானத்தைக் (கடவுளுணர்ச்சியை) அறிவுறுக்கும் ஆசிரியரில் முதற்கண் நின்றார்கள்; ஆதலால், ஒரு வகுப்பும் பிராமணனாக மாட்டாது.

"அற்றேற், பிராமணனென்பது ஞானமா? (அறிவா?). அன்று. கடவுளுண்மையினை அறிவதில் நிரம்பத் தேர்ச்சி பெற்ற சத்திரியரும் மற்றையோரும் பலர் உளராகலின், ஞானம் பிராமணன் ஆகமாட்டாது.

"அங்ஙனமாயிற், கர்மம் (வினை) பிராமணனா? அன்று. பிராரப்தம் (கழிந்தவினை), சஞ்சிதம் (எச்சவினை), ஆகாமியம் (ஏறும்வினை) என்னுங் கர்மங்கள் எல்லா உயிர்களுக்கும் ஒரே தன்மையவாய் இருத்தலானும், கர்மத்தினால் ஏவப்பட்டே எல்லா மாந்தர்களும் தத்தம் வினைகளைச் செய்தலானும் கர்மம் பிராமணனாகமாட்டாது.

"அற்றேல், அறத்தைத் (தர்மத்தைச்) செய்பவன் பிராமணனா? அல்லன். பொன்னை வழங்கினோர் சத்திரியோரிலும் மற்றையோரிலும் பலர் உளராகலின், அறத்தைச் செய்வோன் பிராமணன் ஆகான்.

“ அவ்வாறாயின் உண்மையிற் பிராமணன் என்போன் யாவன்? அவன் எவனுய் இருப்பினும், தன் உயிர்க்கு உயிராயிருக்கும் இறைவனை உணர்ந்தோனே, தன்னோடு ஒத்த இரண்டாவ தொருபொருள் இல்லாததாய்ச் சாதியுஞ் செயல்களும் அற்றதாய் அறுவகை மாறுதல்களும் அறு வகைக் கறைகளாகிய குற்றங்களும் நீங்கியதாய் உண்மையும் அறிவும் இன்பமும் என்றுமுள்ள தன்மையும் உடையதாய்த் தன்னில் ஏதொரு மாறுதலும் இல்லதாய் எல்லாக் கற்பங் களுக்கும் அடிப்படையாய் எல்லாப்பொருள்களையும் ஊடுருவிக்கொண்டு இருப்பதாய் வான்வெளிபோல் எல்லாப் பொருள்களின் உள்ளும்புறம்பும் நிறைந்து நிற்பதாய்ப் பகுக்கப்படாத இன்ப உருவினதாய் வழியளவையின் வைத்து அறியப்படாததாய் உயிரினுல் நேரே உணரப்படு வதாய்த் தன்னுள் விளங்கும் பரமான்மாவை (முழுமுதற் பொருளை)க் தன் உள்ளங்கையின் நெல்லிக்கனிபோல் நேராக உணர்ந்தோனே, தான் விழைந்ததைப் பெற்றமை யால் உலகத்துப் பொருள்களையும் இன்பங்களையும் விழையுங் குற்றங்கள் அற்றோனே, இருவினையொப்பு முதலான உயர்ந்த தன்மைகள் வாய்ந்தோனே, மன அசைவு பொறாமை உலகத்துப் பொருள்களில் அவா விருப்பு மயக்கங்களில் நீங்கினோனே, தற்பெருமையாலும் தற்செருக்காலும் தீண்டப்பெறாத உள்ளத்தோனே, மொத்தமாய் இவ்வெல்லா இயல்புகளும் அவற்றை யடைதற்குரிய வழிகளும் ஒருங்கு உடையோனே பிராமணன் ஆவன்.

“வேதங்கள், மிருதிகள், இதிகாசங்கள், புராணங் களின் கருத்து இப்படித்தான் இருக்கின்றது. இவ்வா றன்றி ஒருவன் பிராமணனது நிலையை அடைதல் முடியாது. ஒருவன் தன்னுள்ளிருக்கும் பரமான்மாவைச் சச்சிதானந்த (உண்மையறிவின்ப) உருவிற்ருக இரண்டற்ற பிரமமாக

வைத்து நினைத்தல்வேண்டும். ஆம், தன்னுள்ளிருக்கும் பரமான்மாவைச் சச்சிதானந்த பிரமமாக வைத்தே நினைத் தல்வேண்டும். இத்தகையதுதான் இவ் வுபநிடதம்"

சாமவேதத்தின் பாலதாகிய இவ் வஜ்ரசூசிஉபநிடத மானது பிறப்பளவினால் எவனும் உயர்ந்த சாதியான் ஆக மாட்டான் எனவும், புனிதத்தன்மையும் முழுமுதற் கடவுளை யுணர்ந்து அதனை வழிபடும் விழுமிய ஒழுக்கமு மாகிய செயற்கை வகையினாலேயே எக்குடிப் பிறந்தவனு மிருப்பினும் அவன் உயர்ந்த சாதியான் ஆகின்றான் எனவும் ஆராய்ந்து வரையறுத்து எல்லா நூல்களின் கருத்தும் அதுவேயென முடிந்த முடிபை வலியுறுத்திச் சொல்லு தலின் பிறப்பளவிற் சாதியுயர்வு கொள்ளுதல் வேதம் முதலாகிய எந்நூலுக்கும் உடன்பாடு அன்றென்பது நன்குபெறும்.

## ௩. மிருதிகளிற் சாதிப்பிரிவும் ஒழுக்கமும் பற்றியதே

இனி, ஆபஸ்தம்பர், கௌதமர், வசிஷ்டர், போதாயநர், மநு முதலாயினோர் தருமசாத்திரங்களும் மிருதிநூல்களும் ஆக்கிய காலந்தொட்டே நால்வேறு சாதிவகுப்பும், அவ் அவர்க்குரிய தொழில்களும் வரையறுத்து உரைக்கப் பட்டன. அவ்வாறு அவை வகுத்து உரைக்கப்பட்ட விடத்தும் உயர்ந்த தொழில்களைச் செய்வோரே உயர்ந்த சாதியாராகவும், இழிந்த தொழில்களாக அவர்களாற் கருதப்பட்டவைகளைச் செய்வோரே இழிந்த சாதியாராகவும் வைக்கப்பட்டன ரல்லாமற், பிறப்பளவிற் சாதிவேற்றுமை மேற்கூறிய தருமசூத்திரங்கள் மிருதிநூல்களுள் யாண்டுஞ் சொல்லப்படவில்லை. உயர்ந்த ஒழுக்கங்களைக் கடைப் பிடித்துச் செய்தற் குரியோர், அவற்றினின்றும் வழுவுவ ராயின் அவர் இழிந்த சாதியினராகவே அவற்றுள் ஐயந்திரிபுக்கு இடனின்றிச் சொல்லப்பட் டிருக்கின்றனர். வாசிஷ்ட தரும சூத்திரம்,

"பிராமணனாவது சத்திரியனாவது கற்கள், உப்பு, சணல், பட்டு, சணற்றுணி, தோல் முதலியவைகளை விற்றல் ஆகாது; சாயம் ஏற்றிய புடைவைகளும் விற்றல் கூடாது; சமையற்செய்த வுணவும், பூக்கள் பழங்கள் கிழங்குகள் மணப்பண்டங்கள் உணவுக்கு நறுமணச்சுவை ஏற்றும் பொருள்கள் முதலியனவும், தண்ணீர் பூண்டுகளி லிருந்து இறக்கிய சாறு முதலியனவும் விற்றல் கூடாது; சோமப் பூண்டு படைக்கலங்கள் நச்சுப்பண்டங்களும் விற்றல் ஆகாது; இறைச்சியாவது பாலாவது அவற்றால் அமைக்கப் பட்ட உணவாவது, தகரம் செம்மெழுகு ஈயம் முதலியன

வாவது விற்றல் கூடாது" (உ, உ௪-உஎ) எனவும், "வேதத்தை ஓதாதவரும் அதனைப் பிறர்க்குக் கற்பியாதவரும் அழல் ஓம்பாதவர்களும் ஆன பிராமணர்கள் சூத்திரரை ஒத்தவராகின்றனர்; வேத உணர்ச்சி யில்லாதவனைப் பிராமணன் என்று அழைத்தல் ஆகாது; வியாபாரஞ்செய்து பிழைப்பவனையும், நாடகம் ஆடுவோனையும், சூத்திரர்க்கு ஏவல் செய்வோனையும் கள்வனைப்போற் பிறர் பொருளைக் கவர்வோனையும், மருத்துவஞ்செய்து பிழைப்போனையும் அங்ஙனமே பிராமணன் என்று கூறுதல் ஆகாது; தமக்குரிய தூய கடமைகளைச் செய்யாமலும், வேதம் அறியாமலும் ஐயம் ஏற்றுப் பிழைக்கும் பார்ப்பனர்கள் இருக்கும் ஊரை அரசன் ஒறுத்தல் (தண்டித்தல்) வேண்டும்; ஏனெனில் அத்தகைய ஊர் கொள்ளைக்காரருக்கு உண்டிகொடுக்கின்றது. தம்முடைய புனிதக்கடன்களை நிறைவேற்றாமலும், வேதத்தை அறியாமலும், பிராமணன் என்னுஞ் சாதிப்பெயர் ஒன்றைமட்டுங் கொண்டு பிழைப்பைத் தேடும் பிராமணர் பல்லாயிரம்பேர் ஒருங்கு கூடினாலும், அவர்கள் அறங்கூறும் அவையத்தார் ஆகமாட்டார்கள்" (ங, க-ரு) எனவும் வற்புறுத்துரைக்கின்றது. இதற்கு இசையவே கௌதம தருமசூத்திரமும் (எ, அ-உக), மநுமிருதியும் (கஉ, கக௪) புகலாநிற்கின்றன.

நால்வகைச் சாதிகளும் அவற்றிற்குரிய கடமைகளும் வரையறுத்துப், பார்ப்பனரை வரைகடந்து உயர்த்தி, ஏனை மூவரையும் அவருட் கடைப்பட்ட சூத்திரரையும் இழித்துப், பெருந் தொகையினரான இந்துமக்களை இழிந்த சூத்திர வகுப்பிற் சேர்த்து, அவர்களைக் கல்வியிலும் நாகரிகத்திலும் தலையெடுக்க வொட்டாமல் நசுக்கிப், பன்றி நாய் கழுதை முதலான விலங்கினங்களினும் அவர்களைத் தாழ்த்தி, நினைப்பினும் நெஞ்சம் நடுங்குங் கொடுந் தண்டனைகளை

(ஒறுத்தல்களை)ச் சிறிதும் இரக்கமும் ஈரநெஞ்சமும் இன்றி அச் சூத்திரர்க்கு மட்டுமே ஏற்படுத்திச், சாதிப்பிரிவுகளுக்கு அழுத்தமான அடிப்படை கோலிய தருமசூத்திரங்கள் மிருதிகளுங்கூடப் பிறப்பளவில் ஒருவனைப் பிராமணனாகக் கூறுதற்கு ஒருப்படாதிருக்கத், தாம் அந்தண அரச வணிக வகுப்புகளுக்கு உரியவர்களாயிருந்தும் அவ் வுண்மையை அறிந்துகொள்ளுதற்கு ஏற்ற கல்வியறிவும் ஆராய்ச்சியுணர்வும் இன்றிக், கிறிஸ்துவர் 'அஞ்ஞானி' என்றழைத்தால் அதன் இழிந்தபொருளை யறியாமல் அதனைத் தனக்குரிய உயர்ந்த பட்டப்பெயராகக் கருதித் தன்னைத்தானே 'அஞ்ஞானி' என்று சொல்லிக்கொள்ளும் புலையனைப்போலத், தம்மைப் பார்ப்பனர் 'சூத்திரர்' என்றழைத்தால் அச் சொல்லின் இழிந்தபொருளை யறியாமல் தாமுந் தம்மைச் 'சூத்திரர்' எனவுஞ், 'சற்சூத்திரர்' எனவுஞ் சொல்லிக்கொள்ளும் போலிச்சைவர்கள்மட்டும் பிறப்பளவில் உயர்ந்தவர் ஆதல் யாங்ஙனம்? நால்வகை மக்கட்பிரிவினரில் மிக உயர்ந்தோராகக் கருதப்பட்ட பார்ப்பனருக்கே பிறப்பளவில் உயர்ச்சி கைகூடாதாயின், அந் நால்வகையினரிலுங் கடைப்பட்ட சூத்திர வகுப்பினராகத் தம்மைத்தாமே ஒப்புக்கொண்ட போலிச் சைவர்கள் மட்டும் பிறப்பளவில் உயர்ந்தவராதல் யாங்ஙனம்? மனுமிருதி எட்டாம் அத்தியாயத்தில் (சகரு-சகசு),

"ஒரு சூத்திரன் விலைக்கு வாங்கப்பட்டாலும் விலைக்கு வாங்கப்படாவிட்டாலும், அவனை அடிமைவேலை செய்யும்படி ஒரு பார்ப்பனன் கட்டாயப்படுத்தலாம்; ஏனென்றால், அவன் பார்ப்பனனுக்கு அடிமையாயிருக்கும்படி கடவுளாற் படைக்கப்பட்டான்.

"தன் தலைவனால் விடுவிக்கப்படினும் ஒரு சூத்திரன் தன் அடிமைத் தன்மையினின்றும் விடுவிக்கப்பட்டவன்

அல்லன்; அஃது அவனுக்கு இயற்கையாய் இருப்பதனால், அவனை அதனினின்றும் யார்தாம் விடுவிக்கக்கூடும்?

"சண்டையில் வென்று சிறையாகப் பிடித்துக் கொணரப்பட்டவன், தன் அற்றைச் சோற்றுக்காக ஊழியஞ்செய்பவன், தன் வீட்டில் தன் வேசிக்குப்பிறந்தவன், விலைக்கு வாங்கப்பட்டவன், பிறாற் கொடுக்கப்பட்டவன், தன் முன்னோர் காலந்தொட்டுத் தனக்கு அடிமைப் பொருளாய் வருபவன், குற்றத்திற்காக அடிமைப்படுத்தப்பட்டவன் எனச் சூத்திரர் எழுவகைப்படுவர்." என்று சூத்திரர் இன்னாரென்பது தெளிவாகக் காட்டப்பட்டிருக்கின்றது. தம்மைச் சூத்திரர் என்று வெளிப்படையாகச் சொல்லிக்கொள்ளும் போலிச் சைவர்கள், மேலே மநு சொல்லிய எழுவகைச் சூத்திரரில் எந்த வகையிற் சேர்ந்தவர்களோ அதனை அவர்களே எடுத்துச் சொல்லக்கடவர். அவ்வேழுவகையில் அவர்கள் எதிற் சேர்ந்தவராயிருந்தாலும் இருக்கட்டும்; அவர்கள் தம்மைச் சூத்திரர் என்று தாமே ஒப்புக்கொண்ட மட்டில் அவர்கள் பார்ப்பனர் வீட்டுக் கடைவாயிலிற் காத்திருந்து அடிமை வேலை செய்யும் ஊழியக்காரரே யாவரல்லாமல், உயர்ந்த சாதியாராதல் யாங்ஙனம்?

அற்றன்று, 'யாங்கள் கொலைபுலை தவிர்ந்து சிவவழிபாடு இயற்றி உழவும் வாணிகமும் நடாத்திச் செல்வவாழ்க்கை யுடையேமாய் இருத்தலின் எம்மை மற்றைச் சூத்திர வகுப்பார் எல்லாரோடும் சேர்த்தல் ஆகாது, யாம் சூத்திரரிற் சிறந்த சற்சூத்திரரே ஆவேம்' எனின்; மேலெடுத்துக் காட்டிய மனு முதலான பழைய மிருதிநூல்களிற் சூத்திரரில் ஒருவகையே சொல்லப்பட்டிருக்கின்றதல்லாமற், சற்சூத்திரர் என்னும் மற்றொருவகை அவற்றுள் யாண்டும்

மிருதிகளிற் சாதிப்பிரிவும் ஒழுக்கம் பற்றியதே கூறு

சொல்லப்படவில்லை; சூத்திரர் என்போர் பார்ப்பனர் அரசர் வணிகர் என்னும் ஏனை மூன்று வகுப்பினர்க்கும் அடிமைகளாய் ஊழியம் ஒன்றே செய்தற்குரிய ரல்லாமல், உழவு வாணிகம் நடாத்திச் செல்வந் தொகுக்கவாவது, கல்விகற்கவாவது, சிவவழிபாடு இயற்றவாவது உரிமைவாய்ந்தவர்கள் அல்லர். ஆதலாற் 'சற்சூத்திரர்' என்னுஞ் சொல்வழக்குப் பழைய வடமொழி மிருதி நூல்களுக்கு முற்றும் மாறுவதொன்றா மென்று உணர்ந்துகொள்க.

அற்றேற், 'சற்சூத்திரர்' என்னும் பெயரும் அவர்க்குரிய கடமைகளும் சிவாகமங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றனவே யெனின்; 'சிவாகமங்கள்' என்னும்பெயரால் இப்போது நடைபெறும் சில வடமொழி நூல்கள், கோயிலில் வழிபாடு ஆற்றும் முறைகளையுங் கோயில் அமைக்கும் வகைகளையுந் தெரித்தற்பொருட்டு இருநூறு மூந்நூறு ஆண்டுகளாகக் கோயிற் குருக்கண்மார்களால் எழுதிவைக்கப்பட்டன வாகும். கோயில் வழிபாடுகளும் கோயிற்குருக்கண்மார் பிழைப்பும் செல்வர்களாயுள்ள சைவவேளாளர்களின் பொருளுதவியைக்கொண்டே நடைபெற வேண்டியிருத்தலின், அவர்களைச் சூத்திரவகுப்பாரெல்லாரோடும் பொதுவாகச் சேர்த்துக் கூறுதற்கு அஞ்சியே, அந்நூல்களை எழுதிய அக் குருக்கண்மார்கள் அவர்களைச் சிறிது உயர்த்திவைத்தற்காகச் 'சற்சூத்திரர்' என்னுஞ் சொல்லைப் புதிதாகப் படைத்து அவற்றுள் நுழைப்பாராயினர். சிவபிரான் றிருக்கோயிற் குருக்கண்மார்கள் உண்மையிற் சைவவேளாள மரபினைச் சேர்ந்தவர்களாயிருந்தும், தம்மை அம்மரபிற் குரியவர்களாகச் சொல்லிக்கொள்வது இழிவென நினைந்து, வடக்கிருந்து வந்து குடியேறிய ஆரியப்பார்ப்பன இனத்தில் தம்மையும் மெல்லமெல்லச் சேர்த்துக்கொள்வான் விழைந்து, தம்மவ

ரான சைவவேளாளரைச் சூத்திரரெனவுந் தம்மைப்
பிராமணர் எனவும் வேறுபகுத்து, அங்ஙனம் பகுப்பினும்
தமது பிழைப்புக்குப் பலவகையில் உதவியாளராய் நிற்கும்
சைவவேளாளரை ஆரியப்பார்ப்பனர் செய்தவாறுபோல்
தாமும் முழுச் சூத்திரவகுப்பிற் சேர்த்துவிடுதற்கு இய
லாமல், அவர்களைச் சிறிது உயர்த்திச் 'சற்சூத்திரர்'
என்னும் ஒரு புதுப்பெயரைப் படைத்து அதனைத் தாம்
சிவாகமப்பெயரால் இயற்றிய அந்நூல்களில் எழுதிவைப்ப
ராயினர். 'சற்சூத்திரர்' என்னும் இப் பெயர்வழக்கு
எல்லாரும் ஒப்புக்கொண்ட பழைய வடநூல்களில் எங்கும்
காணப்படாமையின் இதனை ஆரியப்பார்ப்பனர் எவரும்
தழுவிக் கூறுகின்றிலர்; இன்னோரன்ன புதுவழக்குகள்
விரவிக்காணப்படும் இவ்வாகம நூல்களைப்பற்றிய குறிப்பு
பழைய வடநூல்களில் எங்குங் காணப்படாமையின்
வடநூல் ஆராய்ச்சியுடையார் எவரும் இவ் வாகமநூல்களை
எங்கும் மேற்கோளாகவும் எடுத்துக்காட்டுகின்றிலர்.
அற்றேல், வேதாந்த சூத்திரத்திற்குச் சைவபாடியம்
எழுதிய நீலகண்ட சிவாசாரியார் "யாம் வேத சிவாகமங்
களுக்கு வேற்றுமை காண்கின்றிலம்" எனத் தமதுரையுள்
உரைத்த தென்னையெனின்; அவராற் குறிப்பிடப்பட்ட
சிவாகமங்கள் என்பன வடமொழியிலுள்ள உபநிடதங்
களைப்போற் கடவுள் உயிர் மலம் (பதிபசுபாசம்) என்னும்
முத்திறப் பொருளியல்புகள் தெரித்து வீடுபேறு பயக்கும்
உணர்வினைத் தோற்றுவிக்கும் வடமொழி தென்மொழி
அறிவுநூல்களேயாம். தமிழ்மொழிக்கண் உள்ள திருமந்திர
அப் பெற்றித்தானதொரு விழுமிய சிவாகமநூலாகும். இ
திருமந்திரம்போன்ற சிவாகமநூல்கள் பல தமிழிலும் வட
மொழியிலும் அக் காலத்திருந்தமையின் அவை தம்மையே
நீலகண்ட சிவாசாரியார் தமது பாடியவுரையிற் குறிப்ப

மிருதிகளிற் சாதிப்பிரிவும் ஒழுக்கம் பற்றியதே கூள ராயினரென்க. பண்டைநாளிலிருந்த தமிழ் வடமொழிச் சிவாகமநூல்களைப்பற்றிய ஆராய்ச்சியினை எமது மாணிக்க வாசகர் வரலாறுங் காலமும் என்னும் நூலுள் விரித்துக் காட்டியிருக்கின்றேமாகலின் அதனை அங்கே கண்டு கொள்க; ஈண்டுரைப்பிற் பெருகும்.

இனி, இத் தென்றமிழ்நாட்டிலுள்ள சைவ வேளாளர்கள் உண்மையில் ஆரியப்பார்ப்பனர்க்கு மேலான வழக்க ஒழுக்கங்களுடைய உயர்ந்த சாதியாராயிருந்தும், தமக்கு உரிய அருள் ஒழுக்கத்தையும் கல்விப்பயிற்சியையும் ஆராய்ச்சியுணர்வினையும் அறவே கைவிட்டு, இங்கே பிழைக்க வந்த அவ் ஆரியப் பார்ப்பனர் கட்டிச்சொல்லிய பொய்க் கதைகளிற் சிக்குண்டு, தமக்குள்ள செல்வத்தையெல்லாம் அவர்கட்கும் அவர்கள் காட்டிய உலகப் பொய்ம்மாய இன்பங்கட்கும் அளவின்றிச் செலவிட்டுத், தமக்குப் பல வகையான பயன்படுங் கைத்தொழில்களைச் செய்து கொடுத்துத் தம்மைச் செல்வத்திற் புரளவைத்த பதினெண் தொழில்புரியும் அருமைத் தமிழ்மக்களையெல்லாந் தம்மினுந் தாழ்ந்த சாதியாராக இழிபுபடுத்தித், தம்மை அவரெல்லாரினும் உயர்ந்த சாதியாராகக் கருதி இறுமாந்து, அவ்வாரியப் பார்ப்பனரை மட்டுந் தம்மினும் மேலான சாதியாராகப் பிழைபட நினைந்து சைவ வேளாளர்கள் தம் முன்னோரது அருள் ஒழுக்கத்திற்கு முற்றும் மாறாக நடக்கப்புகுந்த காலந்தொட்டே இழிந்த சூத்திராயினார் கண்டீர்! தமக்கு உதவிசெய்யுந் தொழிலாளரைத் தாம் இழிந்த சாதியாராக நினைந்து தருக்கி அவர்கட்குப் பல கொடுமைகளைச் செய்தமையா லன்றோ சைவ வேளாளராகிய தாமும் ஆரியப் பார்ப்பனரால் இழிபுபடுத்தப்பட்டு இழிந்த சூத்திராயினார்!

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்."

என்னும் பொய்யாமொழி ஒருகாலும் பொய்படாதன்றோ!

பதினெண்வகைத் தொழில்களைச் செய்து தருவாரான கைக்கோளர், தச்சர், கொல்லர், கம்மாளர், தட்டார், கன்னார், செக்கார், மருத்துவர், குயவர், வண்ணார், துன்னர், ஓவியர், பாணர், கூத்தர், நாவிதர், சங்கறுப்பார், பாகர், பறையர் என்போர் தத்தந் தொழில்களைச் செவ்வனே செய்து தருதலாலன்றோ வேளாளரும் அரசரும் அந்தணரும் இனிதுயிர் வாழ்கின்றனர். உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத இக் கைத்தொழில்களைச் செய்து தந்து நாம் துன்பமின்றி இன்பமாய் நன்குவாழ உதவிபுரியும் அருந்தமிழ் மக்களாகிய உடன்பிறப்பினரையும் அவர் இயற்றும் அத்தொழில்களையும் இழிபுபடுத்தி நினைத்தலுங் கூறுதலுந் தெய்வத்திற்கு அடுக்குமா? இவர்கள் தாந்தாஞ் செய்யுந் தொழில்களைச் செய்யாது கைவிட்டு வறிதேயிருந்தால், தம்மைச் சைவ வேளாளர் என்றும், சத்திரிய ரென்றும் பிராமண ரென்றுஞ் சொல்லி இறுமாந்து திரிவோர்தம் இறுமாப்பு எவ்வாறாகும்! இவர்தம் சாதியுயர்வெல்லாம் பஞ்சாய்ப் பறந்துபோமன்றோ! இருக்குவேத காலத்தில் ஒரு குடும்பத்தாரிலேயே பற்பல தொழில்களைச் செய்வாரிருந்தனரென்பது நன்கு காட்டப்பட்டிருக்கின்றது. இருக்குவேத ஒன்பதாம் மண்டிலத்தில் (ககஉ, ௩),

"யான் பாடல்களைச் செய்கின்றேன், என் தந்தையோ ஒரு மருத்துவன், என் தாயோ திரிகையில் தானியங்களை அரைக்கின்றாள். செல்வத்தைப் பெறுதற்பொருட்டாகப் பலவேறு சூழ்ச்சிகளால் ஆக்களைப்போல யாம் வேண்டிய தொழில்களை மேற்கொள்கின்றேம்." எனப் போந்த

பாட்டினுல் ஒரு குடும்பத்தினரே பல தொழில்களைச் செய்து உயிர்வாழ்ந்தமை பெறப்படுதல் காண்க. இவ்வாறு பண்டைநாளில் ஒரு குடும்பத்தினரே உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படும் பற்பல தொழில்களைச் செய்து தம்முள் ஏதும் வேற்றுமையின்றி நன்கு உயிர் வாழ்ந்து வந்தமைபோல இப்போதும், பயன்படும் பற்பல அரிய பெரிய கைத்தொழில்களைச் செய்துவரும் வகுப்பினர் பற்பலரும் அங்ஙனமே தம்முள் உயர்வு தாழ்வு காணுது ஒருமித்து அளவளாவி உயிர்வாழப் பழகுவராயின் நம் இந்திய நாடும் இந்திய மக்களும் எவ்வளவு சிறந்த நிலையை அடைகுவர்! வெள்ளைக்கார நன்மக்கள் தாந்தாம் வேண்டிய பல்வேறு பயன்படுந் தொழில்களைச் செவ்வையாகச் செய்து கொண்டு, அத் தொழில்களையாவது அத் தொழில்களைச் செய்யுந் தம்மினத்தவரையாவது ஒரு சிறிதும் இழிவாக நினையாது, எல்லாரையும் ஒத்த இயல்பினராகவே கருதி உண்ணல் கலத்தல்களில் ஏதும் வேறுபாடின்றி ஒருங்கு அளவளாவி ஒரு குடும்பத்தாரைப்போல் வாழ்ந்து வருதலா லன்றோ, அவர்கள் கல்வியிலுஞ் செல்வத்திலும் நுண் ணுணர்விலும் ஆற்றலிலும் இன்பத்திலும் மேம்பட்டு இவ் வுலகின்கண் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றிப், பெரும் பாலும் ஏனையோரை யெல்லாந் தங்கீழ்ப்படுத்துத், தாம் அவர்க்கு மேலாய்த் தேவரைப் போல் விழுமியராய் வாழ் கின்றனர்! மற்று, நம் இந்திய மக்களோ தம்முட் பல்வேறு பயன்படுதொழில்கள் செய்வாரையும் அவர் செய்யும் அத் தொழில்களையுந் தாந்தாமே இழிவு படுத்திக் கொண்டு, அதனுல் ஒருவர்க்கொருவர் அன்பும் ஒற்றுமையும் இன்றிப், பொறாமையும் சூதும் வஞ்சமும் மிக்க அழுக்கு நெஞ்சின ராய்க், கல்வியும் அறிவும் ஆற்றலும் இன்பமும் அற்றுக், கவலையும் வறுமையுந் துன்பமும் மிகுந்து, பொய்க்கதைக்

கும் அறியாமைக்கும் அடிமைகளாகி, அதனால் இவ்வுலக வாழ்க்கையை நரக வாழ்க்கை யாக்கி அலைகளைப்போற் காலங்கழிக்கின்றனர்! ஐயோ! நம் இந்திய மக்கள் நல்லறிவும் ஒற்றுமையும் பெற்று முன்னேற்றம் எய்தும் நாள் எந்நாளோ! அறிகிலம். அதுகிடக்க.

மேற்கூறியன வெல்லாம் ஒக்கும்; சைவவேளாளர் சூத்திரர் அல்லராயின் அவரைப் பிராமணர் சத்திரியர் வைசியர் என்னும் மற்றை மூவகையில் எதன்கண் அடக்குதல்வேண்டும் எனின்; அம் மூவரினும் அவர்க்குமேற்பட்ட நிலையினும் வைகிய பழைய சைவ வேளாளரை அம் மூவகுப்பில் மட்டும் அடக்குதல் பொருந்தாது. பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் நால்வகைப் பிரிவும் பெயரும் ஆரியக் குருமார் எழுதிய தரும சூத்திரங்களினும் மிருதி நூல்களினும் மிகுதியாய்க் காணப்படினும், அவை ஆரியர்க்கே உரியன அல்ல. இவ் இந்திய நாட்டுக்குப் புறம்பே இருந்த காலத்தும் அதன்பின் இதற்குட் புகுந்து முதன்முதற் குடியேறிய காலத்தும் ஆரியர்க்குள் அத்தகையதொரு பிரிவு இருந்தது உண்மையாயின், அவர்கள் அக் காலங்களிற் பாடிய இருக்கு வேதப் பாட்டுகளில் அந் நாற்சாதிப் பிரிவு சொல்லப்பட் டிருத்தல்வேண்டும்; மற்று அஃது அவ் இருக்குவேத முதல் ஒன்பது மண்டிலங்களில் ஓரிடத்தாயினும் ஓர் எட்டுணையேனும் சொல்லப் படாமையினை மேலே விளக்கிக் காட்டினேமாகலானும், ஆரியருள் ஒவ்வொரு குடும்பத்தாரும் பற்பல தொழில்களைச் செய்து தம்முள் ஏதும் வேற்றுமையின்றி உயிர் வாழ்ந்தமையினைச் சற்று முன்னே குறித்தேமாகலானும் அவர்கள் இவ் விந்திய நாட்டுட் புகுந்து வைகிய நெடுங்காலம் வரையில் அந் நாற்சாதிப் பிரிவினை அறியாராயிருந்தமை நன்கு பெறப்படும். அவர்கள் வருவதற்கு முன்

ணரே வடக்கே இமயமலை வரையிற் பரவியிருந்த தமிழ் மக்களோடு, இதனுட் புகுந்த அவ் வாரியர் இதன்கண் இருப்பிடம் பெறுதற் பொருட்டு நெடுகப் போராடிக் கொண்டிருந்த காலம் வரையில் தம்மை 'வெண்ணிறமுடைய ஆரியர்' எனவும், தம்மை எதிர்த்துத் தடை செய்த தமிழர்களைக் 'கருநிறமுடைய தாசர்கள்' எனவும் இருவகைப் படுத்தே ஓதி வந்தனர்.[1] இங்ஙனம் இருவகை நிறவேறுபாடுபற்றி வந்தமையினாலேயே முதன் முதற் சாதியானது 'வர்ணம்' என்னும் பெயரால் வழங்கப்பட்டது. வர்ணம் என்னும் பெயரால் முதன்முதல் உண்டான சாதியானது இந்திய நாட்டுக்கும் புறம்பே யிருந்து வந்த வெண்ணிறத்தினரான ஆரியரையும், இவ் விந்திய நாட்டுக்குள் முன்னரே யிருந்த தமிழரிற் கருநிறமுடைய அவர்தம் ஏவலாளரையும் குறிப்பதொன்றாய் இருந்தது.

இங்கே நினைவிற் பதிக்கற்பாலது ஒன்று உளது: தமிழர் எல்லாருங் கரியநிறத்தனர் அல்லர். அவருள் நூல் ஓதும் அந்தணரும், அரச வகுப்பாரும், உழவித்துண்ணும் சைவவேளாளக் குடியினரும் வெயிற்படாமற் கோயில்களிலும் அரண்மனைகளிலும் மாளிகை வீடுகளிலும் உறைந்து வருபவர்களாதலின் அவர்களிற் பலர் பொன்னிறத்தினராயும் மற்றும் பலர் செந்நிறத்தினராயும் இன்னும் பலர் பழுப்பு நிறத்தினராயும் வேறு பலர் மாந்தளிர் நிறத்தினராயும் உளர்; இவரல்லாத உழுதுண் வேளாண் குடியினரும், மற்றைக் கைத்தொழில் புரியும் பதினெண் குடிமக்களும், அரசனது படையிற் போர்த்தொழில் பயிலும் மறவரும் கடுமுயற்சி யுடையவர்களாய்ப் பெரும்பாலும் வெயிலில் நிற்றலின் இவர்கள் மட்டுமே கருநிறமுடையரா

1. R. C. Dutt's 'A History of Civilisation in Ancient India,' Vol. I, pp. 48-53.

யிருக்கின்றனர். இந்திய நாடு பகலவன் செல்லும் சூடு மிகுந்த நடுக்கோட்டின் (Equator) அருகில் இருத்தலால் வெயில் வெப்பம் மிகுதியும் உடையதா யிருக்கின்றது; எவ்வளவு அழகிய நிறமுடையாராயினும் அவர் சில நாட்கள் வெயிலில் நின்று உழைப்பாராயின் தமது நிறம் மாறிக் கரு நிறமுடையராதலை நங் கண்ணெதிரே இன்றுங் காணலாம்; மற்று, இந்திய நாட்டுக்குப் புறம்பேயுள்ள வடநாடுகள் நடுக்கோட்டுக்குப் பெரிதும் விலகியிருத்தலால், அவை வெயில்வெப்ப மின்றிக் குளிர்மிகுந்தனவா யிருக்கின்றன; அதனால், அந் நாடுகளில் உறைவோர் எவ்வளவு உழைப்பான தொழில்களைப் பகல் வெளிச்சத்தினின்று எத்தனை நாட்கள் செய்வாராயினுந் தமது நிறம் சிறிதும் மாறுதலின்றி வெண்மையாகவே இருப்பர். தமிழரில் உழைப்பாளிகள் கரியநிறத்தினரா யிருப்பினும் அவர்களிற் பெரும்பாலார் திருத்தமான உறுப்புகள் வாய்ந்து அழகியராகவே இருக்கின்றனர். வெள்ளைக்காரரிற் பலர் வெண்ணிறத்தினரா யிருப்பினும், திருத்தமான உறுப்புகள் வாயாமையின் அழகு இலராயும் இருக்கின்றனர். ஆகையாற், கரியநிறம் பற்றித் தமிழரிற் கைத்தொழில் புரிவாரை அழகிலரென இகழ்ந்துரைத்தல் அமையாது. யாங்கூறிய இவ்வுண்மை நுண்ணிய ஆராய்ச்சிவல்ல கால்ட்வெல் ஆசிரியராலும் நன்கெடுத்துக் காட்டப்பட்டது.[1] அதுணர்க.

இந்திய நாட்டுட் புகுந்து தமிழரொடு நெடுங்காலம் போராடியும் அவரை முறியடித்தல் இயலாமை கண்ட ஆரியர் பிறகு அவருடன் நட்புக்கொண்டு அவ் வழியால் வடநாட்டிற் பல இடங்களிலுங் குடியேறி வைகுவாராயினர். இந்திய நாட்டுக்கு வருமுன் ஆரியர்கள் ஆடு மாடுகள்

1. See Dr. R. Caldwell's 'A Comparative Grammar of the Dravidian Languages,' Ist edition, p. 512.

மேய்த்துக்கொண்டு, அவற்றின் மேய்ச்சலுக்குப் புல் வளர்ந்த நிலங்களைத் தேடித் திரிந்தபடியாகவே இருந்தனர். இவ் விந்திய நாட்டுக்குப் புறம்பேயுள்ள வடபால் நிலங்கள் பெரும்பாலும் பனிக் கட்டிகளால் மூடப்பட்டிருத்தலாலும், ஆறு திங்களில் இரண்டரைத் திங்கள் வரையிற் பகலவன் வெளிச்சம் இன்றி எங்கும் இருளாயும் மற்றை மூன்றரைத் திங்கள் சிறு வெளிச்சமாயும் அவையிருத்தலாலும் அங்கே உழவுதொழில் நடைபெறுதல் இயலாது. ஆதலால், அவ் வடபால் நிலங்களிலிருந்த ஆரியர் ஆடுமாடுகள் வளர்த்து அவற்றாற் பெறப்படும் பால் தயிர் நெய்யையும் அவற்றின் இறைச்சியையும் அயின்றே பெரும்பாலும் உயிர்வாழ்ந்து வந்தனர். பண்டை நாளில் வடபால் இருந்த ஆரியரின் உயிர்வாழ்க்கை இத் தன்மைத்தாதல் அவர்கள் அஞ்ஞான்று பாடிய மிகப் பழைய இருக்குவேதப் பதிகம் ஒன்றால் (க, ௪௨) நன்கு புலனாகின்றது. அப் பதிகத்தை இங்கே மொழி பெயர்த்து உரைக்கின்றாம்:

"ஓ பூஷனே, எங்கள் வழிகளைச் சுருங்கப் பண்ணுக,
வழியிலுள்ள இடையூறுகளை அப்புறப்படுத்துக:

வானிற் பிறந்தோய், எமக்குமுன்னே எம்மை அழைத்துச் செல்க.

பூஷனே, எமது வழியினின்றும் ஓநாயை, நன்மையற்ற கெட்ட ஓநாயைத் துரத்துக:

அஃது எம்மைத் துன்புறுத்துதற்குப் பதுங்கியிருக்கின்றது.

நாங்கள் செல்லும் வழிப் பக்கமாய்க் கொள்ளைக்காரன் கள்ள நெஞ்சத்தோடும் ஒளிந்திருக்கின்றான்:

அவனைப் பாட்டையினின்றும் எட்டத் துரத்திக் கொண்டு செல்க.

இரட்டைநா வுடைய அப் பொல்லாதவன் எவனு யிருப்பினும், அவனிடமுள்ள கொள்ளிக் கட் டையை நின் அடிகளினுல் மிதித்துத் தேய்த்து விடுக.

அறிவான்மிக்க பூஷனே, புதுமைகளைச் செய்வோய், பழைய எம்முன்னேர்க்கு உதவிபுரிந்த நின் துணையை எமக்கும் இப்போது உரியதாக நின்னை நாடுகின்றேம்.

ஆகையாற், செல்வமெல்லாவற்றிற்கும் தலைவ, பொன் னிறமான கத்தியை நன்கு சுழற்றுவோய்,

செல்வத்தைப் பெறுதல் எளிதாகுமாறு செய்க.

எம்மைப் பின்றெடர்வோர்க்கு முன்னதாக எம்மைக் கடத்தி நடத்துக, எமது வழியை இனியதாக் குக, அதனை மிதிப்பதற்கு நேர்த்தியாக்குக:

ஓ பூஷனே, இதற்கு நீ வலிமையைத் தேடுக.

புற்கள் செழுமையா யிருக்கும் புல் நிலங்களுக்கு எம்மைச் செலுத்துக: எமதுவழியில் முன்நேரத் திலேயே வெப்பத்தை விடாதே:

ஓ பூஷனே, இதற்கு நீ வலிமையைத் தேடுக.

எமக்கு நீ அருளுடையாய் இரு, எம்மை நிறையப் பண்ணு, எமக்கு உணவினைத்தா, எமக்கு உயிர்ப்பு ஏற்று.

ஓ பூஷனே, இதற்கு நீ வலிமையைத் தேடுக.

பூஷனை யாம் குற்றமாகச் சொல்லுதற்கு ஏதும்இலம் ; அவனை எம் புகழுரைகளாற் பெருமைப்படுத்து கின்றேம்: செல்வத்தின்பொருட்டு வலிமையிற் சிறந்த அவனை யாம் நாடுகின்றேம்.''

இந்தப் பதிகமானது, ஆரியர்கள் இமயமலைக்கு வடக்கே மிகவும் எட்டியுள்ள இடங்களில் ஆடுமாடுகள் மேய்த்துக்கொண்டு ஊர்ஊராய் அலைந்து திரிந்த நிரம்பப் பழைய காலத்தே பாடப்பட்ட தொன்றாகக் காணப்படுகின்றது. அவர்கள் அப்போது 'பூஷன்' என்னும் பெயரால் வணங்கியது விடியற்கால ஒளித்தோற்றமேயல்லாற் பிறிதில்லை. இரண்டரைத் திங்கள் வரையில் இருளிற் கிடந்து மாழ்கிய ஆரியர்கள் அவற்றின் கழிவிற் கதிரவன் வெளிச்சந் தோன்றக்கண்ட அளவானே பெருங்களிப்புற்று அத் தோற்றத்தைத் தெய்வ வடிவாக நினைந்து வணங்கியது இயற்கையேயாம். இங்ஙனமே 'உஷாக்கள்,' 'அசுவிநிகள்' என்னும் பெயர்களால் அவர்கள் வணங்கிய தெய்வங்களும் அவ் விடியற் காலத்திற் காணப்படும் ஒளிவிளக்க மாறுதல்களேயாம். இமயமலைக்கு மிக வடக்கேயுள்ள அந் நாடுகளில் ஏறக்குறைய ஒன்றரைத்திங்கள் வரையில் விடியற் காலவொளி மிகுந்துகொண்டே செல்லுவதன்றிக் கதிரவன் காணப்படான்; இவ்வாறு ஒன்றரைத்திங்கள் வரையில் விடியற் காலமாகவே இருக்கும் அந் நாடுகளில் அவ் வொளியின் காட்சி மிக அழகியதாய் வியக்கத்தக்கதாகவே யிருக்கின்றது; அவ் வொன்றரைத் திங்களும் சென்றபிறகுதான் பகலவன் கட்புலனாக அங்கே தோன்றுவன்; ஆதலால், அந் நாடுகளில் அஞ்ஞான்றிருந்த ஆரியர்கள் அவ் வொன்றரைத் திங்கள்வரையிற் பலவேறு மாறுதல்களோடு தோன்றும் அவ் விடியற்காலக் காட்சிகளைப் பலவேறு தெய்வங்களின் வடிவாகவைத்து வணங்கலாயினர். இந்திய நாட்டிற்கு வருமுன் ஆரியர் வணங்கிய தெய்வங்கள் மேற்காட்டிய 'பூஷன்,' 'உஷாக்கள்,' 'அசுவினிகள்,' 'ஏழு ஆதித்தியர்கள்' என்பவைகளாகவே இருத்தல் வேண்டும்.[1]

1. See 'The Arctic Home in the Vedas' by B. G. Tilak.

இத் தெய்வங்கண்மேல் அவர்கள் பாடிய பாட்டுகளும் மிகப் பழையனவாகவே இருத்தல்வேண்டும்.

இவ்வாறு இந்தியநாட்டுக்குப் புறம்பே உறைந்த காலத்தில் ஆரியர்கள் ஆடுமாடுகள் மேய்த்துக் கொண்டு அவற்றைக் கொண்டே பிழைப்பவர்களாய், அவற்றின் மேய்ச்சலுக்குப் புல்நிலங்களைத் தேடித் திரிபவர்களாய் இருந்தமையின் அவர்கட்கு அந் நாளில் உழவுதொழில் இன்னதென்றே தெரியாது. மற்று, அவர்கட்குமுன் இவ் விந்திய நாட்டின்கண் இமயமலைச்சாரல் வரையிற் பரவி யிருந்த தமிழர்களோ ஆரியர்களைப்போல் ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு அலைந்து திரியும் வாழ்க்கையில் இல்லாமல், நாகரிகத்திற் சிறந்து தாந்தாம் சென்ற இடங் களில் ஆறுகளும் ஏரிகளும் உள்ள பக்கங்களில் நிலையாகக் குடியேறி உழவுதொழிலைச் செய்து, அதனாற் செல்வம் பெருக்கி நாடுநகரங்கள் அமைத்துத், தமக்குள் அரசர்களை ஏற்படுத்தி வறுமையின்றி இனிது உயிர்வாழ்ந்தவர்களாவர். இங்ஙனஞ் செல்வத்தாற் சிறந்த நாகரிகவாழ்க்கை யுடை யவர்களுக்குள்ளேதான் பலவகைத் தொழிற் பிரிவுகளும், அத் தொழில்களைச் செய்யும் மக்கட் பிரிவுகளும் உண்டா குமேயல்லாமல், நிலையான இருப்பிடம் ஏதும் இன்றி இன்றைக்கு ஓரிடத்தும் நாளைக்கு ஓரிடத்துமாக அலைந்து திரியும் மக்கள்பால் அத்தகைய தொழில்களும் பிரிவுகளும் உண்டாகமாட்டா.

## ௬. தொல்காப்பியத்திற் சாதிப்பிரிவு தொழில் பற்றியது

இனித், தமிழர்களின் நாகரிக முதிர்ச்சிக்கு அடிப்படையாய் இருந்தது உழவுதொழிலேயாகும். அவ் வுழவு தொழிலை முதன்முதற் கண்டறிந்தவர்கள் 'வேளாளர்கள்' எனப்படுவர். மநுஸ்மிருதி (௧௦, ௮௯), போதாயனதரும சாத்திரம் (௧, ௧௦ ௩௦) முதலான ஆரியர்தம் ஒழுக்க நூல்கள் உழவுதொழிலை மிக இழித்துப் பேசுதல்கொண்டு, அத் தொழில் ஆரியர்க்குச் சிறிதும் உரியதல்லாமை நன்கு உணரப்படும். மற்றுத் தமிழ்வேதமாகிய திருக்குறளோ உழவுதொழிலையே எல்லாத் தொழில்களினுஞ் சிறந்ததாக வைத்து உயர்த்திப் பேசுதலின் அதனை முதன்முதற் கண்டறிந்தவர்கள் தமிழரேயாதலும்,

> "வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
> இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி."

எனத் தமிழ்ப் பண்டை மறையாகிய தொல்காப்பியம் (மரபியல், ௮௦) அதனை வேளாளர்க்கே வரைசெய்து உரைத்தலின் அத் தொழில் தமிழருள்ளும் வேளாளர்க்கே சிறப்பாக உரித்தாதலும் நன்குபுலனாம்.

உழவுதொழிலுக்கு ஏற்ற இடங்கள் யாறு ஏரி முதலான நீர்நிலைகளை யடுத்த வளவிய நிலங்களேயாகும்; இவ் வளவிய நிலங்களையே மருதநிலமெனப் பண்டைத் தமிழ் நூல்கள் புகலாநிற்கும். இந் நிலங்களில் நெல் கோதுமை முதலான நன்செய்ப்பயிர்களையும் துவரை உழுந்து முதலான புன்செய்ப்பயிர்களையும் விளைத்து, வேளாளர் அவ்வாற்றாற் செல்வமுடையராதலின், தமது செல்

வத்தை உழவுதொழில் அறியாத ஏனையோர் கவர்ந்து கொண்டு செல்லாமைப் பொருட்டுத், தமக்குள் ஒரு தலைவனையும் அவனுக்கு உதவியாக ஒரு படையினையும் அமைத்து வைக்க, அங்ஙனம் அவர் வைத்த தலைவனே நாட்செல்லச் செல்ல அரசன் ஆயினன்.[1] இங்ஙனம் வேளாண்குடியினர் நிலைபெற்ற மருதநிலத்தின் கண்ணேயே அரசவாழ்க்கையும், அரசன் அரண்மனையும், நகரமும் உண்டானமை,

"உழிஞை தானே மருதத்துப் புறனே."
(புறத்திணை இயல், ௯)

என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய சூத்திரத்தானும், அதற்கு நச்சினார்க்கினியார் உரைத்த உரையானும் உணர்ந்து கொள்க. இவ்வாறு வளப்பம் மலிந்த மருதநிலங்கள், பகலவன் செல்லும் வெப்பம் மிகுந்த நடுக்கோட்டைச் சார்ந்துள்ள இந்திய நாடும், வடஆப்பிரிக்காவும், நடு அமெரிக்காவுமே யாகுமென்றும், இந் நாடுகளில் உணவுப் பண்டங்கள் ஏராளமாய் விளைந்தமையின் இவற்றின்கண் இருந்த மக்கள் மிகப் பல்கி நாடுநகரங்கள் அமைத்து நாகரிகத்திற் சிறந்து திகழ்ந்தனரென்றும், நடுக்கோட்டுக்குப் பெரிதும் எட்டியுள்ள வடதேயங்களில் உறைந்தோர்க்கு உழவுதொழில் செய்தலும் உணவுப்பொருள்களை மிகுதியாய் விளைத்தலும் ஏலாமையின் அவர்கள் நாகரிகம் இலராயே இருந்தனரென்றும் இவ் வியல்புகளை நன்கு

1. "The superfluous hordes of the nations which had remained nomad, precipitate themselves upon those which had already become agricultural; until, these having become sufficiently powerful to repel such inroads, the invading nations, deprived of this outlet, were obliged also to become agricultural communities."—J. S. Mill's Principles of Political Economy, p. 7.

ஆய்ந்த ஆங்கில ஆசிரியர்களும் இவற்றின் உண்மையை இனிது எடுத்துக்காட்டியிருக்கின்றனர்[1].

ஏராளமான பொருளுடையவரே அவற்றைக் காத்தற்கு ஓர் அரசனையும் அவற்கு உதவியாகப் படைகளையும் அமைத்தல் வேண்டும்; பொருள் இல்லாதவர்க்குக் காக்க வேண்டுவது ஏதும் இல்லாமையின் அவர்கட்கு அரசனும் இலன், படைகளும் இல. ஆதலால், இந்திய நாட்டுக்கு வரும்முன் இடம் இடமாய் அலைந்து திரிந்த ஆரியர்களுக்கு அரசனும் இலன், படைகளும் இல. தமிழரிற் சிறந்த வேளாளரோ உழவுதொழிலாற் பெருஞ்செல்வராயிருந்தமையின் அச் செல்வத்தைக் காத்தற்பொருட்டு அரசனையும் படைகளையும் அமைக்கவேண்டுவது அவர்க்கு இன்றியமையாததாயிற்று என்க.

இனி, நாகரிகத்திற் சிறந்த வேளாளர் கல்வியறிவினும் கடவுள் வழிபாட்டினும் உறைந்து நின்றமையின், தாம்

1. "In Asia, in Africa, in America, all the ancient civilizations were seated in hot climates (p. 37). Asiatic civilization has always been confined to that rich tract where alone wealth could be easily obtained. This immense zone comprises some of the most fertile parts of the globe; and of all its provinces, Hindustan as extending south to Cape Comorin is certainly the one which was for the longest period has possessed the greatest civilization (pp. 39-40). We find that no people living in a very northern latitude have ever possessed that steady and unflinching industry for which the inhabitants of temperate regions are remarkable. The reason of this becomes clear, when we remember that in the more northern countries the severity of the weather, and, at some seasons, the deficiency of light, render it impossible for the people to continue their usual out of door employments (p. 24)."—H. T. Buckle's History of Civilization, Edition of G. Routledge & Sons, Ltd.

சென்ற இடங்கடோறும் சிவபிரானுக்குப் பெரிய பெரிய திருக்கோயில்கள் கட்டுவித்து, அவற்றின்கண் இறைவனுக்குத் தொண்டு புரிதற்காகத் தம்மவருள் ஒரு பகுதியாரைப் பிரித்து அத்தொழிலில் அவர்களை நிலைபெறுவித்து அவர்தம் வாழ்க்கைக்குவேண்டும் படித்தரங்களையும் ஏற்படுத்திவைத்தனர். இங்ஙனம் வகுத்துவைக்கப்பட்ட வேளாள அந்தணர்களே இக்காலத்தில், 'ஆதிசைவர்,' 'நம்பியார்,' 'பட்டர்' என்னும் பெயர்களால் வழங்கப்படுகின்றனர். மணச்சடங்குகள் பிணச்சடங்குகள் இயற்றுதற்கும் இவர்களுள்ளேயே 'சைவக் குருக்களும்' வகுத்து வைக்கப்பட்டனர். தமக்குட் கல்வியறிவிற் சிறந்தோரையும் தவம்புரியும் ஒழுக்கத்தோரையும் தமக்குக் குரவராக மேல்நிறுத்தி அவர்கட்கு ஆண்டாண்டு திருமடங்கள் அமைப்பித்து, அவர்பாற் சென்று நூலறிவுங் கடவுளுணர்ச்சியும் பெற்றுவரலாயினர். இம் முத்திறத்தவரும் வேளாளரில் அந்தணரும் நூலோதும் பார்ப்பனரும் சமய ஆசிரியரும் ஆவர். இம் முத்திறத்தினரிற் கோயிற்றொண்டு புரியும் அந்தணரும், சடங்குகள் செய்வித்து நூலோதும் பார்ப்பனக்குருக்களும் மெல்லமெல்ல வடமொழிச் சொற்களையும் குறியீடுகளையும் எடுத்தாண்டுகொண்டு ஆரியப் பார்ப்பன இனத்திற் சேர்ந்துகொண்டனர், இன்னுஞ் சேர்ந்து வருகின்றனர். இத் தமிழ்நாட்டின்கண் இப்போது 'பார்ப்பனர்' என்று வழங்கப்படுவார் எல்லாரும் ஆரியப் பார்ப்பனர் அல்லர். வடக்கிருந்து வந்து இங்கே குடியேறிய ஆரியப்பார்ப்பனர் மிகச்சிலரேயாவர். இங்கிருந்த வேளாளப் பார்ப்பனரே நாளடைவில் தம்மை ஆரியப்பார்ப்பனராகத் திரித்துக்கொண்டனர்; இத் தமிழ்நாட்டின்கண் உள்ள பார்ப்பனர் எவரும் ஆரியத்தோடு இனமான வடநாட்டு மொழிகளுள் எதனையும் தம் மனைவிமக்களோடு பேசக்

காணுமையானும், தொன்றுதொட்டு அவர்கள் தமிழ் மொழியினும், தமிழோடு இனமான மலையாளம் தெலுங்கு கன்னடம் முதலான மொழிகளினுமே உரையாடக் காண்டலானும், வடநாட்டிலுள்ள ஆரியப் பார்ப்பனரைப்போல் ஊன்உண்ணக் காணுமையானும் நூல் அளவிற் சிறிது வடமொழி ஓதுதல்பற்றி இவர்களை ஆரியப்பார்ப்பனரென்றல் அமையாது; இவ் விந்தியநாட்டின்கட் காணப்படும் துலுக்கர் கிறித்துவரிற் பெரும்பாலார் இந்துமக்களிலிருந்தே திரிபடைந்தவராதல்போல, இந்நாட்டின்கண் உள்ள பார்ப்பனரிற் பெரும்பாலாரும் சில நூற்றாண்டுகளுக்குமுன் வேளாளக் குருக்களாய் இருந்தவர்களேயாவர். இதற்கு அறிகுறியாக, வேளாளர்க்குரிய 'பிள்ளை' என்னும் பட்டப்பெயர் திருச்செந்தூர் முதலான இடங்களில் உள்ள பார்ப்பனர்க்கு இன்றுகாறும் வழங்கிவருகின்றதென்றும், அப் பட்டப்பெயரை அவர்கள் மெல்லமெல்ல மாற்றி வருகின்றனரென்றுங் கேள்வியுறுகின்றோம். இன்னும், ஆழ்வார்கள் பாடிய செந்தமிழ்ப் பாடல்களுக்கு உரை எழுதிய பார்ப்பனராகிய 'பெரியவாச்சான்பிள்ளை' என்பவர் 'பிள்ளைப்'பட்டம் பூண்டிருத்தலும் இதற்கொரு சான்றாம்.

இனி, இவ் வேளாளருள் அரசர்களுங், குறுநில மன்னர்களும், அவரின்கீழ் அமைச்சராயும் படைத்தலைவராயும் இருந்தோரும், இவர் தமக்கெல்லாம் உறவினராய் உழவுதொழிலை நடப்பித்துச் செல்வராய் வாழ்ந்தோரும் எல்லாம் ஒரு தொகுதியாய் அரசமரபினராயினர். உருவப் பல்தேர் இளஞ்சேட்சென்னியும் அவன்மகன் கரிகாற்பெருவளத்தானும் போல்வார் வேளாளரிற் பெருவேந்தராய்ப் பழையநாளில் இத் தென்றமிழ் நாட்டில் அரசுபுரிந்தோர் ஆவர்; வேள்பாரி, வேள்எவ்வி, இருங்கோவேள் முதலாயினோர்

வேளாளரிற் குறுநில மன்னராவர்; சேக்கிழார் போல்வார். அரசர் பால் அமைச்சராயிருந்த வேளாளர் ஆவர்; கோட்புலி நாயனூர் போல்வார் அரசருக்குப் படைத்தலைவராய் இருந்த வேளாளர் ஆவர்; சோழன்கரிகாற் பெருவளத்தானுக்குப் பெண் கொடுத்த நாங்கூர் வேள் போல்வார் அரசர்க்கு உறவினராய் உழவுதொழில் நடப்பித்துக்கொண்டு வாழ்ந்த வேளாளர் ஆவர் என்க.

இனி, உழவுதொழிலாற் பெற்ற பல பண்டங்களையும் ஓரிடத்திற் றொகுத்துப் பலரும் எளிதிற் பெறுமாறு விற்று வாணிகம் நடாத்தினோரே வேளாளருள் வணிகராயினர். இவ்வணிக வேளாளர் செட்டிப் பட்டம் பெற்றிருத்தலும், இவர்கள் மேற்கூறிய உழவித்துண்ணும் வேளாளரோடு ஒருங்கிருந்து உணவெடுத்தலும் அவரோடு பெண் கொண்டு கொடுத்து உறவுகலத்தலும் இன்றுகாறும் நடைபெற்று வருகின்றன.

இனி, உழுதுண் வேளாளரும், குற்றேவல்செய்வாரும் பல கைத்தொழில் புரியும் பதினெண்மரும் மேற்காட்டிய மூவகையினரைப்போற் செல்வராய் இல்லாமையினாலும், நாள்முழுதுந் தொழில்கள் பல இயற்றுதலாற் கல்விகற்க ஒழிவுநேரம் பெறாமையினாலும், உயர்ந்த உணவுப் பண்டங்களை மேலோர் மூவர்க்கும் ஒப்படைத்துவிட்டுத் தாம் விலை குறைந்த வரகின்கூழ், இலைக்கறி, மீன் முதலான சிற்றுயிர்களின் ஊன் என்பவற்றை உணவாகக்கொண்டு உயிர் வாழ்ந்தமையினாலுங் கீழோர் ஆயினர்.

இவ்வாறு இயற்கைத் தொழின்முறையால் மருதநில மாந்தரே அந்தணர், அரசர், வணிகர், அடியோர், வினைவலர் என்னும் ஐம்பெரும் பிரிவினராயினர். இவ் ஐவகையினரில் அடியோரும் வினைவலரும் ஒருவகையில் அடக்கப்

பட்டுக் 'கீழோர்' எனவும், 'இழிந்தோர்' எனவும் வழங்கப் படுவாராயினர். இவர் தம்முள் உழுவித்துண் வேளாளர் அரசர் வகுப்பினும், உழுதுண் வேளாளர் "அடியோர் வினைவலர் பாங்கினும்" அடங்குகின்றனர். பதினெண் டொழில் புரிவாரைத் தவிர, ஏனை அந்தணரும் அரசரும் உழுவித்துண் வேளாளரும் வணிகரும் உழுதுண்வேளா ளரும் எல்லாம், முதன்முதல் வேளாண்மைத் தொழிலைக் கண்டறிந்த வேளாளரினின்றும் பிரிந்தோரேயாவர் என்ப தனை மேலே விளக்கினும்; வேளாண்மைத் தொழிலை முன்னறியாத தமிழ்மக்கள் அதனை முன்னறிந்த அவ் வேளாளர் ஏவிய பற்பல கைத்தொழில்களைச் செய்து வந்தமையின், அத் தொழில்கள் பதினெண்வகைய வாய்ப் பகுக்கப்பட்டு அவற்றைச் செய்யும் பதினெண்வகுப்பா ரும் வேளாளர் அல்லாத பிறவகுப்பில் ஒரு தொகைப் படுத்து வைக்கப்படுவாராயினர். தொழில்பற்றிய இவ் வகுப்புமுறை செந்தமிழ்த் தொல்லாசிரியரான தொல் காப்பியனார்,

> "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்,
> ஐவகை மரபின் அரசர் பக்கமும்,
> இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்."[1]

என்றோதிய வாகைத்திணைச் சூத்திரத்தால் நன்கறியப் படும். ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுவகைத் தொழில்களைச் செய்வார் பார்ப்பனராவரென்பதூஉம்; ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புதல் என்னும் ஐவகைத் தொழில் களைச் செய்வார் அரசராவரென்பதூஉம், ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் என்னும் அறு தொழில்களைச் செய்வார் வணிகர் வேளாளர் என்னும்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், எசு.

இருபாலாரும் ஆவரென்பதூஉம் இனிது பெறப்படுதல் காண்க. வணிகரையும் வேளாளரையும் "ஏனோர்" என்னுஞ் சொல்லால் ஒன்றாய் அடக்கி அவ்விருவர்க்கும் பொதுப்பட ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் என்னும் ஆறு தொழில்களையும் ஆசிரியர் தொல்காப்பியனார் வெளிப்படையாய் ஓதியிருக்க, இத் தொல்லாசிரியர்க்கு ஆயிரத்து ஐந்நூறு ஆண்டு பிற்பட்ட வடமொழிப் பார்ப்பனரால் எழுதிவைக்கப்பட்ட வடமொழி ஸ்மிருதிநூலின் நால்வகைச் சாதியுட் கடைப் பட்ட சூத்திரச் சாதியில் வேளாளரைப் பிழைபட அடக்குவான் புகுந்த இளம்பூரணர், நச்சினார்க்கினியர் முதலான உரைகாரர் உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடுபுறந்தருதல், வழிபாடு, வேதமொழிந்த கல்வி முதலிய ஆறுமே வேளாளர்க்கு உரியவாகக் கூறினர். வடமொழி மிருதிநூல்களிற் சூத்திரர் என்னும் வகையில் வைக்கப்பட்டவர்கள்: "சண்டையில் வென்று சிறையாகப் பிடித்துக் கொள்ளப்பட்டவர்களும், தமது அற்றைச் சோற்றுக்காக ஊழியஞ் செய்பவர்களும், வேசிக்குப் பிறந்தவர்களும், விலைக்கு வாங்கப்பட்டவர்களும், பிறராற் கொடுக்கப்பட்டவர்களும், முன்னோர் காலந் தொட்டுத் தமக்கு அடிமைகளாய் வருபவர்களும், குற்றத்திற்காக அடிமைப்படுத்தப்பட்டவர்களுமே" ஆவரென் பதனை மேலெடுத்துக் காட்டினமாகலின், அந்தணராயும் அரசராயும் வாணிகம் உழவு நடாத்துவோராயும் பண்டு தொட்டுச் சீருஞ் சிறப்பும் உடையராய்த் தமிழ்நாட்டின் கண் வாழ்ந்துவரும் வேளாளரைச் சூத்திரவகுப்பிற் சேர்த்தல் பெரியதோர் இழுக்காதலை வேளாளர் நாகரிகம் என்னும் எமது நூலில் விரித்து விளக்கினும்; அதனை அங்கே கண்டுகொள்க. வாணிகம் நடாத்துவாரை 'வைசியர்'

என்னும் வடசொல்லால் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினாற்போல, வேளாளரைச் 'சூத்திரர்' என்னும் வட சொல்லால் அங்ஙனமே அவர் யாண்டுங் கூறாமையின், அவரைச் சூத்திரராகக் கொண்டு உரை கூறிய உரைகாரரின் உரை ஆசிரியர் கருத்துக்குமாறான பிழையுரையாமென விடுக்க. மேலும் சூத்திரர்க்குக் குற்றேவற்றொழில் ஒன்றுமே மிருதிநூல்களிற் கூறப்பட்டிருக்க, உழவும் நிரையோம்புதலும் ஆகிய தொழில்கள் வைசியர்க்கு மட்டுமே அவற்றான் வரையறுத் துரைக்கப் பட்டிருத்தலானும்,[1] வேதநூற் கல்வியும் வேள்விவேட்டலும் வைசியர்க்கும் உரியவாதல் மனுமிருதியிற் பெறப்படலானும்[2], தமிழ் நாட்டிலுள்ள வேளாளர்கள் பண்டுதொட்டு நூல் ஓதியும் சில வேள்விகள் வேட்டும் உழவு வாணிகம் நடாத்தியும் ஆனிரையோம்பியும் ஈகையிற் சிறந்தும் வாழ்ந்துவரக் காண்டுமேயல்லாமல் ஏனையோர்க்குக் குற்றேவற் றொழில் புரிந்துவரக் காணாமையானும் வேளாளரைச் சூத்திரரெனக் கொண்டு அவர்க்கு அறிவுநூற் கல்வியினை மறுத்த உரை காரருரை போலியுரையாமென விடுக்க. மேலும் விருந் தோம்புதற் றொழில் அந்தணர் அரசர் வணிகர் முதலான எல்லா வகுப்பினர்க்கும் பொதுமையில் உரியதாகவும், அதனை வேளாளர்க்கு மட்டும் வரைப்படுத்திக் கூறியதூஉம் பொருந்தாவுரையாம் என்பது. ஆசிரியர் தொல்காப்பியனார் வணிகரையும் வேளாளரையும் "ஏனோர்" என்னும் ஒரு சொல்லால் அடக்கி, அவ் விருவர்க்கும் "இருமூன்று" தொழில்களைப் பொதுப்பட ஓதினாரல்லது, வணிகர்க்கும் வேளாளர்க்குந் தனித்தனி வெவ்வேறு ஆறுதொழில்களை ஓதிற்றிலராகலின், அவர் கருத்துக்கு மாறாக வணிகர்க்கு ஒருவகையான ஆறுதொழில்களையும் வேளாளர்க்கு மற்

1. மனுமிருதி, ௧, ௯௦; ௮, ௪௧௦. 2. மனு, ௧௦, ௭௬.

றொருவகையான ஆறு தொழில்களையுந் தாமே புதியவாய்க் கற்பித்துக் கொண்டுரைத்த இளம்பூரணர் நச்சினார்க்கினியர் உரைகள் சான்றோராற் கொள்ளற்பாலன அல்லவென்று உணர்க.

வணிகரும் வேளாளரும் ஒரு வகுப்பினரே யென்பது ஆசிரியர்க்குக் கருத்தாயின், "வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை" என வைசியரை ஒரு பாலாகவும், "வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்லது, இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி" என வேளாளரை மற்றொரு பாலாகவும் வைத்து அவர் வேறுபடுத்து ஓதிய தென்னையெனின்; சூத்திரர்க்குக் குற்றேவற் றொழில் ஒன்றுமே கூறி, ஏனை வைசியர்க்கு வாணிகமும் உழவுமாகிய தொழில்களை வரையறுத்துக் கூறுதற்கண், ஆபஸ்தம்பம், போதாயநம், மநு முதலான வடநூலாசிரியர் எல்லாரும் ஒருங்கொத்து ஒருமுகமாய் நிற்றலின், வைசியருள்ளேயே வாணிகம் நடாத்துவோரை ஒருபாலாகவும் உழவு நடாத்துவோரை மற்றொரு பாலாகவும் வைத்து ஆசிரியன் அங்ஙனம் சூத்திரஞ் செய்திட்டான் என்பது. ஏனைத் தொழில்கள் போலாது, வாணிகம் உழவு என்னும் இரண்டும் உலகியல் நடத்தற்கு இன்றியமையாது வேண்டப்படும் இருபெருந் தொழில்களாய்த் தலைசிறந்து நிற்றலின், அவ்விரு வேறு தொழில்களைப் புரியும் வைசியரை வணிகரெனவும் வேளாளரெனவும் இருவகைப்படுத்து ஓதியது, அறிவுநூல் வழக்கோடு உலகிய லறிவும் ஒருங்கு வாய்த்து அகன்ற ஆசிரியன் தொல்காப்பியனது பேரறிவு மாட்சியின் பெற்றி தெரிப்பதொன்றா மென்க. இவ்வாறு ஆசிரியன் வேளாளரை வைசிய வகுப்பின்பாற் படுத்த லொன்றின் மட்டும் அமையாது, அவரை அரச வகுப்பின் பாலும் படுக்குங் கருத்தினனென்பது,

"வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே."

என்னுஞ் சூத்திரத்தில்,[1] அவர் அரசராற் படைத்தலைவ ராஞ் சிறப்பும் மாலை சூட்டப்படும் மாட்சியும் பெறுதல் கூறுதலானும்,

"வில்லும் வேலுங் கழலுங் கண்ணியுந்
தாரும் ஆரமுந் தேரும் வாளும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய."[2]

என்னுஞ் சூத்திரத்தில் வேளாளர் குறுநில மன்னராய் அரசாளுதற்கு உரிமையுடையராதல் கூறுதலானும் பெறுதும் என்பது. மற்று, அடியோருள்ளும் வினை வல்லோருள்ளுங் குறுநில மன்னராவார் உளரேனும், அவர் வேளாளரைப் போற் படைத்தலைமையுங் கண்ணியும் வில் வேல் கழல் தார் ஆரம் தேர் வாள் முதலியனவும் வேந்தராற் பெறுதற்கு உரிய சிறப்புடையரல்லரென்பது,

"அன்ன ராயினும் இழிந்தோர்க்கு இல்லை."[3]

என்று ஆசிரியன் ஓதியவாற்றால் தெளியப்படும். எனவே, வணிகரையும் வேளாளரையும் "ஏனோர்" எனவும், அவரிற் கீழோரான அடியோர் வினைவலரை "இழிந்தோர்" எனவும் ஆசிரியன் யாண்டும் உரைப்பக் காண்டலின், வேளாளரை இழிந்த சூத்திர வகுப்பின்பாற் படுத்தல் ஆசிரியன் கருத்துக்கு முற்றும் மாறுமென்றும், அதனால் உரை காரின் உரைகள் கொள்ளற்பாலன அல்லவென்றும் மறுக்க. அற்றேல், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பகுப்பினின்றும் வேறாக 'இழிந்தோர்' எனப்

1. தொல்காப்பியம், பொருள், மரபியல், ௮௧.
2. தொல்காப்பியம், பொருள், மரபியல், ௮௨.
3. தொல்காப்பியம், பொருள், மரபியல், ௮௩.

படுதற்குரிய அடியோரையும் வினைவலரையும் ஆசிரியன் மரபியலின் ஓதிற்றிலனாலெனின்; பொருளதிகாரத்தின் முதற் கண்ணதாகிய ‘அகத்திணையிய’லில்,

“அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினுங்
கடிவரை இலபுறத்து என்மனார் புலவர்.”

என ஆசிரியன் முன்னரே அவர் தம்மை ஓதிப்போந்தானாகலிற், பின்னும் அவரை ‘மரபிய’லிற் கிளந்து கூறாது ‘இழிந்தோர்’ என்னும் பொதுச்சொல்லாற் கூறினானென்க. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் ஐவகை நிலத்துள்ளும் பொதுமக்கள் ஆவாருந் தலைமக்களாவாரும் அடியோர் வினைவலர் ஆவாரும் உளர் என்பதனை ஆசிரியன்,

“பெயரும் வினையும் என்று ஆயிருவகைய
திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே.”

எனவும்,

“ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉங் கிழவரும் உளரே.”

எனவும்,

“ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை
ஆனா வகைய திணைநிலைப் பெயரே.”

எனவும்,

“அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினுங்
கடிவரை இலபுறத் தென்மனார் புலவர்.”

எனவும் ஓதியவாற்றால்[1] தெளிந்து கொள்க. இங்ஙனம் உரைப்பவே, குறிஞ்சிநிலத்துப் பொதுமக்கள் பெயர்: குறவர், குறத்தியர், கானவர், வேட்டுவர், அவருள் தலைமை பெற்றோர் பெயர்: மலையன், கொடிச்சி ஆம் என்பதூஉம்,

1. தொல்காப்பியம், பொருள், அகத்திணையியல், ௨௨, ௨௩, ௨௪, ௨௫.

முல்லை நிலத்துப் பொதுமக்கள் பெயர்: ஆயர், ஆய்ச்சியர், அவருள் தலைமை பெற்றோர் பெயர்: அண்ணல், மனைவி ஆம் என்பதூஉம், பாலைநிலத்துப் பொதுமக்கள் பெயர்: எயினர், எயிற்றியர், அவருள் தலைமை பெற்றோர் பெயர்: மீளி, விடலை ஆம் என்பதூஉம், மருதநிலத்துப் பொது மக்கள் பெயர்: உழவர், உழத்தியர், அவருள் தலைமை பெற்றோர் பெயர்: மகிழ்நன், ஊரன், மனையோள் ஆம் என்பதூஉம், நெய்தல்நிலத்துப் பொதுமக்கள் பெயர்: நுளையர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர், அவருள் தலைமைபெற்றோர் பெயர்: சேர்ப்பன், துறைவன் ஆம் என்பதூஉம், அவ்வந் நிலத்துத் தலைவர் ஏவிய செய்வார் அடியோரும் வினைவலரும் ஆவரென்பதூஉம் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் முதலான உரைகாரர் கூறிய உரைகளால் நன்கு பெறப்படும். எனவே, ஒவ்வொரு நிலத்தின்கண்ணும் பொதுமக்களாவாருந் தலைமக்களாவாரும் ஏவியசெய்வாரும் உளர் என மக்களை ஆசிரியன் மூத்திறப்படுத்து ஓதினமை இனிது விளங்காநிற்கும். இங்ஙனமாக எல்லா நிலத்தின் கண்ணும் மூன்று வகை வேறுபாடும் உளவேனும், இவை மருதநில மாக்கட்குச் சிறந்து தோன்றுமாப்போல், ஏனை நிலத்துள்ளாரிற் சிறந்து தோன்றுவதன்று; ஏனென்றால், மருதநிலம் ஒன்றுமே உழவு தொழிலுக்கு ஏற்றதாய்ப் பல்வகை உணவுப் பண்டங்களையும் விளைத்துக் கொடுத்து, அவ்வாற்றால் தன்னகத்துள்ள மாக்களை வளம்பெறச் செய்து, அவருள் அறிவானும் உயர்ந்த ஒழுக்கத்தானும் செல்வத்தானும் சிலரை உயர்த்தி, அத்தகைய நலங்கள் இலராய் அந் நலங்களையுடையாரைச் சார்ந்து அவர் ஏவிய செய்து பிழைக்கும் இயல்புடையாரைத் தாழ்த்தி, அவ்வாறுயர்ந்தாரை உயர்ந்த சாதியாரெனவும் தாழ்ந்தாரைத் தாழ்ந்த சாதியாரெனவும் வேற்றுமை விளங்கித் தோன்றப்

பண்ணுந் திறத்தது ஆகலின் என்க. மருதநிலம் ஒழிந்த மற்றை நிலங்களில் உள்ளார்க்குள் இத்தகைய வேறுபாடு மிருந்து காணப்படாமை இஞ்ஞான்றும் நாம் கண்கூடாய்க் காணலாம். குறிஞ்சிநிலத்துள்ள வேட்டுவரும், முல்லை நிலத்துள்ள ஆயரும், பாலைநிலத்துள்ள எயினரும், நெய்தல் நிலத்துள்ள செம்படவரும் தத்தம் வாழ்க்கைக்குரிய வேட்டமாடுதல், நெய் பால் தயிர் விற்றல், ஆறலைத்தல், மீன்பிடித்து விற்றல் முதலான ஒரோவொரு தொழிலையே செய்து செல்வமிலராய் வயிறு வளர்த்தலானும், இவர்தந் தொழிற்குத் துணையாக வேண்டப்படும் பிறதொழில்கள் இன்மையானும், இம் மக்களுட் சாதிவேற்றுமை இலதாயிற்று; மற்று, மருதநிலத்து மாந்தர் செய்யும் உழவு தொழிலுக்கோ பலவேறு கைத்தொழில்களின் உதவி வேண்டியிருத்தலானும், அவ் வுழவுதொழில் உலகத்தில் நடைபெறும் நாகரிக நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் பிறப்பித்து அவற்றிற்கெல்லாம் அடிப்படையாய் நிற்றலானும், அதனையுடைய மாந்தர் தமக்குள்ளேதான் எல்லா வகையான வேறுபாடுகளுங் கிளைப்ப ஆயின என்றறிதல் வேண்டும்.

ஆகவே, சாதிவேற்றுமை முதன்முதல் உண்டானது, உழவு தொழிலைச் செவ்வனே யறிந்து அதனைத் திறம்பட நடத்தி நாகரிகமுற்ற தமிழ்மக்கட்குள்ளேதா னென்பது பெரிதும் நினைவிற் பதிக்கற்பாலதாகும். மருதநிலம் அல்லாத ஏனை நிலங்களில் உள்ள தமிழ்மக்கள் நிலையும், இந்திய நாட்டுக்குப் புறம்பேயிருந்து வந்து இதன்கண் இருக்க இடம்பெற்ற ஆரிய மக்களின் நிலையும் ஒத்த இயல்பினவாய் நாகரிகம் அற்றனவாய் இருந்ததனைத் தமிழ்ப் பண்டை நூலாகிய தொல்காப்பியத்தானும், வடமொழிப் பண்டை நூலாகிய இருக்கு வேதத்தானும் நன்கறிகின்றே

மாகலின், சாதிவேற்றுமையினை முதற்கண் உண்டாக்கின வர்கள் மருதநிலம் அல்லாத மற்றைநிலத் தமிழ்மக்களும் அல்லர், புறம்பேயிருந்துவந்த ஆரியமக்களும் அல்லர். உழவுதொழிலையறிந்து நடத்திய தமிழ்வேளாளர்களே தாம் சென்ற சென்ற இடங்கடோறுஞ் சாதிவேற்றுமை யினை உண்டாக்கினர். வேளாளர் மலிந்த இத் தென்றமிழ் நாட்டின்கட் சாதிவேற்றுமையின் கொடுமை காணப்படு மாறுபோல், வடநாட்டின்கட் சாதிவேற்றுமை அத்துணைக் கொடுமையாகக் காணப்படுகின்றிலது. வடநாட்டின்கண் ஒரேயறையிற் பார்ப்பனரும் பார்ப்பனர் அல்லாத பிறரும் ஒருவரையொருவர் காண அருகிருந்து உணவுகொள்ளுதலை, அங்கே செல்வார் எவரும் இன்றைக்குங் காணலாம். வட நாட்டிலுள்ள சிவபிரான் திருக்கோயில்களிலுந் திருமால் திருக்கோயில்களிலும் இந்துமக்கள் எல்லாரும் ஏதொரு வேற்றுமையும் இன்றி இறைவன் திருவுருவத்தின் கிட்டச் சென்று, எல்லாரும் அத் திருவுருவத்தினைத் தொட்டுத் திருமுழுக்குச் செய்வித்தும் மலர்கள் தூவியும் வணங்கு தலை நாடோறுங் காணலாம். ஆனால், இத் தென்னாட் டிலோ உணவெடுக்கும் இடங்களில் ஒருவரையொருவர் பாராமல் இனம் இனமாய்ப் பிரிந்து அதனை விழுங்குதலும், உறவு கலக்குங்கால் ஒருவர் மற்றொருவரின் சாதி இழிபு களைச் சொல்லிக் கலாம் இடுதலும், திருக்கோயிலினுள் இந்துமக்களுள்ளேயே இன்ன சாதியார் செல்லலாம் இன்ன வர் செல்லலாகாதென்றும், உள்ளே செல்வாருள்ளும் இன்னவர் திருவுருவத்தின் அருகிற்செல்லலாம் இன்னவர் அருகிற் செல்லலாகாதென்றும் இடும் கூக்குரலுமே எங்கும் நிரம்பி, ஒன்றோடொன்று ஓயாமற் சண்டையிடும் ஓநாயும் புலியுங் கரடியுஞ், சிங்கமும் நிறைந்த பாழ்ங்காடாக இந் நாட்டினை ஆக்கிவிட்டன! இக் கொடிய சாதிவேற்றுமை

என்னும் என்புருக்கிநோய் தென்னாட்டவர்க்கே உரித்தாவதாய், அவர்களது பெருங்கூட்டமாகிய உடம்பை அவர்களறியாமலே தின்று, அவர்கள் இருந்த சுவடுதானுந் தெரியாதொழியும்படி, அவர்களை வேரோடு அழித்துப் பாழாக்கிக், கூற்றுவனுக்குப் பெருவிருந்து ஆற்றும் பெற்றியதாய் ஆங்காங்குப் பெரிதும் பரவி வருகின்றது. இச் சாதி வேற்றுமையாகிய கொடுநோயை ‘மனுமிருதி’ என்னும் அழுகிய பாழ்ங்குழியினின்றுந் தோற்றுவித்து, அதனை இந்துமக்கட்குழாம் என்னும் உடம்பினுள் நுழையவிட்டவனும் மநு என்னும் ஒரு தமிழ்வேளாள அரசனே ஆவன். திராவிடதேயத்தின்கண் உள்ள மலையநாட்டில் ஓடும் கிருதமாலை என்னும் ஆற்றங்கரையி லிருந்து தவம் புரிந்த மநு ஒரு திராவிட மன்னனே (த்ராவிடேச்வர:) ஆவன் என்று பழைய மற்சபுராணமும் (க, கஉ, கங), பாகவதபுராணமும் (அ, உச, எ, கங) தெளித்துரைத்தல் காண்க.[1]

அற்றேற், பண்டைநாளிற் கொல்லாமை புலால் உண்ணாமையாகிய அருளொழுக்கத்தில் தலைசிறந்து நின்ற வேளாளர்கள், தமது அருளொழுக்கத்திற்கு மாறுவதும் இறுமாப்புக்கு இடமாவதுமான இச் சாதிவேற்றுமையினை எங்ஙனம் உண்டாக்கினார்களெனின் ; அதனையும் சிறிது விளக்கிக்காட்டுதும். உழவுதொழிலைத் தெரிவதற்கு முன் தமிழ்மக்கள் எல்லாரும் மலைகளினும் மலைக்காடுகளினும் உறைந்துகொண்டு, மான் மரை கடம்பை வரையாடு முதலான விலங்கினங்களை வேட்டம் ஆடி, அவற்றின் இறைச்சியை யுண்டு உயிர்வாழ்ந்தவர்களே யாவர். அவர்கள் மிகப் பழையதாகிய அக் காலத்தில் வில்லும் அம்பும் ஏந்தி வேட்டமாடிப் பிழைத்தமையினாலேதான், தாம் அந் நாளில்

1. Compare also the account given by Ragozin in his ‘Vedic India,’ pp. 341-348.

வணங்கிய முதற் றெய்வமாகிய முருகப்பிரானை வேட்டுவ வடிவில் மலைமேல் வைத்து வழிபட்டும், வேடன் மகளாகிய வள்ளிநாச்சியாரை அவர்க்கு மனைக்கிழத்தியாக மணம் புணர்த்தி வணங்கியும் வருகின்றார்கள்; வடநாட்டிற் சென்ற அக்காலத்துத் தமிழ்மக்களுந் தமது தென்னாட்டுத் தமிழ் இனத்தவரைப் போலவே அந்நாளில் வேட்டமாடி உயிர் வாழ்ந்து வந்தமையால், தாம் அஞ்ஞான்று வணங்கிய சிவபிரானுக்குங் கையில் வில்லுங் கணையும் உளவாக வேட்டுருக் கற்பித்து அவனையும் மலைமேல் வைத்து வணங்கியதோடு மலைமாமகள் பொற்பாவை உமைப்பிராட்டியாரையும் அவர்க்கு மணமகளாகப் புணர்த்தி வழிபடலாயினர். இவ்வாற்றாற் பண்டைத் தமிழ்மக்களெல்லார்க்கும் பண்டை முதற்பெருந்தெய்வம் முருகப்பிரானும் சிவபெருமானுமேயாவர் என்பதூஉங் கடைப்பிடித்துணர்ந்து கொள்க. திருமுருகாற்றுப்படை என்னும் பழைய தனிச் செந்தமிழ்ப்பாட்டின் முருகனுக்கு ஆட்டிறைச்சி வைத்துப் படைத்தமை சொல்லப்பட்டிருத்தலின்,[1] முன்னாளிலிருந்த தமிழர்கள் வேட்டுவ வாழ்க்கையில் இறைச்சி தின்று வாழ்ந்தவராதல் நன்கு பெறப்படும்.

இனி, அவருள் அறிவான்மிக்கோர் சிலர் மலையை விட்டுக் கீழ் இறங்கி ஆறும் ஏரியும் வாய்ந்த வளவிய வெளி நிலங்களில் வந்து வைகி, நிலத்தை உழுது திருத்தி, நெல் கோதுமை [illegible] கடலைகள் முதலியன விதைத்தும், வாழை மா பலா தெங்கு முதலியவற்றைப் பயிர் செய்தும், அவற்றின் பயன்களாற் சுவைமுதிர்ந்த உணவுகளை ஆக்கி உட்கொள்ளக் கற்றுக்கொண்டபின், தம்மைப் போல் இன்பதுன்ப உணர்ச்சியுடைய உயிர்களைப் பதைபதைக்கக் கொன்று, அவற்றின் ஊனை உண்டல் பெருந்

1. திருமுருகாற்றுப்படை, ௨௩௨, ௨௩௩-௨௪௧.

தீவினையாமென நினைந்து, அதனை அறவே கைவிட்டார்கள். அங்ஙனம் ஊனுணவைக் கைவிட்டபின், உயிர்க்கொலையையும் அதனால் வரும் இறைச்சியையும் அதனை உண்பாரையுங் காண அருவருப்புற்றனர்; அவரோடு அளவளாவுதற்கும் அஞ்சினர். ஆகவே, மருதநிலத்திற் குடியேறிய தமிழருள் ஊன் உண்ணுதார் ஒரு பிரிவினராகவும், ஊன் உண்பார் மற்றொரு பிரிவினராகவும் பிரிந்தனர். இங்ஙனம் முதலில் இரண்டு பிரிவுகளே உண்டாயின. புலால் அருந்தாதார் புலால் அருந்துவோரைத் தம்மிற் றாழ்ந்தவராக நினைந்து அவரை அருவருத்து விலக்குதல்போலப், புலால் உணவு கொள்வோர் அது கொள்ளாதாரை அருவருத்து விலக்குதற்கு ஏது இன்மையினாலே, புலான் மறுத்த தமிழர் உயர்ந்தோராயும், அவரால் அருவருத்து ஒதுக்கப்பட்ட ஏனைத் தமிழர் தாழ்ந்தோராயுங் கருதப்படலாயினர். எனவே, முதன்முதல் மருதநிலத்துத் தமிழ்மக்களுள் உண்டான சாதி இரண்டேயா மென்பதூஉம், அவர் புலான் மறுத்தோரும் அது மறாதோருமேயாவர் என்பதூஉம், இப்பிரிவுக்கு ஏதுவாயிருந்தது கொல்லாமை புலாலுண்ணுமையாகிய அருளொழுக்கமேயா மென்பதூஉம் எளிதின் விளங்காநிற்கும்.

இனி, இங்ஙனம் பிரிந்த இருதிறத்தார்க்குள்ளும் இன்னும் பல பிரிவுகள் உண்டாவதற்கு ஏதுவாயின: தூய்மையுங் கல்வியறிவுங் கடவுள் வழிபாடுமேயாகும். இவற்றுள், தூய்மையாவது அகந்தூய்மை புறந்தூய்மை என இருவகைப்படும்; இவைதம்முள் அகந்தூய்மை என்பது பொய்கூறுது மெய்யேபேசுதல், பிறர்க்குள்ள உயர்ச்சி கண்டு பொறாமைகொள்ளாதிருத்தல், கண்ட கண்ட பொருளையெல்லாம் பெற அவாவுறுதிருத்தல், பிறர்பாற் குற்றங்கண்ட வழியெல்லாம் சினவாதிருத்தல், பிறர்மேல்

தீயசொற்களைச் சொல்லாதொழுகுதல் முதலியவற்றால் மனம் மாசின்றி யிருப்பதாகும். இனிப், புறந்தூய்மை என்பது தன் உடம்பும், தான் உடுக்கும் உடையும், தான் இருக்கும் இடமும், தான் புழங்குங் கருவிகள் ஏனங்கள் பண்டங்கள் முதலியனவும், அழுக்கில்லாமலுந் தீ நாற்றம் வீசாமலுந் துப்புரவாய் இருக்க வைத்தல். இங்ஙனம் அகம் புறம் இரண்டுந் தூயவாய் இருக்கும்படி வைத்தலும், உலகநூல் அறிவுநூல்களை எந்நேரமும் ஓதுதலும், கடவுளை இடையிடையே வழிபடுதலும் முற்றும் வழுவாமற் செய்தல் அரசராயிருந்து குடிகளைப் பாதுகாப்பார்க்கும், பதினெண் டொழில் புரிவாரைத் தத்தந் தொழில்களில் ஏவி உழவு தொழிலை நடப்பிப்பார்க்கும், பல நாடுகளிலுள்ள பண்டங் களை ஒருங்கு தொகுப்பித்துங் காலினுங் கலத்திலுஞ் சென்று அயல்நாடுகளில் அவற்றை விலைப்படுத்தியும் வாணிகம் புரிவார்க்கும் இயலாமையின், அகம் புறந் தூய்மையினுங் கல்வி கடவுள் வழிபாட்டினும் வழுவாது நிற்கவல்ல வேளாளர் மட்டுமே, 'அந்தணர்' என்னும் பெயர்க்கு உரியராய் அரசர் வணிகரினும் உயர்ந்த சாதியா ராயினர். வணிகரையும் உழவித்துண்பாரையும் பாது காத்து, உலகினை ஓம்பி அகம் புறந் தூய்மை கல்வி கடவுள் வழிபாடு என்னும் இவற்றில் அந்தணர்க்கு அடுத்தபடியில் வழுவாது நிற்கவல்லராகலின், அரசர், ஏனை வணிகர் வேளாளரிற் சிறந்த சாதியாராயினர். வணிகரும் வேளாள ரும் ஏனைப் பதினெண்டொழில் புரிவாரைவிட மேற்கூறிய அருளொழுக்கத்திலும், தூய்மை கல்வி கடவுள் வழிபாட் டிலும் மேம்பட்டிருத்தலின், அவரும் அப் பதினெண்ம ரினுஞ் சிறந்த சாதியாராக வைத்துப் பாராட்டப்பட்டு வருகின்றனர்.

இனிப், புலால் உண்ணும் பதினெண்டொழிலாளருள்ளும் அகத் தூய்மை புறத் தூய்மையில் இயன்றமட்டும் வழுவாது நிற்போருங், கல்வியுங் கடவுள்வழிபாடும் வாய்ந்தோருமே உயர்ந்த சாதியாராகக் கருதப்பட்டு வருகின்றனர். புலால் உணவு கொள்ளுதலில் உழுதுண் வேளாளரும் இடையரும் அகம்படியரும் கள்வரும மறவரும் ஒருங்கொப்பராயினும், அகம் புறத் தூய்மையினுங் கல்வி கடவுள் வழிபாட்டினும் உழுதுண் வேளாளரும் இடையரும் ஏனையோரிற் சிறந்து நிற்றலின், அவர்கள் அகம்படியர் கள்வர் மறவரினும் உயர்ந்த சாதியாராகக் கருதப்படுகின்றனர். தூய்மை கல்வி கடவுள்வழிபாடு இல்லாமையோடு, கள்ளுண்டும் விலங்குகளில் மிகத் தூயனவும் பெரிது பயன்படுவனவுமாய ஆவினையும் எருதினையும் உணவாகக் கொண்டும் நிரம்பவுந் தீய ஒழுக்கத்தினரா யிருத்தலின், பள்ளரும் பறையரும், அகம்படியர் கள்வர் மறவரினும் இழிந்த சாதியாராயினர்.

இனி, இவ்வாறு பல்வேறு வகையினராய்ப் பிரிந்த சாதியாருள்ளும் மகளிரது ஒழுக்கத்தால் உயர்ந்தோருந் தாழ்ந்தோருமாய்ப் பிளவுபட்ட சிறுசிறு வகுப்பாரும் பற்பலர். கொண்டானைவிட்டுப் பிறன் தோள்தோய்ந்த மகளிரும் அவரைச் சேர்ந்தாரும் ஒரு சாதியினுள்ளேயே இழிந்த வகுப்பினர் ஆயினர். முதலில் ஒரு கூட்டத்தினராய் இருந்த மருதநிலத் தமிழ்மக்களே பின்னர் நாட் செல்லச் செல்ல இங்ஙனமெல்லாம் பற்பல கூறுகளாகப் பகுக்கப்படுதற்கு ஏதுவாய் இருந்தவைகள்: கொல்லாமை புலால் உண்ணாமையும், அகத் தூய்மை புறத்தூய்மை கல்வி கடவுள் வழிபாடும், மகளிர் ஒழுக்கமுமேயா மென்பதனைக் கடைப்பிடித்து உணர்ந்துகொள்க.

இங்ஙனம், பிறவுயிர்க்குத் துன்பம் பயவாத தூய உணவையும், தன் உடம்பும் உயிரும் தூயவாதற்கு ஏற்ற முறைகளையும், இன்ப வேட்கையை நெறிதவறாமல் நுகருதற்குரிய வகைகளையுங் கைப்பற்றி யொழுகும் வரையில், அங்ஙனங் கைப்பற்றி யொழுகுவார் எக்குடிப் பிறந்தோரா யினும் அவர் உயர்ந்தோராகப் பாராட்டப்படுதற் குரிய விழுப்பம் வாய்ந்தோரா தலைச் செந்தமிழ்த் தொல்லாசிரிய ராகிய தொல்காப்பியனார் தமது காலத்திருந்த மருதநில மாந்தரையும் பிறநிலத்தாரையும் அவ்வவர் தொழின்முறை பற்றிப் பகுத்து ஓதியவாறு பற்றி இவ்வியலில் இதுகாறும் விளக்கிக் காட்டினும். தூயவுணவாலுந் தூயசெயலாலும் உயர்ந்தோருந் தாழ்ந்தோருமாய்ப் பிரித்துப் பாராட்டப் பட்டோர் தத்தம் ஒழுக்கங்களின் வழுவியவழி உயர்ந்த சாதியாராகப் பாராட்டப்படவில்லை என்பதற்குத், தொல் காப்பியனார்க்குப்பின் பண்டைத் தெய்வ ஆசிரியராய்த் தோன்றிய திருவள்ளுவநாயனார் இரண்டாயிர ஆண்டுகளுக்கு முன்னரே,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்."

"ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்." (௧௪, ௩, ௪)

என்று அருளிச்செய்த திருக்குறட்பாக்களே சான்றாம், திருக்குறளுக்குச் சிறிது பிற்பட்ட காலத்ததாகிய நாலடியாரும்,

"நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ தவங்கல்வி ஆள்வினை
என்றிவற்றின் ஆகுங் குலம்." (௧௯௫)

என்று உயர்ந்த செயல்களே உயர்குல அடையாளமாகக் கருதப்பட்டமையினை வற்புறுத்து உரைத்தல் காண்க.

இன்னும், ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தில், உயர்ந்த ஒழுக்கத்தால் உயர்குலத்தவராக நன்கு மதிக்கப் பட்ட மருதநிலத்து வேளாண் குடித்தலைவர், குறிஞ்சி நிலத்தின்கண் உள்ள குறவர் குடித்தலைவரின் பெண் மக்களை மணந்துகொண்டனர். இது தொல்காப்பியம், களவியலில்,

"ஒத்த கிழவனுங் கிழவியுங் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே." (உ)

என்று அவர் அருளிச்செய்தவாற்றால் நன்கறியக் கிடக் கின்றது. அங்ஙனங் குறிஞ்சி நிலத் தலைமகளினை மணந்து கொண்ட வேளாண்டலைவர் அவரது இல்லத்தில் விருந்தின ராகிச் சென்றவழி அவர் தந்த உணவினை அயின்று மகிழ்ந் தமையும் ஆசிரியர் தொல்காப்பியனார்,

"புகாஅக் காலைப் புக்கு எதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்." (களவியல், கூ)

என்று ஓதியவாற்றாற் பெறப்படும். 'புகாக்காலை' என்பது உணவுகொள்ளுங் காலம். இவ்வியல்புகள் எல்லாம் அச் சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரை யுள் எடுத்துக்காட்டப்பட்ட பழம் பாட்டுகளில் தெளியக் காணலாம். காணவே, பண்டைக் காலத்தில் ஒழுக்கத்தால் எத்துணை உயர்ந்த குடிப்பிறப்பினரா யிருந்தாரும், தம்மிற் றாழ்ந்த குடிப் பிறப்பினரில் மேம்பட்டு வருவாரைச் சிறிதும் ஒதுக்கிவையாது, அவ ரோடு உண்ணல் கலத்தல்களைச் செய்து, அவரைத் தம் மினத்திற் சேர்த்துக்கொண்டு இனிது வாழ்ந்து வந்தமை நன்கு புலனாகா நிற்கும் மருதநிலத்து வேளாண்டலைவன்

குறிஞ்சிநிலத்து வேட்டுவப் பெண்ணை மணம் புரிந்து கொண்ட வழக்கம் முற்காலத்தில் இருந்ததனை மாணிக்க வாசகப் பெருமான்,

"தெங்கம் பழங் கமுகின் குலை சாடிக் கதலிசெற்றுக்
கொங்கம் பழனத் தொளிர் குளிர் நாட்டினை நீ, உமைகூர்
பங்கம் பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாபதைப்பச்
சிங்கந் திரிதரு சீறூர்ச் சிறுமிஎந் தேமொழியே."

என்று திருச்சிற்றம்பலக் கோவையாரில் (௧00) அருளிச் செய்திருத்தல் கொண்டு உணர்க. இதுபோலவே, நெய்தல் நிலத்துப் பரதவர்குடிப் பெண்ணை வேளாண்டலைவன் மணந்து கொண்டமைக்குச் சந்தநு மன்னன் மச்ச கந்தியை மணந்தமையும்(மாபாரதம்), சிவபிரான் பெயர் பூண்ட ஒரு பாண்டிய மன்னன் ஒருசெம்படவப் பெண்ணை மணந்தமையுமே (நம்பியார் திருவிளையாடற் புராணம்) சான்றாம். இங்ஙனமே முல்லைநிலத்து ஆயர்தலைவன் மகளை மருதநிலத் தலைவன் மணந்தமுறை,

"படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமும்நுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்கள் ஈர்முல்லை வேலிஎம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட்டார் வியன்றென்புலியூர்
உடையார் கடவி வருவது போலும் உருவினதே." (௧௩௬)

போந்த திருச்சிற்றம்பலக்கோவையார் திருப்பாட்டானும், அருச்சுனன் ஆயர் தலைவனான கண்ணன் தங்கை சுபத்திரையை மணந்த வரலாற்றானும் அறியப்படும். இவ்வாறு இழிந்த ஒழுக்கமுடைய இழிந்த சாதியார்க்குள்ளும் உயர்ந்த ஒழுக்கமும் இயல்பும் உடையராய் வருவாரைப் பண்டை வேளாளர் தம்மினத்திற் சேர்த்துக்கொண்டு வாழ்ந்த வரலாறுகளை உற்று ஆராயுங்கால், அவ்வவர் பாற் காணப்படும் உயர்ந்த இயல்புகள் பற்றியே சாதியுயர்பு உண்டாயதல்லாமற் பிறப்பளவில் அஃது உண்டாகவில்லை

யென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நன்கு விளங்கும். உயர்ந்த செயலும் இயல்பும் வாய்ந்த குடிமக்களில் இழிந்த செயலும் இயல்பும் உடையார் தோன்றுவராயின் அவரை இழிந்தோரென்றும், இழிந்தசெயலும் இயல்பு முடைய குடியில் உயர்ந்த செயலும் இயல்பும் உடையார் தோன்றின் அவரை உயர்ந்தோரென்றும் நம் தமிழ்மக்கள் கொண்டாரென்பதற்கு,

> "ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
> இழிந்த பிறப்பாய் விடும்." (௧௪, ௩)

> "மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
> கற்றார் அனைத்திலர் பாடு." (௪௧, ௯)

> "விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
> கற்றாரோடு ஏனை யவர்." (௪௧, ௧௦)

என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்தமையே சான்றாம். பண்டைக் காலத்திருந்த தமிழ் வேந்தர்களுங், கல்வியிலும் பிறநலங்களிலும் உயர்ந்தோரையே உயர்ந்தோரெனக் கொண்டு பாராட்டினாரல்லாமற், பிறப்பளவில் எவரையும் உயர்ந்தோரெனக் கொண்டில ரென்பதற்கு, ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ் செழியன்,

> "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
> பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே,
> பிறப்போர் அன்ன உடன்வயிற் றுள்ளுஞ்
> சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்,
> ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
> மூத்தோன் வருக என்னாது அவருள்
> அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்,
> வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளுங்
> கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
> மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே."[1]

1. புறநானூறு, ௧௮௩.

என்று ஆயிரத்து எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னரே பாடிய செய்யுளே சான்றாம்.

இவ்வாறாக, உயர்ந்தோர் தாழ்ந்தோராதலும், தாழ்ந்தோர் உயர்ந்தோராதலும் அவ்வவர்பாற் காணப்படும் இழிந்த இயல்பு செயல்கள், உயர்ந்த இயல்பு செயல்கள் பற்றியே யல்லாமல், வெறும் பிறப்பளவில் மக்களை உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று கூறுதற்கு வேறு ஏதோர் அடையாளமும் உண்மைபற்றியன்றாம். ஏனெனிற் பிறப்பளவில் நோக்கினால், மக்கள் எனப்படுவார் எல்லாரும் புலால்நாற்றம் வீசும் ஊனுடம்பு வாய்ந்தவர்களாகவே யிருக்கின்றனர்; அவர்க்குள்ள அவ்வூனுடம்புதானும் ஒன்பது வாயில்களிலுங் கசியும் மிக அருவருப்பான மலம் நிறைந்ததாயிருக்கின்றது; அவ் வுடம்பிற் புண் உண்டானாற் சீழும் செந்நீரும் வடிகின்றன, புழுக்கள் நெளிகின்றன, பார்ப்பாருடம்பும் இவ்வியல்பினவே, அரசர் வேளாளர் உடம்பும் இவ்வியல்பினவே, பறையர் உடம்பும் இவ்வியல்பினவே; சிலகாலம் உயிரோடிருக்கையிலும் இவ்வுடம்பு திரைத்து மூத்து வலிவுகுன்றிப் போகின்றது; அவ் வுயிர் போனபின் அவ் வுடம்பு மண்ணிற் புதைக்கப்பட்டு மண்ணாய்விடுகின்றது, அல்லது நெருப்பிலிட்டு நீறாக்கப்படுகின்றது. இவ்வியற்கை எல்லாருடம்புகட்கும் பொதுவாயிருத்தலால், ஆசிரியர் திருவள்ளுவர், “பிறப்பு ஒக்கும் எல்லாவுயிர்க்கும்” என்று அருளிச் செய்தார். ஆகையால், வெற்றுடம்பை மட்டுங் கண்டு இது பார்ப்பாருடையது, இது மன்னருடையது, இது வேளாளருடையது, இது பறையருடையது என்று கூறுதல இயலாது. மேல் உடுத்த உடைகளையும், பூணூல் உச்சிக் குடுமிகளையும் களைந்துவிட்டால் இவர் பார்ப்பனரென்று அறிதல் எலாது; இங்ஙனமே அரசர் வேளாளர் பறையர் முதலானோர் தாந்தாம் வேற்றுமை

தோன்ற அணிந்திருக்கும் அடையாளப் பொருள்களை அகற்றிவிட்டால் அவர்களை இன்னொன்றறிந்து கொள்ளுதல் எவர்க்கும் ஏலாது. இவ்வாறு மக்களுள் இவர் இன்ன சாதியார் இவர் இன்ன சாதியார் அல்லர் என்று இனம் பிரித்துக்காட்டல் இயற்கையில் இயலாமைபற்றியே, அஃகி அகன்ற செந்தமிழ்த் தொல்லாசிரியராகிய தொல்காப்பியனார் 'சாதி' என்னுஞ் சொல்லை மக்கட்பிரிவினர்க்கு இட்டு வழங்காமல், தம்முள் இனம் இனமாக இயற்கையிலேயே வேற்றுமை காட்டும் சிற்றுயிர்ப் பிரிவுகளுக்கு அச்சொல்லை இட்டு வழங்கினார். அவர்,

"நீர் வாழ்சாதியுள் அறுபிறப்பு உரிய"

(சஉ) என்று மரபியற் சூத்திரத்தில் சாதி என்னுஞ் சொல்லை மீனின் இனங்களைக் குறித்தற்குக் கருவியாகக் கொண்டமை காண்க. நீர்வாழ் மீன்களில் இவை ஆண்பால் இவை பெண்பாலென்று பகுத்தறிதற்கு ஏற்ற உறுப்பு அடையாளங்கள் உடையன உளவென்றும், அவற்றுள் ஆணுறுப்பு உடையவாய்ப் 'போத்து' என வழங்கப்படுதற்கு ஏற்றவை ஆறு சாதியா மென்றும் ஆசிரியர் அச்சூத்திரத்தால் அறியவைத்தார். ஆணுறுப்புடைய ஆறு சாதி மீன்களாவன: "சுறாவும் முதலையும் இடங்கரும் கராமும் வராலும் வாளையுமென இவை" என்று அதற்கு உரைகாரர் கூறியதூஉங் காண்க. எனவே, தத்தம் உடம்பின் அமைப்பால் இவை சுறா, இவை முதலை, இவை வரால், இவை வாளை எனப் பகுத்துணர்தற்குரிய இயற்கை வேற்றுமையுடைய சிற்றுயிர்களின் இனங்களே 'சாதி' எனப் பெயர்பெறுதற்கு இயைந்தனவாம் என்பதூஉம், இங்ஙனம் இயற்கையிற் பிரித்துணர்தற்கு ஏலா மக்கட்பிரிவினர் அப் பெயர்பெறுதற்கு ஏலாதென்பதூஉம்,

அதனால் மக்களுட் 'சாதி' இல்லையென்பதூஉம் தெய்வப் பெற்றியாளரான ஆசிரியர் தொல்காப்பியனார்க்குக் கருத்தாதல் பெறப்பட்டமை காண்க. இவ்வாற்றால், உயர்ந்த செயல்கள் உடையாரை உயர்ந்தோரென்றலும், இழிந்த செயல்கள் உடையாரை இழிந்தோரென்றலுமே செந்தமிழ் மறை வகுத்த தொல்லாசிரியராகிய தொல்காப்பியனார்க்கும், அவரது மரபு பிழையாமல் வந்த தெய்வத் திருவள்ளுவனார்க்கும், அவ்விருவரது மந்திரமொழி பேணிவந்த ஏனைத் தமிழாசிரியர் எல்லார்க்கும் ஒத்த கருத்தாதல் வெள்ளிடைமலைபோல் விளங்காநிற்கும் என்பது.

## ரு. சைவ வைணவ நூல்களிலுஞ் சாதிவேற்றுமை இல்லை

இனிச், சைவவைணவ ஆசிரியர்கள் அருளிச்செய்த நூல்களிலாயினும் பிறப்பளவிற் சாதிவேற்றுமை சொல்லப் பட்டிருக்கின்றதோவென ஆராய்ந்தாற், பிறப்பளவிற் சாதிவேற்றுமை பாராட்டுதல் இறைவனது திருவருளைப் பெறவொட்டாமல் தடைசெய்து அங்ஙனம் அது பாராட்டு வாரை அறியாமையிலுஞ் செருக்கிலும் ஆழ்த்தி அவர் களைத் தீராப் பெருந்துன்பச் சுழலிற் படுப்பித்து வருத்து மென்றும், சாதிவேற்றுமையினை அறவே தொலைத்து இறைவன்பால் அன்புமிக்க அடியார் எவராயிருப்பினும் அவர்பால் ஏதொரு குற்றமும் ஆராயாது அவர்க்குத் தொண்டுபூண்டு ஒழுகுதலே இம்மை மறுமை யிரண்டிலுந் திருவருட் பேரின்பத்தைத் தருமென்றும் அவ்வுண்மை நூல்களுள் வற்புறுத்துச் சொல்லப்பட் டிருக்கின்றனவே யல்லாமற், சாதிபற்றிய உயர்வு தாழ்வுகள் ஒரு தினைத்தனை யேனும் அவற்றின்கட் சொல்லப்படவில்லை. இவ் வுண்மை யினையும் அவ்வாசிரியன்மார் நிலவிய கால முறையின் படியே அவர்தம் திருமொழிகளினும் வரலாறுகளினும் இருந்தெடுத்து விளக்கிக் காட்டுதும்.

சைவ வைணவ ஆசிரியர் எல்லாரினும் முற்பட்ட காலத்தவரும், பாண்டிய வேந்தனுக்கு அமைச்சராயிருந்து, பின் திருப்பெருந்துறையிலே சிவபெருமான் தமது திரு வுருவத்தோடும் நேரே எழுந்தருளி ஆட்கொள்ளப் பெற்ற வருமான அந்தணர் குடிப்பிறந்த மாணிக்கவாசகப் பெருமான்,

சைவ வைணவ நூல்களிலுஞ் சாதிவேற்றுமை இல்லை எரு

"சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் உரைமாய்த்துக்
கோதில்அமுது ஆனானைக் குலாவுதில்லை கண்டேனே."

(திருவாசகம், கண்டபத்து, ரு)

என்று அருளிச்செய்திருக்குந் திருப்பாட்டாற், சாதி குலம் பிறப்பு என்பவைகள் மக்களை மேல்நிலைக்குச் செல்லவொட்டாமல், அவர்களைத் தற்செருக்கால் மயங்கச் சுழற்றி ஆழ்த்திமடிவிக்கும் வெள்ள நீர்ப்பெருஞ் சுழிகளாதலை அறிகின்றனம் அல்லமோ?

இனிப், பௌத்தசமய காலத்திருந்து அதனை ஒடுக்கிய மாணிக்கவாசகர்க்குப் பின், சமணசமயகாலத் திருந்தவரும், சமண்மதம் புகுந்து பின் சிவபெருமான் றந்த சூலைநோயால் மீண்டுஞ் சைவசமயம் புகுந்தவரும், சமண அரசனாகிய மகேந்திரவர்மன் தம்மைக் கருங்கல்லிற் பிணைத்துக் கடலில் வீழ்த்தவுஞ் சிவபிரான் திருவருளால் அக் கல்லையே புணையாகக்கொண்டு கரையேறி அவ்வரசனையுஞ் சைவனாக்குவித்தவரும், சைவ வேளாண்குடியிற் பிறந்தவருமான திருநாவுக்கரசநாயனார்,

"சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்
பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே." (திருமாற்பேறு)

என்றருளிச் செய்து வெறுங் குலங்கோத்திரங்களால் இறைவன் திருவருளை யெய்துதல் ஆகாதெனவும், மெய்யன் புடைமையே அதனைப் பயக்குமெனவும் அறிவுறுத்தியதோடு, பூக்கோலும் புற்கட்டும் எடுத்துத் தோற்பூணூலும் பூண்டு 'யான் பார்ப்பான்' என்று தன்னைப் பெருமை பாராட்டுதலால் ஒருவன் ஏதும் பயன்பெறான், நுண் உணர்

வால் வரும் மெய்யன்பே ஒருவற்கு மெய்ப்பயன் தருவதா மென்பது போதரக்,

"கோலும் புல்லும் ஒருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரம்உற்று என்பயன்!
நீலமா மயிலாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண் உணர்ந் தோர்கட்கே."
(திருமயிலாடுதுறை)

என நன்கெடுத்து அருளிச்செய்தமை காண்க. பார்ப்பனரையே பிறப்பளவில் உயர்ந்தவராகக் கொள்ளாத அப்பருக்கு, வேளாளரைப் பிறப்பளவில் உயர்த்துதல் சிறிதும் உடன்பாடாகாதன்றோ?

இனித், திருநாவுக்கரசு நாயனார்பாற் கரைகடந்த மெய்யன்பு பூண்டு, அவ் அன்பின் பெருக்கால் தம் புதல்வர்க்கெல்லாம் திருநாவுக்கரசு நாயனாரது திருப்பெயரையே வைத்து அழைத்தும், தாம் அறத்திற்காக வழிநடையில் அமைத்த அழகிய தண்ணீர்ப்பந்தருக்கும் அப் பெயரையே சூட்டியும் ஒழுகிய அந்தணரான அப்பூதியடிகள், திருநாவுக்கரசு நாயனார் தமதில்லத்திற்கு எழுந்தருளக் கண்டவும் தம்மவருடன் சென்று அவர்தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவரோடு அருகிருந்து உணவுகொண்ட அன்பின் திறங்களெல்லாம் அன்பின் வழிப்படும் நல்லார்க்கு நினையுந்தோறும் அகம்நெகிழ்ந் துருகச்செய்யும் இயல்பின வாமன்றோ?

இனி, உலகஇயல்பினையுந் தன்னியல்பினையுங் கடவுளியல்பினையும் உணரல் இயலாத மூன்றாண்டுச் சிறுகுழந்தையாயிருந்த காலத்திலேயே அம்மையப்பர் வடிவாய்த் தமது கண்ணெதிரே தோன்றிய முழுமுதற்கடவுளைக் கண்டு, அதனால் ஞானப்பால் ஊட்டப்பெற்று எல்லாம்

ஓதாதுணர்ந்து, கண்டோரெல்லாம் இதனையொப்பதொரு புதுமை யாண்டுங் கண்டிலேம் என வியந்து வணங்கத், தமது சிறு குதலைவாய் திறந்து அம்மையப்பரை எண்ணிறந்த திருப்பதிகங்களாற் பாடிக், கடவுள் இல்லையென்று நாத்திகம் பேசித் தமது அருளொழுக்கத்துக்கே மாறாக எண்ணிறந்த சிவனடியார்களைத் தீயிட்டுக் கொளுத்தத் துணிந்த சமணர்களை ஒடுக்கி, அவர்க்கும் பிறர்க்கும் எதிரிலே சிவபெருமான் உளன் என்பதைப் பல புதுமைகளால் விளக்கிக் காட்டிய அந்தணரான திருஞானசம்பந்தப் பிள்ளையார்,

"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்கு
இங்கே என்று அருள்புரியும் எம்பெருமான்."
(திருப்பிரமபுரம்)

என்றருளிய திருப்பாட்டால் தன் அடியார் உயர்ந்த குடியிற் பிறந்தாரேனும் இழிந்த குடியிற் பிறந்தாரேனும் அவர் எந்நிலையில் உள்ளாரேனும் அவர்தம் அன்பின் பெருக்கையே பாராட்டி இறைவன் அவர்க்கு அருள்புரிவானென விளக்கினாரல்லரோ? இன்னும் அவர்,

"குலவராகக் குலம் இலருமாகக் குணம் புகழுங்கால்
உலகின் நல்லகதி பெறுவர்." (திருப்புகலூர்)

எனவும்,

"நலம் இலராக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற
குலம் இலராகக் குலமதுண்டாகத் தவம்பணி குலச்சிறை
பரவும்." (திருவாலவாய்)

எனவும், அடியார் எக்குடிப் பிறப்பினராயினும் அவரது குடிப்பிறப்பு நோக்காது அவரைச் சிறப்பித்துக் கூறுதல் காண்க. இங்ஙனம் அவர் தாம் மொழிந்த சொல்லளவில் அமையாது, தாம் மொழிந்தபடியே அன்பின் மிக்க அடியார்

பால் ஏதும் சாதிவேற்றுமை பாராட்டாது அதனைத் தமது செய்கையிலுங் காட்டி யொழுகினர். பாணச்சாதியிற் பிறந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரையும் அவர் மனைவியாரையும் எப்போதும் தம்முடனேயே வைத்திருந்ததோடு, பார்ப்பனரான திருநீலநக்கரென்னும் மற்றொரு சிவனடியார் திருமாளிகைக்கு எழுந்தருளியபோது அவரோடு ஒருங்கிருந்து திருவமுது கொண்டு, இரவில் திருநீலநக்கரது மிகவுந் தூயதான வேள்விமேடையிலே யாழ்ப்பாணருக்கும் அவர் மனைவியார்க்கும் இருக்கை அமைத்தனர்கள். அவ்விருவரும் அம் மேடையிற் சென்றவுடனே, அங்கே வேள்விக்குண்டத்தில் இடஞ்சுழித்து எரிந்த சிவத்தீயானது இவர்களின் வரவால் மிகமகிழ்ந்து வலஞ்சுழித்தெழுந்து எரிந்ததெனச் சேக்கிழார் அடிகள் அருளிச் செய்திருக்கின்றார். பாணரென்பவர் பறைச்சாதியிற் சிறிது மேலானவரென்று எண்ணப்பட்டவர்; இவ்வியல்பினரான பாணரை நம் திருஞானசம்பந்தப் பெருமானும் திருநீலநக்கரும் தம்மோடு உடன்வைத்து அளவளாவினதும், அவ் வருமையைத் தீவடிவாயிருந்த நம் ஆண்டவன் ஏற்றுக் கொண்டு மகிழ்ந்ததும் போலிச்சைவர் உணரார் கொல்லோ!

நான்காம் ஆசிரியரும் ஆதிசைவப் பார்ப்பனருமான சுந்தரமூர்த்தி நாயனாரும் திருத்தொண்டத்தொகையின் கண் "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியேன்" என அடியார்களின் பிறப்பை நோக்காமல் அவர்கள் எல்லாரையும் வணங்கினார்.

இனிச், சிவபெருமான் பிறப்பினால் உயர்ந்தவர்களுக்கே தனது அருளை வழங்கியது யாண்டும் இல்லை. அன்பினாற் சிறந்தவர்கள் எப் பிறப்பினராகப் பிறராற் கருதப்படினும்,

அதனைத் தான் சிறிதும் பாராதே அவர்களுக்கே தனது பேரருளை வழங்கி வந்திருக்கின்றான். இதற்குப், பெரிய புராணத்தின்கட் போந்த பல்வகைப் பிறப்பினரான அடியார்கள் எல்லாரும் அவனது திருவருளைப் பெற்றமையே பெருஞ் சான்றாம். மேலும், பிறப்பினால் தம்மை உயர்ந்தோராகக் கருதிச் செருக்கடைவோர் குறும்பை வேரோடும் அறுத்து அவரை மாய்க்க வேண்டுமென்பதே எல்லாம்வல்ல அவ் வாண்டவன் திருவுளக்குறிப்பாமென்பது, உண்மை வரலாறுகள் பலவற்றாலும் நன்கு தெளிவுறுத்தப்பட்டிருக்கின்றது. திருவம்பர் மாகாளத்திற் சோமாசிமாற நாயனார் தாம் செய்த வேள்வியில் இடும் அவிசைச் சிவபெருமான் நேரே வந்து ஏற்றுக்கொண்டருளல் வேண்டுமென்று தவங் கிடந்து இரந்தபோது, அவ் வேள்விக் குண்டத்தைச் சூழத் தம்மைப் பிறப்பினால் உயர்ந்தோராகக் கருதிச் செருக்குற்றிருந்த பார்ப்பனர் அத்தனைபேர்க்கும் தனது அருளை வழங்க இசையானாய், நம்பெருமான் சண்டாளப் பறையன் உருத்தாங்கி அவ் வேள்விக் குண்டத்திற்கு எழுந்தருளினான்; அதுகண்ட ஏனைப் பார்ப்பனர் எல்லாரும் 'தூய வேள்விக்களத்திற்குப் பறையன் வந்தான்' என்று சொல்லி ஓடிப்போக, அன்பினாற் பெரிய சோமாசிமாறராகிய உண்மைப் பார்ப்பனர் உடனிருந்த சுந்தரமூர்த்திநாயனாரால் அறிவுதெளிந்து அங்கு எழுந்தருளின நம்பெருமானுக்கு அவிசைத் தந்து பெரும்பேறு பெற்றனர். இன்னுந், திருஞானசம்பந்தப் பெருமானாலும் திருநாவுக்கரசுநாயனாராலும் தம்முடைய திருப்பதிகங்களிலே வியந்து பாராட்டப் பெற்றவரும் சமணர்கள் சொல்லிய பழித்துரை பொறாமல், அவர்கள் எல்லாரும் நாணமும் அச்சமும் எய்தத், திருவாரூர்ச் சிவபிரான் திருக்கோயிலிலே தண்ணீரால் விளக்கு எரித்தவரும் ஆன நமிநந்தியடிகள், ஒருகால்

பங்குனித் திருவிழாவில் எழுந்தருளிய ஆண்டவன் திரு வுருவினைப் பெருங்கூட்டத்திற் சென்று கண்டு வணங்கிப், பின்னர்த் தம் மனைக்கு ஏகினார். ஏகினவர், தாம் பார்ப்பன குலத்திற் பிறந்தமையால் ஏனை இழிகுலத்தார் கலந்த கூட்டத்திற் சென்று வணங்கினது, தமக்குத் தீட்டு உண்டாக்கிற்றென்று நினைந்து, தமது மனையின் உள்ளே புகாமற், புறத்தே திண்ணையில் ஒதுங்கியிருந்து, தாம் தலை முழுகி உள்நுழைந்து பூசையாற்றுதற்காகத் தண்ணீர் கொணரும்படி தம் மனைவியார்க்குக் கற்பித்தார். மனைவி யார் அவரது தலைமுழுக்குக்கு வேண்டுவன ஒழுங்குபடுத்தச் செல்ல, அவர் சிறிது கண்உறங்கினார். அப்போது அவரது கனவிற் றோன்றிய சிவபிரான், "திருவாரூரில் உள்ளவர்க ளெல்லாரும் நம் அடியார் கூட்டத்திற் சேர்ந்தவரென்பது அறிந்திலையோ! அவரை இழிகுலத்தாராக நீ கருதியது என்னை!" எனக் கூறி மறைந்தருளினர். அதுகண்டு உடனே விழித்தெழுந்த நமிநந்தியடிகள் தாம் செய்த பிழையினை நினைந்து வருந்தித், தலைமுழுகாமலே தமது இல்லத்தினுட் புகுந்து சிவபிரானுக்குப் பூசையாற்றி உணவு கொண்டு துயின்றார். மறுநாள் அவர் திருவாரூரில் இறைவனை வணங்கச் சென்றுழி, அவ்வூரில் உள்ளார் அனைவரும் முதலிற் சிவபிரான் வடிவினராய்த் திகழ்ந்து பின்னர்த் தத்தம் பழைய வடிவத்தோடுந் தோன்றக்கண்டு, அவர் அன்றுமுதற் சாதிவேற்றுமையினை ஒழித்து இனிது வாழ்ந்தார். இவ்வாறே நிகழ்ந்த வரலாறுகள் அளவிறந்தன. அவற்றைப் பெரியபுராணம் முதலான உண்மைநூல்களுட் கண்டுதெளிக.

இனி, வைணவ சமயத்துள்ளும், சாதிவேற்றுமை யானது திருமாலின் திருவடிகளை அடையவொட்டாமற் றடுக்கும் பெருந் தடையாதலைக் காட்டும் வரலாறுகள் பல இருக்கின்றன. அவற்றுட் சில மட்டும் இங்கே எடுத்துக்

காட்டுதும். திருமாலுக்குத் தொண்டுசெய்து அவரைப் பாடிய ஆழ்வார்கள் பன்னிருவரில் ஒருவரான திருப்பாணாழ்வார் என்பவர், பறையரில் இசைபாடும் வகுப்பிற் சேர்ந்த பாணர் குடியிற் பிறந்தவர் ஆவர். இவர் திருமால் திருவடிக்கண் அன்புமீதூரப் பெற்றமையால், நாடோறுங் கையில் யாழ்பற்றி வந்து, தமது குலத்தின் இழிபால் தாம் திருவரங்கப்பெருமாள் கோயிலின் உள்ளே புகக்கூடாதது பற்றிக், காவிரித் தென்னாற்றின் தென்கரையில் திருமுகத் துறையில் தொலைவில் நின்றபடியே இறைவனைப் பாடிப்பாடி நெஞ்சம் நெக்குருகுவார். இவர் இங்ஙனம் புறத்தே எட்டநின்று தொழுது உருகுதலைக் கண்டு மனம்பொறாத திருவரங்கப் பெருமாள், லோகசாரங்க முனிவர் என்னும் அந்தணர்க்குக் கனவிலே தோன்றி, "நம்பால் மெய்யன்பு பூண்டொழுகும் பாண்பெருமானை நீர் நெகிழ நினைத்துப் போகவேண்டாம்; அவரை தமது தோளில் ஏற்றிக் கொண்டு நம் பக்கலில் அழைத்துவரல்வேண்டும்" என்று கட்டளையிட்டு மறைந்தருளினர். லோகசாரங்கர் உடனே விழித்தெழுந்து இறைவனது பேரருளை நினைந்து வியந்து, விடியற்காலையில் திருமுகத்துறையிலே நீராடி, அங்குவந்து நின்று இறைவனைப் பாடாநின்ற திருப்பாணாழ்வார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப், பெருமாள் செய்த கட்டளையை அவர்க்குத் தெரிவித்து, அவரைத் தமது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு, திருக்கோயிலின் உள்ளே சென்று, அவரை அரங்கப்பெருமாள் எதிரிலேவிட்டார். என்னும் இவ் வரலாற்றினால், அன்பினால் மிக்கவர் பிறப்பினால் இழிந்தவராயினும், பிறப்பினால் உயர்ந்தோராகக் கருதப்படுவோரும் அவரை வணங்கி அவர்க்குத் தொண்டுசெயற்பால ரென்பதே இறைவனது திருவுளக்குறிப்பாதல் பெறப்படுகின்றதன்றோ?

இன்னுந், திருமழிசையாழ்வார் தாம் தாயின் கருப் பையினின்றும் வெளிப்பட்ட காலத்திலேயே தாய்தந்தை யராற் காட்டிலே தனியே விடப்பட்டு, அக் காட்டிற் பிரம்பு அறுக்கச் சென்ற திருவாளன் என்பவனாற் கண்டெடுக்கப் பட்டு, அவனாலும் அவன்றன் மனைவியாலும் வளர்க்கப் பட்டவர்; அவர் இன்ன குலத்தினரென்று பிறப்பு அறியப் படாமலிருந்தும், அவர் திருமால் திருவடிக்கண்வைத்த பேரன்பின் மிகுதியால் உயர்ந்தோராகப் பாராட்டப்படு கின்றன ரல்லரோ? இன்னும், வைணவசமயத்தவராற் பெரிது கொண்டாடப்படுந் திருமங்கையாழ்வார் மிலேச்ச குலத்திற் பிறந்தவராகச் சொல்லப்படுகின்றார். இவர் கல்வி யிற் சிறந்த பாவாணராதலோடு, திருமால் திருவடிக்கட் பேரன்புபூண் டொழுகினவர். நாலாயிரப்பிரபந்தத்தில் இவர் பாடிய செந்தமிழ்ச்சுவைப் பாடல்களே மிகுந்துள் ளன. இவர் குலத்தினாற் றாழ்ந்தோராயிருந்தும், தமது கல்விப்பெருக்கானும் பேரன்பானும் இவர் மிக உயர்த்துப் பாராட்டப்படுகின்றனரல்லரோ? இன்னும், முதலாழ்வார் களாகிய பொய்கை, பேய், பூதம் என்பவரின் குலங்கள் இன்னவை யென்பது புலப்படாதிருந்தும், அம் மூவரும் ஏனையெல்லாரினுஞ் சிறந்தோராக வழுத்தப்படுதலைக் காண்டுமல்லமோ? இன்னும், வைணவர்களால் நம்மாழ்வார் எனச் சிறந்தெடுத்துக் கொண்டாடப்படுஞ் சடகோபர் வேளாளகுலத்திற் பிறந்தவராயிருந்தும், அவர் தங் கல்விப் பெருமையினையுந் தவவொழுக்கத்தினையும் திருமால் திரு வடிக்கண் வைத்த பேரன்பினையும் நோக்கிப், பார்ப்பன குலத்திற் பிறந்தவராகிய மதுரகவி யாழ்வார் அவர்க்கு மாணாக்கராகி அவர்க்குத் தொண்டுசெய் தொழுகின ரல்லரோ? இன்னும் இங்ஙனமே பிறப்பிழிபு சிறிதுங் கருதாமல், அன்பின் மிகுதிபற்றி உயர்ந்தோராகப் பாராட்டி

வணங்கப்பட்ட வைணவப் பெரியார்கள் பற்பலர் உளர். இங்ஙனம் அன்பராயினார் எவராயினும் அவரை மகிழ்ந்து ஏற்கும் தம் ஆண்டவன் திருவுளக்குறிப்பை இனிது உணர்ந்த அவன் அடியார்கள் அவ் அன்பர்களின் பிறப்பை ஒரு சிறிதும் நோக்காது அவர்களின் அன்புக்கே மகிழ்ந்து அவர்களுடன் ஏதும் வேற்றுமையின்றி அளவளாவி இன்புற்றார்கள்.

இனிச், சிவவேடத்தைக் கண்டு பிறரை அடியார்கள் வணங்கினாலும் சிவவேடமுடையார் தாமேவந்து சொல்லுகிறபடி யெல்லாம் அடியார் நடவார் என்று போலிச் சைவர் சிலர் பொய்யுரை புகல்கின்றார். மெய்ப்பொருள் நாயனார் தம்முடைய பகைவன் சிவவேடந் தாங்கி வந்தவுடன் அவனை வணங்கியதும், அப் பகைவன் தம்மைக் கத்தியாற் குத்திய அரவங்கேட்டுத் தத்தன் என்னுங் காவலாளன் அவனைப் பிடித்துக்கொள்ள ஓடிவந்தபோது "நிறைத்த செங் குருதிசோர வீழ்கின்றார் நீண்டகையால், தறைப்படு மளவில் தத்தா நமர் எனத் தடுத்து" அவனைப் பிறர் கொல்லாமற் கொண்டுபோய்விடு என்று கூறியதும் போலிச் சைவர் அறியார் கொல்லோ! ஏனாதிநாத நாயனார் தம் பகைவனைப் போரிற் பலகால் தோல்விபெறச் செய்தமையால் அவன் இவரை வேறுவகையால் வெல்லல் ஏலாதென்று உணர்ந்து தன் நெற்றியில் திருநீறிட்டு அதனைத் தெரியாமல் மறைத்துவந்து இவரைப் போருக்கு அழைக்க, இவரும் அவனுடன் சென்று போர்புரிந்து அவனை வெட்டப் புகுந்த பொழுதில், அவன் தன் முகமறைப்பை விலக்கித் திருநீறிட்ட நெற்றியைக்காட்ட, உடனே அவர் அவனைச் சிவனடியாராக நினைத்து வெட்டாமல் விட்டுத் தம்மை அவன் வெட்டும்படி நின்றார் என்பதையும் இன்னும் இவை

போன்ற பலவற்றையும் போலிச்சைவர் அறியார் கொல்லோ! இவ் வுண்மைகளை இனிது விளக்கிய,

" மண்ணூளும் மன்னவன்றன் மகன்குணந்தீங் கிரண்டும்
வையகத்தார் பாராதே வணங்கிடுவ ரஞ்சி
எண்ணூளும் இறையமலன் திருவேடந் திருநீ
றிட்டார்கள் குணங்குணக்கே டெனுமிரண்டும்
விண்ணாளத் தீவினையை வீட்டியிட விழைந்தார் [எண்ணார்
விரும்பி அவர் அடிபணிவர் விமலனுரை விளங்கஃ
ஒண்ணுதே யெனக்கருதி ஒருப்பட்டே அமலன்
ஒப்பரிய புரிவாழ்வு மற்றையருக் குண்டோ,"

எனவும்,

"தேடிய மாடுநீடு செல்வமும் தில்லைமன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவன ஆகுமென்று
நாடிய மனத்தினோடு நாயன்மார் அணைந்தபோது
கூடிய மகிழ்ச்சிபொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்,"

எனவும்,

" வெண்ணீறும், வேடமும் பூசையும் மெய்யென்றுன்
பொய்யென்றுன், மாடையும் வாழ்க்கை மணையுமே,"

எனவும்,

" எவரேனுந் தாமாக இலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
உவராதே அவரவரைக் கண்ட போதே
யுகந்தடிமைத் திறம்நினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவ ரென்று சொல்லி
இரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழும்அடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே."

எனவும் போந்த திருவுரைகளையும் போலிச்சைவர் உணரார் கொல்லோ!

இங்ஙனம் வேடத்தைக் கண்ட அளவானே வேற்றுமை பாராது அவர்களோடு அளவளாவுதல் வேண்டுமென அறிவுநூல்கள் கட்டளையிடுமானால், அவ்வேடத்தோடு கல்வியும் நல்லியல்பும் நல்லொழுக்கமும், மெய்யறிவும், சிவநேயமும் உடையாரை எவ்வளவு கொண்டாடி அவரோடு அளவளாவி அன்பு பாராட்டல் வேண்டும்! இவற்றையெல்லாம் ஒரு சிறிதும் நோக்காது வெறுஞ் சோற்றுக்கே அழுது தீவினையை ஈட்டும் போலிச்சைவர் வேறு என்கடவர் என்க

இவை தம்மையெல்லாந் தெரிதற்குரிய பெருங்கல்வி போலிச்சைவர்மாட் டில்லையாயினும், பள்ளிக்கூடச் சிறுவர் நாடோறும் ஓதிவரும்,

"சாதி இரண்டொழிய வேறில்லை, சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி."

"கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே."

என்னும் பிற்காலத்து அரிய அறநூலின் அறிவுரைகளையேனும் அவர் தெரியப்பெறாது பெரிதும் வருந்தத்தக்க தொன்றாம்.

## ௯௰. உலக வழக்கிலும் சாதி இல்லை

இவைதாம் போலிச்சைவர் தெரியப்பெறாரேனும் உலக வழக்கையாவது தெரிந்து அவர் நலம் அடைய லாகாதா? அந்தோ! போலிச் சைவர் அறியாமை இருந்த வாறென்னே! போலிச் சைவர் ஒருவர் காமமும் பொறாமை யும் மன அழுக்கும் உடையவராகிப் பொய் பேசியும் பிறரை இகழ்ந்து உரையாடியும் பிறர் பொருளைக் கவர்ந்தும் வர, அவரைக் கண்டு "ஏ! இழிகுலத்தாய் ஏன் இங்ஙனமெல் லாம் தீது செய்கின்றாய்?" என்று வினாவினால், அதற்கு அப் போலிச் சைவர் "நானா இழிகுலத்தேன்? நான் என் தகப்பனுக்கேயன்றோ பிறந்தேன். நான் தேவாரம் ஓத வில்லையா? நான் தகப்பன் பெயர் தெரியாதவர்களிற் சேர்ந்தவனா? நான் திருவாவடுதுறை தருமபுர ஆதீனங் களில் எல்லாரோடுமிருந்து வயிறு நிறைய நன்றாய்ச் சோறு தின்று கறுத்துத் தடித்துப் பருத்திருக்கவில்லையா? பாருங்கள்!" என்று தமதுடம்பைத் திருப்பித் திருப்பிக் காட்டினால் அவர் சொற்களை உலகத்தார் ஏற்றுக்கொள்வார் களோ? "அடே பேதாய்! இவற்றை யார் உன்னைக் கேட்டார்? நீ உன் தகப்பனுக்கே பிறந்தாய் என்பது உனக்கு எப்படித் தெரியும்? பெண்களுடைய திறமையும் சூழ்ச்சியும் உனக்கெங்ஙனந் தெரியும்? முற்றத் துறந்த பட்டினத்துப் பிள்ளையார்,

"கைப்பிடி நாயகன் தூங்கையிலே யவன் கையை யெடுத்
தப்புறந் தன்னில் அசையாமல் முன்வைத் தயல்வளவில்
ஒப்புடன் சென்று துயில்நீத்துப் பின்வந் துறங்குவளை
எப்படிநான் நம்புவேன் இறைவா கச்சி யேகம்பனே."

என்று அருளிச்செய்ததை அறியாயோ? பெண்களுடைய பேச்சை நம்பி நான் என் தகப்பனுக்கே பிறந்தேன்

என்றும், பிறர் தகப்பன் பெயர் தெரியாதவர் என்றும் இகழ்ந்து பேசாதே. மறைவிலே பிறனுக்குக் கருக்கொண்டு பெற்ற பிள்ளைகளை மாதர்கள் தங்கணவன் பெயரால் வளர்த்துவிடும் நிகழ்ச்சிகள் எண்ணிறந்தன மிகவும் மறைவாய் நடந்த அவைகளைத் தெரிந்த சிலர் அவைகளைச் சில ஏதுக்கள் பற்றி வெளிவிடாமையால் அவை மறை பொருளாகவே நின்றுவிடுகின்றன. உன் இழிந்த தன்மைகளையும் செய்கைகளையும் பார்த்தால், நீ உண்மையான சைவனுக்குப் பிறந்தாய் அல்லை என்பது எமக்குத் தோன்றுகின்றது. நீ யாருக்குப் பிறந்தால் எமக்காவதென்னை? நீ தேவாரம் ஓதி என்செய? திருவாசகம் படித்து என்செய? உன் மன அழுக்கு உன்னைவிட்டு நீங்கிற்றில்லையே. ஆதீனங்களில் உடனிருந்து சோறு தின்னுவதை ஒரு பெருமையாகப் பேசிக்கொள்ளுகின்றாய். நாங்கள் கேள்விப்பட்ட மட்டில் இப்போது சைவ மடாதீனங்கள் பலவற்றில் உள்ளவர்கள் துறவிகள் என்று பெயர் மட்டும் உடையவர்களாக இருக்கின்றார்களே அல்லாமல், அவர்கள் உலக வாழ்க்கையில் ஒழுக்கங் கெட்டவர்களினும் மிக இழிந்தவர்களாகவே இருக்கிறார்கள் என்றும், அளவிறந்த அறப்பொருள்களை வைத்துக்கொண்டு அவற்றை நல்வழியிற் பயன்படுத்தாமல் தீய வழிகளில் அவற்றை வாரிவாரி இறைக்கின்றார்கள் என்றும் கேள்வியுறுகின்றோம். அப்படியிருந்தால் அவர்களோடு உடனிருந்து சோறு தின்னுவதில் உனக்கு யாது பெருமை வந்துவிட்டது? அவ்வாதீனங்களுக்கு உண்மையறிவுடையோர்கள் செல்வதில்லையென்றுங் கேள்விப்படுகிறோம். சோற்றையும் பணத்தையும் விரும்பினவர்கள் அங்கே சென்று அவர்களுக்கு இனிக்கப் பேசிக் காலங்கழிக்கின்றார்களாம். பிறரைச் சேராமல் தாமே கூடியிருந்து சோறு தின்பவரைப் பற்றிப் பெருமை பேசிக் கொள்ளு

கின்றாய். அப்படியானால் பிறவற்றைக் கிட்டே சிறிதும் அணுகவிடாமல் தாமாகவே தீனி தின்னுஞ் சில விலங்குகள் அவர்களை விடச் சிறந்தன என்றன்றோ சொல்லல் வேண்டும்? உன் அறிவு ஆ! எவ்வளவு உயர்ந்தது! அது நிற்கட்டும். நீ உனக்குள்ள தீய தன்மை தீய செயல்களினின்றும் விலகி நல்வழியில் நடவாவிட்டால் நீ இழிபிறப்பினன் ஆதல் திண்ணம்," என்று உலகத்தார் கூறுவார்களன்றோ?

அதனைக் கேட்டும் அறிவு விளங்காமல், "வேளாளர், தொண்டை மண்டில முதலிமார், கார்காத்தார், சோழியர், ஓதுவார், குருக்கள் முதலாயினாரல்லரோ உயர்ந்த சாதியார்? அவர்கள் மட்டும் அன்றோ ஒன்று கூடியிருந்து சோறு தின்னல் வேண்டும்? இழிந்த சாதியாரான இடையர், வடுகர், கள்வர், மறவர், அகம்படியர், கைக்கோளர், நாட்டுக் கோட்டைச் செட்டிமார் முதலாயினோர் வேளாளருட னிருந்து உண்ணுவது கூடாதன்றோ? இழிந்த சாதியார் மேற்கூறிய உயர்ந்த சாதியாரோடு சேர்ந்து உண்ணாமையால், சைவ குலத்திற் பிறந்தவனாகிய நான் எவ்வளவு கெட்ட ஒழுக்கமுடையவனா யிருந்தாலும் நான் உயர்ந்தவனே," என்று அப் போலிச் சைவர் கூறினால் அதனைக் கேட்ட உலகத்தார்,

"சோழியர், கார்காத்தார் முதலான வேளாளர் உள்ளபடியே இரக்க நெஞ்சமும்; கல்வியும், நல்லொழுக்கமும், சிவபிரான்மாட்டும் அடியார்மாட்டும் மெய்யன்பும் உடையவர்களாயிருந்தால் அவர்களை உயர்ந்தோர் என்று சொல்வதில் தடையில்லை. அத்தகைய உண்மை வேளாளர் மற்றைச் சாதியாரை இழிவாக நினையாமல் எல்லாரிடத்தும் இரக்கமும் அன்பும் உடையவர்களாகி, மற்றைச் சாதியாரில் உயிர்களைக் கொன்று அவற்றின் இறைச்சி உண்பவர்களைக்

கண்டால் 'நீங்கள் கொலையாலும் புலால் உண்ணுதலாலுமே இழிவடைந்தீர்கள். அவற்றை அறவே ஒழித்து எல்லா உயிர்களிடத்தும் அன்பும் அருளும் பாராட்டுவீர்களானால் நீங்கள் சிவபெருமான் திருவருளைப் பெறுதல் திண்ணம். நீங்களும் நம்முடனே கலந்து உறவாடலாம்,' என்று பல காலும் எடுத்துச் சொல்லி அவர்களைத் திருத்தி, அங்ஙனம் திருந்தினவர்களைத் தம்மோடு உடன்வைத்து உண்டு அளவளாவி வாழ்வார்கள்; அருளொழுக்கத்தைப் பரவச்செய்து சிவபிரான் திருவடித் தொண்டை விளக்குங் கலைஞரையும் தவப்பெரியாரையுங் கண்டால் அவரிடத்து அன்பினால் அகங்குழையப் பெற்றவராகி அவர்க்கு அடிமை பூண்டு ஒழுகுவர். இத்தகைய உண்மைச் சைவர்களாலே நாடெங்கும் அருள் ஒழுக்கமும் சிவத்தொண்டும் மிகும்; உயர்ந்த வொழுக்கமுடைய உயர்ந்த சாதியாரோடு ஒன்றுசேர்ந்து அளவளாவலாம் என்ற எண்ணத்தால், கொலைத் தொழிலையும் புலாலுணவையும் பிறர் எல்லாரும் அறவே ஒழித்து மேம்படுவார்கள்.

"இங்ஙனம் செய்வதை விடுத்து ஏ பேதாய், 'பிறர் எவ்வளவுதான் நல்லொழுக்க முள்ளவர்களாய்த் திருந்தினாலும், நான் எவ்வளவுதான் கெட்ட ஒழுக்க முள்ளவனானாலும், நான் சைவகுலத்திற் பிறந்தவனாகையால் அவர்களோடிருந்து சோறுண்ண மாட்டேன்,' என்கின்றாய். இழிந்த இயற்கை இழிந்த செய்கையால் இழிந்த பிறப்படைந்த உன்னுடனிருந்து சோறுண்டால் நல்லொழுக்கத்தில் திருந்திய அவர்களுக்கும் இழிவேயாகு மல்லது உயர்வு ஏது? ஆகையால், சோறேசோறென்று சோற்றையே கட்டிக்கொண்டு அழும் போலிச் சைவனை உன்னை, அருளொழுக்கத்திற் சிறந்த உண்மைச் சைவர்கள் தம்முடன் சேர்க்க மிகக் கூசுவர் அல்லரோ? சில காலத்துள் அழிந்துபோவ

தாகிய உடம்பையும் அவ்வுடம்புக்கு இடும் சோற்றையுமே பெரியனவாக எண்ணி அறியாமையால் மிகவும் இறுமாப்படைந்து பிதற்றும் நீயும் உன்னையொத்த சிலருங் கூறும் பொருந்தாச் சொற்கள் நாம் சிறிதுங் கருத்தில் வைக்கத் தக்கனவல்ல,'' என்று சொல்லாமற் போவார்களோ?

இங்ஙனம் உலகத்தார் கூறும் உலக வழக்கையும் போலிச் சைவர்கள் உணராமல் தம்மையுயர்த்தியும் பிறரைத் தாழ்த்தியும் செருக்குற்று உரைக்கின்றார்கள்! இவர் பிறப்பினாலேயே தம்மை உயர்ந்தவர் என்று சொல்லிக் கொள்வாரானால், அவ்வாறு சொல்வதனால் இவருக்கு இழிவே உண்டாகுமல்லாமல் உயர்வுண்டாதற்குச் சிறிதும் இடம் இல்லை. ஏனென்றால், பிறப்பினால் தம்மைப் பிராமணர் என்று சொல்லிக் கொள்பவர்கள் தம்மைத் தவிர மற்ற எல்லாரையும் சூத்திரர் என்றே அழைக்கின்றார்கள். ஊன் உண்பவரும் உண்ணாதவரும் ஆகிய எல்லாரையும் அவர்கள் ஒரே வகையாகத்தான் நடத்துகின்றார்கள். ஊன் உண்பவன் அவர்கள் வீட்டுக்கு விருந்ினனாய்ச் சென்றால் அவனுக்குப் பிராமணர் தாம் உண்டு மிகுந்த எச்சிலையே புறத்தே வைத்து இடுகின்றார்கள்; ஊன் உண்ணாதவன் போனாலும் அவனுக்கும் தாமுண்டு கழித்த எச்சிற் சோற்றையே புறத்தே வைத்து இடுகின்றார்கள். போலிச் சைவர் பிறப்பினால் உயர்ந்தவராயிருந்தால் தம்போற் பிறப்பினாலுயர்ந்த பிராமணருடனிருந்து உண்கின்றதுதானே? பிறப்பினாலேதான் சாதியென்று சொல்லும் போலிச் சைவர் தம்மைச் சூத்திரர் என்று தாமே ஒப்புக்கொள்வதனால் அவர் அச் சூத்திர வகுப்பினின்று தப்பவகையில்லை; அங்ஙனஞ் சூத்திரரான இவர் மனுமுதலிய மிருதிநூல்களின்படி பிராமணர் கடைவாயிலிற் காத்திருந்து அவர் காலலிட்ட

பணியைத் தாம் தலையாற்செய்து அவர் இடும் எச்சிற் சோற்றை உண்டு ஊழியக்காரராய்க் காலங்கழிக்க வேண்டு மேயல்லாமற், பட்டை பட்டையாய்த் திருநீறு பூசிக் கொண்டு, பகட்டான காசித் துப்பட்டா பொன்கட்டின உருத்திராக்கமாலை எல்லாம் அணிந்துகொண்டு, தம்மினும் பிறப்பினுல் உயர்ந்த பிராமணருக் கெதிரில் ஒப்பாய் நின்று தேவாரம் ஓதுவதும், நூல்கள் கற்பதும் பிறவுஞ் செய்தல் பெரிதும் இகழத்தக்க பகைமைச் செயல்களாய் முடியும் அல்லவோ? பிறப்பினுலேதான் சாதி என்று சொல்ல முன் வந்த போலிச் சைவர் தம் புன்மொழியால் அருளொழுக் கத்திலும் சிவத்தொண்டிலும் அடியார்பால் அன்பினுஞ் சிறந்து விளங்கும் உண்மைச் சைவவேளாளரையும் பிறரை யும் இழிந்த சூத்திரராக்கி விட்டாரே! அந்தோ! உண்மைச் சைவர்களாகிய அன்பர்களே! பிறப்பினுலேதான் சாதி யென்று உரைக்கும் போலிச் சைவர் புன்மொழிகளைக் கேட்டு மயங்கிவிடாதீர்கள்! பிறப்பினுலேதான் சாதியென் னும் அவர் சொற்களைக் கேட்டு நம்பிவிடுவீர்களானல், நீங்கள் எல்லீரும் இழிந்த சூத்திரராகக் கொள்ளப்படுவீர் கள்; ஊன் உண்கின்றவர்களுக்கும் ஊன் உண்ணுமல் அருளொழுக்கத்தில் நிற்கின்ற உங்களுக்கும் வேறுபாடு இல்லாமற் போய்விடும். யாம் வடமொழி வேதம் தமிழ் மறை முதலியவற்றையும் உலக வழக்கையும் மேற்கோளாகக் கொண்டு அருள் ஒழுக்கத்தினுலேதான் சாதி உயர்வுண்டு என்று சொல்லுவனவற்றை நம்புவீர்களானல், நீங்கள் மிக உயர்ந்த சாதியாராக அறிவுடையோர் எல்லாராலும் நன்கு பாராட்டப்படுதல் திண்ணம். அறிவுடையார் பாராட்டு தலையே சிறாட்டாகக் கொண்மின்கள்; அறிவில்லார் பாராட்டை ஒருபொருட்டாக எண்ணுதீர்கள்; அறிவில்லார்

ஆயிரவர் பாராட்டுதலினும் அறிவுடையார் ஒருவர் பாராட்டுதலே உயர்ந்ததாகுமென்று உணர்மின்கள்!

அங்ஙனமாயின் "இழியாக்குலத்திற் பிறந்தோம்," "குலம் பொல்லேன்" என்று சமயாசிரியரான திருநாவுக்கரசு நாயனார் குலத்தின் உயர்வையும் தாழ்வையும் எடுத்துக் கூறியது என்னையெனின்; 'அருள் ஒழுக்கத்தில் மிகுந்து சிவபிரானிடத்தும் அடியாரிடத்தும் அன்பு மிக்க குலத்திற் பிறந்தோம்' என்றும், 'அவ்வொழுக்கங்கள் இல்லாத குலத்திற் பிறந்தோம்' என்றும் பொருள் கூறுதலே ஆசிரியர் நாயனார் கருத்தாமென்று துணிக. இவ்வுண்மை யுணராது பிறப்பினாலேயே குலப்பெருமை சொல்லுவாரின் அறியாமையைச் "சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள், கோத்திரமுங் குலமுங்கொண் டென்செய்வீர்" என்று நாயனாரே திருவாய் மலர்ந்தருளிய திருப்பாட்டால் உணர்ந்து தெளிக. பிறப்பினாற் சைவரென்று தம்மை உயர்த்துச் சொல்லிக்கொள்வோரிற் சிலர் அருளும் இரக்கமும் சிவபிரானிடத்து மெய்யன்பும் அடியார் பணியும் இல்லாராய்ச், செருக்கு மிகுந்து, பொய்யும் புனைசுருட்டும் கள்ளமும் பொறாமையும் நிரம்பிப், பிறரைக் கொல்லாமற் கொல்லுவதிற் கருத்தூன்றி அலைகின்றார்கள்; இத் தன்மையோரை உயர்ந்த குலத்தவர் என்றுகூற அறிவுடையோர்க்கு நா எழுமா? உலகத்தாரும் அறிவுடையாரும் ஒருவன் பிறப்பை நோக்காது 'அவன் கல்வியன்பு உள்ளவனா? நல்லொழுக்கம் வாய்ந்தவனா?' என்றன்றோ வினவுகின்றார்கள். ஆசிரியர் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் தாம் 'குடிமை' என்னும் இயலில் உயர்குலம் இழிகுலம் என்றன ஒழுக்கத்தாற் சிறந்த குலம் ஒழுக்கத்தாற் றாழ்ந்தகுலம் என்று வெள்ளிடைமலைபோல் விளங்க உரைத்தாராகவும், ஆசிரியர் கருத்தறிந்த பரிமேலழகியாரும்

'நான்கு வருணத்திலும் உயர்குலமும் தாழ்குலமும் உண்டென்பதை விளக்கினாராகவும் அவற்றை அறியும் அறிவு மதுகை சிறிதுமில்லாத போலிச் சைவர் குலம் பிறப்பினாலேதான் உளது என்று நாயனாருஞ் சொன்னாரெனத் தமக்குத் தோன்றியவாறெல்லாம் பிதற்றுவர்; அவர் பிதற்றுரையின் பொய்ம்மையை யாம் மேலே எடுத்துக் காட்டிய "ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம், இழிந்த பிறப்பாய்விடும்." என்னும் நாயனாரது அருமைத் திருக்குறளால் தெளிந்துணர்க. தாய்தந்தையரும் அவருக்கு நெருங்கியவர்களும் நல்லியல்பு நற்செய்கையிற் சிறந்து விளங்குபவராயின், அவர் கூட்டத்தை நற்குடி என்றும், அந் நற்குடியிற் பிறந்த பிள்ளையினிடத்து அந் நல்லியல்பு நற்செய்கைகள் அமையப்பெறும் என்றுங் கூறுதலே நாயனார்க்குக் கருத்தாதல் "தக்கார் தகவில ரென்ப தவரவர், எச்சத்தாற் காணப் படும்" என்னும் அவர் திருமொழியால் நன்கு துணியப்படும். ஒழுக்கத்தினாலேதான் குலத்தினுயர்வு பெறப்படும் என்று தமது நூல் முழுதும் வற்புறுத்திச் சொல்லும் திருவள்ளுவ நாயனாரையும் தமது புல்லறிவுக்குத் துணைகொண்டு சேர்க்கப் பார்க்கும் போலிச் சைவர் தம் கருத்து நிறைவேற வேறு எதுதான் செய்ய மாட்டார்! அது நிற்க.

அங்ஙனம் ஒழுக்கத்தினாலேயே உயர்வு பெறப்படல் வேண்டுமாயின், திருநாளைப்போவாரென்னும் நந்தனார் சிவத்தொண்டில் தாம் மிக முதிர்ச்சியுடையராயிருந்தும் தமது குலத்தின் இழிவு நோக்கித் தில்லைக் கோயிலுட் புகாமற் புறத்தே ஒதுங்கி நின்றதும், சிவபெருமான் அவரை உட்புகுவித்தல் வேண்டித் தில்லைவாழ் அந்தணரைக்கொண்டு தீவளர்ப்பித்து அதன்கண் நந்தனாரை முழுகுவித்துத் தேவவடிவாக எழச்செய்து பின்னர் உள்ளே

ஏற்றுக்கொண்டதும் என்னையென்றால்; பறைச்சாதி மற்றைச்சாதிகளைப் போல்வதன்று; மிகவுந் தூயதாய் எல்லாத் தேவர்களும் தன்கண் அமையப் பெற்றதென்று சிவதருமோத்தரத்திற் பாராட்டப்பட்டதாய்ச் சிவபெருமானுக்குப் பால் தயிர் நெய் நீர் சாணகம் என்னும் ஐந்தினைக் கொடுப்பதாய் உள்ள ஆவினை அச் சாதியார் கொன்று அவற்றின் இறைச்சியை யுண்ணும் புலைத்தொழிலிற் பழகியவராவர்; இங்ஙனம் மிகக் கொடிதான புலையொழுக்கத்திற் பயின்றது பற்றியே பறைச்சாதி ஏனை எல்லாச் சாதிகளிலும் இழிவடையலாயிற்று; இங்ஙனம் இது தாழ்வடையலானதும் ஒழுக்கத் தாழ்வினாலேதான். மற்றச் சாதியாரெல்லாம் ஒன்றுகூடி உறையும் நாடு நகரங்களுக்குப் புறத்தே விலக்கமாகப் பறைச்சேரி அமைக்கப்பட்டிருத்தலும் இந்த ஏதுவினாலேதான். இத் தன்மையதான அறிவில்லாப் புலைச்சாதியில் நந்தனார் பிறந்தமையினாலே இவரது பெருமையைப் பிறர் அறியார் என்றெண்ணி அதனை அறிவிக்கும் பொருட்டே சிவபெருமான் அங்ஙனஞ் செய்தனரென்றுணர்க.

அல்லதூஉம், சிவத்தொண்டின் மேன்மையை அறிவித்தற்கும், சிவநேயம் உண்டானாற் புலையுடம்பும் புனிதவுடம்பாம் என்பதனை உலகத்திலுள்ள எல்லார்க்குந் தெளிவித்தற்குமே சிவபெருமான் நந்தனாரை நெருப்பில் முழுகுவித்து எழச்செய்தார் என்க. அவ்வாறாயினும், ஊன் உண்ணும் மற்றைச் சாதியாரும் ஊனைவிட்டுச் சிவநேயத்தில் மேம்படுவாராயின் அவரைச் சைவர்கள் ஏற்றுக்கொள்ளுமுன், சிவபெருமான் அவர் பெருமையை அங்ஙனமே ஓர் அருஞ்செயலால் அறிவித்தல் வேண்டுமெனின்; சிவநேயத்திற் சிறந்த அடியார்க்குப் புலையுடம்பும் புனிதவுடம்பாம் என்பதனை ஒருகாலத்து ஓரிடத்து ஓர் அரிய

நிகழ்ச்சியால் தெளியச் செய்தால், அதனைப் பிற்காலத்து வருவோர் ஏற்றுப் பின்னர் அடியார் பணிசெய்து நடத்தல் வேண்டுமே யல்லாமல் ஒவ்வொரு முறையும் ஒரு புதுமை செய்து காட்டினால்தான் இவரை அடியார் என்று ஏற்போம் என்றால் அறிவில்லா விழலர் கூற்றாய் முடியும்; திருஞானசம்பந்தப் பெருமான் சைவ சமயமே மெய்ச்சமயம் என்பதனை வெப்புநோய் நீக்கியும் அனலில் ஏடெழுதி யிட்டும் புனலில் ஏடெழுதி விட்டும் பற்பல செயற்கரிய செய்கைகளால் இனிது விளக்கியருளினார்; அது போலவே, இப்போது சைவ சமயமே மெய்ச்சமயம் என்று நாட்ட வருகிறவர்களும் அங்ஙனமே செயற்கரியது செய்து காட்டினால்தான் அதனை ஏற்றுக்கொள்வோம் என்று கூறுவாருண்டோ? இல்லையே. அங்ஙனமே, சிவநேயம் உடையார்க்குப் புலையுடம்பும் புனிதவுடம்பாமென்பதை நந்தனாரைக் கொண்டு ஒரு புதுமையாற் சிவபெருமான் ஒரு முறை விளக்கிக் காட்டினால், அவ்வாறே பலமுறையும் விளக்கல் வேண்டுமென்று அறிவுடையோர் கூறார். அகத்தேயுள்ள சிவநேயம் என்கிற சிவநெருப்பினால் சிவனடியாருடம்பு தூய்மையுடைய ஒளியுடம்பாகும் என்பதனையே, நந்தனார் புறத்தே நெருப்பிற்குளித்த அரிய நிகழ்ச்சி விளக்குவதாகும். சிவநேயம் உடையார்க்கு அகக்கருவி புறக்கருவிக ளெல்லாம் சிவவுருவாய் விளங்குமாகலின் அவரைப் பிறப்பு நோக்காது சிவமாகவே கொண்டு வழிபடல் வேண்டு மென்னும் உண்மையை உணர்த்துதற் கன்றோ, திருநாவுக்கரசு நாயனார்,

"சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவா ரவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க்கேகாந்த ரல்லராகில்

அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே.''

என்று அருளிச்செய்தனர். இங்ஙனமே, ''யச்சண்டாளசிவ இதிவாசம்'' என்னும் முண்டகோபநிடத வுரையானது எவன் ஒருவன் சிவ என்னும் மொழியைச் சொல்லுகின்றானோ அவன் சண்டாள குடும்பத்திற் பிறந்தவனாயிருந்தாலும் அவனோடு பேசுக, அவனோடு இருக்க, அவனோடு அருகிருந்து உண்ணுக என்று கூறுகின்றது. இங்ஙனமே,

''புலையரே யெனினும் ஈசன் பொலன்கழ லடியிற் புந்தி
நிலையரே லவர்க்குப் பூசை நிகழ்த்துதல் நெறியே யென்றுந்
தலையரே யெனினும் ஈசன் றமரைத் தானின் நேசம்
இலரெனில் இயற்றும் பூசைப் பலந்தருவாரே யாரே!''

என்று சிவதருமோத்தரமும்,

''எள்ளற் படுகீழ் மக்களெனும் இழிந்தகுலத்தோ ரானாலும்
வள்ளற் பரமன் றிருநீறு மணியுமணிந்த மாண்பினரை
யுள்ளத்துள்ளே யிருபோது முணர்ந்து தெருண்டு சிவமெனவே
கொள்ளத் தகைய அறிவினரே பிறவிக்கடலிற் குளியாதார்.''

என்று பிரமோத்தர காண்டத்தும் சொல்லப்பட்டிருத்தல் காண்க.

இவை போலுந் திருவுரைகளுக்கெல்லாம் வழிசொலத் தெரியாத போலிச் சைவர் அன்பினாற் செய்வனவற்றிற்கு முறையும் விலக்கும் இல்லை; மற்றை உலக வழக்கத்திற்கோ சாதி வேற்றுமை பாராட்டியே வரல்வேண்டும் என்கின்றார். உலகவழக்கிலும் ஒருவனை அவன் பிறப்பு நோக்காது அவன் கல்வியறிவினையும் நல்லியல்பு நற்செய்கைகளையுமே பாராட்டி அவனைப் பலவகையாலும் பெருமைப் படுத்தி உயர்ந்த நிலைகளையும் வரிசைகளையும் அளிக்கின்

றார்கள் என்பதனை மேலே விளக்கிக் காட்டினாம். ஆதலால், அன்புநெறிக்குத்தான் சாதிவேற்றுமை இல்லை, உலக நெறிக்குச் சாதிவேற்றுமை உண்டு என்னும் போலிச் சைவர் கூற்றுப் பொய்க்கூற்றேயாம் என்க. அங்ஙனமன்று, பிறப்பினாற் றாழ்ந்தவனுக்குக் கல்வியும் நல்லியல்பு நற்செய்கைகளும் பற்றி உயர்ந்த நிலைகளும் வரிசைகளும் அளித்தும் அறிவுடையோர் கூடிய அவைகளில் முன் அமரச்செய்தும் அவனைப் பெரிது பாராட்டினாலும், உயர்ந்த சாதியார் அவனோடு அருகிருந்து உண்பதில்லையேயெனின்; போலிச் சைவர்தாம் அப் பெரியவனோடு அருகிருந்து உண்ணோம் என்று தமது அறியாமையாற் செருக்குற்றுப் பேசுவார்களே யல்லாமல், உண்மைச் சைவர் அப் பெரியவனோடு அளவளாவி யிருந்துண்டு நல்வினையும் மகிழ்ச்சியும் எய்துவர்; அறிவுவடிவாய் விளங்குங் கற்றோர் கழகங்களில் தலைமையோ டிருந்து அறிவுரை நிகழ்த்துங்கால் அப் பெரியோன் காற்கீழிருந்து அதனைக் கேட்டும், அவன் உயர்ந்த நிலையில் அமர்ந்திருக்குங்கால் அவனெதிரே கைகட்டி வாய் புதைத்து நின்று அவன் ஏவிய பணிசெய்தும், தமது தாழ்மையைக் காட்டி வந்த போலிச் சைவர் சிலர் சோறு தின்னும்போது மட்டும் தாம் அவனோடிருந்து உண்பதில்லை என வெறுஞ்சோற்றுப் பேச்சைப் பேசித் தம்மைத்தாமே உயர்த்திக்கொள்ளும் பதரான பேதைமைச் செய்கையைக் கண்டு அறிவுடையோர் நகையாடாமல் இரார். சாப்பாட்டு ராமசாமிகளான போலிச் சைவருக்குச் சோற்றைத்தவிர வேறு யாது தெரியப்போகின்றது! ஒருவரிடத்துள்ள அறிவின் அருமையும் நல்லியல்பு நல்லொழுக்கங்களின் பெருமையுஞ் சோற்றாட்களுக்கு எங்ஙனந் தெரியும்? அவர்களுக்குச் சோறுதான் தெய்வம்; ஊனுங் குருதியும் சீழுஞ் சளியும் நீரும் மலமும் வழியும் புழுப்பாண்டமான

தமது உடம்பின் பிறப்புத்தான் அவர்களுக்குத் தேவப் பிறப்பு!

கடவுள் அன்பிற் சிறந்தவர்களுக்கும் அறிவுமிக்க துறவிகளுக்குந்தாம் சாதிவேற்றுமை இல்லையென்று போலிச் சைவர் மொழிந்தால், தெய்வமில்லை யென்னும் நாத்திகர்களுக்கும் அறிவிலிகளுக்குந்தாம் சாதிவேற்றுமை வேண்டுமென்பது பெறப்படும். போலிச் சைவர் சாதிவேற்றுமையைப் பாராட்டிக்கொண்டு அறியாமைச் சேற்றிலும் நாத்திகப் படுகுழியிலுமே கிடக்க வேண்டுமென்று விரும்பினாரானால், அவர் அப்படியே கிடக்கட்டும். தமது புல்லறிவை உண்மைச் சைவர்களிடங் காட்டி அவர்களையுந் தாங்கிடக்கும் படுகுழியில் வீழ்த்த முயல்வாராயின், அவரது புல்லிய செய்கையைக் கண்டு அறிவுடையார் வருந்தாதிருப்பரோ? எமக்கு அன்பும் வேண்டாம் அறிவும் வேண்டாம் நல்லியல்பு நற்செய்கைகளும் வேண்டாம், அவற்றிற் சிறந்த நல்லோரிணக்கமும் வேண்டாம், எமக்குச் சோறு ஒன்றுதான் முதன்மையானது, அதுமட்டுந்தான் எமக்குவேண்டியது என்று போலிச்சைவர் சொல்வாரானால், அவ்வளவு அறியாமையிலும் ஆணவத்திலும் அமிழ்ந்திக்கிடக்கும் அவர் இன்னும் பலகோடி பிறவிகள் எடுத்தாலன்றித் திருந்தமாட்டார்; ஆகையால், அத் தன்மையோரைத் தம்மோடு உடன் வைத்து அளவளாவுதல் உண்மைச் சைவர்க்குப் பெருந் தீவினையாய் முடியுமாதலால் அவர்களை இவர்கள் சேராமல் ஒழுகுதலே செயற்பாலர்.

இன்னும், பிறப்பினாலேதான் சாதியுயர்வு பெறப்படுமென்று போலிச்சைவர் கூறுவாரானால், சைவவேளாளர் தம்மைப் பிறப்பினால் உயர்ந்தோர் என்று கூறிக்கொள்வது

போலவே, மற்றைச் சாதியாரும் தம்மைத் தாம் உயர்ந்தோர் என்று சொல்லிக்கொள்கின்றார்கள். ராஜபுத்திரர் என்னுஞ் சாதியார் தாம் ஊன் உண்பவராயிருந்தாலும் பார்ப்பனர் முதலான எந்தச் சாதியார் வீட்டிலும் தாம் சாப்பிடுவதில்லாமையால் தாமே எல்லாச் சாதியாரினும் உயர்ந்தோர் என்று சொல்லிக்கொள்கின்றார். கம்மாளர் தாமே பார்ப்பனர் என்று மேற்கோள்கள் பல காட்டித் தம்மை உயர்த்திக்கொள்கின்றார். வன்னியர் தாமே 'சத்திரியர்' என்று மேற்கோள்களோடு நூல்கள் எழுதித் தம்மை உயர்த்திக்கொள்வதோடு, வேளாளர் முதலான மற்றவரை எல்லாம் தாழ்ந்த சூத்திரவகுப்பினர் எனவுஞ் சொல்லி வருகின்றார். சான்றார் தாமே 'சத்திரியர்' என்று இதழ்களினும் நூல்களினும் எழுதிவருகின்றார். இடையர் தம்மைக் 'கோவைசியர்' எனவும், கோமுட்டிகள் வாணிகர் முதலாயினார் தம்மைத் 'தனவைசியர்' எனவுஞ் சொல்லி வருகின்றனர். வேளாளரில் ஒருவரும் தமது சாதியாரை 'வைசியர்' என எழுதியிருக்கின்றார். நாட்டுக்கோட்டைச் செட்டிமாரும் தம்மைத் தனவைசியரென்று எழுதி வருகின்றார். பறையர் வகுப்பிற் கல்வியிற் றேர்ந்தவர்கள் தம்மைப் பார்ப்பனரினும் மேலானவர் என்று சொல்வதோடு, "பார்ப்பானுக்கு மூத்தான் பறையன் கேட்பாரில்லாமற் கீழ்ச்சாதியானான்." என்று மேற்கோள்களுங் காட்டுகின்றார்கள். இப் பறையரிற் கல்வியினுஞ் செல்வத்தினும் உயர்ந்த செல்வர்களின் கடைவாயிலிற் காத்திருந்து அவர் இடுவனவற்றைப் பெற்று மகிழ்ந்து வரும் வேளாளப் புலவர்கள் எத்தனை பெயர்! போலிச்சைவர் எத்தனை பெயர்! அவர்கள்மேற் பாட்டுகள் பாடினவர்களும், பாடுகிறவர்களும் எத்தனை பெயர்! இவ்வாறெல்லாம் அவர்கள் வீசி எறிவனவற்றைக் குனிந்து பொறுக்கியுண்டு வயிறு கழுவி

வரும் போலிச்சைவர் முதலாயினோர் புறத்தே வந்து நன்றி மறந்து அச் செல்வர்களைப் பறையரென இகழ்ந்துரைப்பது எவ்வளவு பேதைமை! சைவசமயத்திற் சேர்ந்த பறையரையுஞ் சான்றாரையுங் கோயிற்கோபுரவாயில்களினும் நெருங்கவிடாத போலிச்சைவர் முதலாயினோர், புறச் சமயத்தினராய் எல்லாவகையான ஊனும் உண்ணும் இழிந்தவ மகமதிய அதிகாரிகள் வந்தால் அவர்கள்முன் பல்லை இளித்துக் காட்டி அவர்களைக் கோயிலினுள்ளே அழைத்துச் செல்வது என்னை! இங்ஙனமே இன்னும் போலிச்சைவர் முதலாயினோர் மற்றையோரிடத்துக் கள்ளமாய் நடக்கும் படிற்றொழுக்கத்தை விரிக்கப்புகுந்தால் இது மிகவிரியும். எனவே, உலகவழக்கில் நிகழும் உண்மை நிகழ்ச்சிகளை உற்று ஆராய்ந்துபார்த்தால், மறைவாகவும் வெளிப்படையாகவும் ஒரு வகுப்பாருடன் மற்றொரு வகுப்பார் கலந்துவிடுதல் இயல்பாகப் பண்டுதொட்டு நிகழ்ந்து வருதலை நன்கு அறியலாம். ஒரு வகுப்பினரின் இரத்தத்தில் மற்றொரு வகுப்பினரின் இரத்தங் கலந்துவிடுதல் இஞ்ஞான்று எங்கும் நிகழ்தல்போலவே, பண்டைநாளிலிருந்த நம்முன்னோரிலும் ஒருவகுப்பினரின் இரத்தத்தில் மற்றொரு வகுப்பினரின் இரத்தங் கலந்து வந்தமை பழைய நூல்களில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. சதபத பிராமணத்தில் (௩, ௨, ௧, ௪௦), "இந்தப் பார்ப்பனன் இப்போதுதான் தூயனாக்கப்பட்டான்; இதற்குமுன் இவன் இன்ன பிறப்பினனென்பது திண்ணமாய்த் தெரியாது. ஏனென்றால் 'அரக்கர்கள் மாதர்களைப் பின்றொடர்ந்து செல்கின்றார்கள்; ஆதலால், அரக்கர்களே மாதர்களின் உள்ளே வித்தை நுழைக்கின்றார்கள்' என்பது நுவலப்பட்டிருக்கின்றது. இன்னும், அந் நூலில் (௨, ௫, ௨, ௨௦), வேள்வி வேட்கும் வேள்வியாசிரியன் மனைவிக்குக் காமக்

கணவர் பலர் உளரென்றும், அதனால் அவன் 'வருணப் பிரகாசம்' என்னும் அவியைக் கொடுக்கும் நேரத்தில் தன் மனையாளை வேள்விக்களத்திற்குக் கொணர்ந்து 'இப்போது எந்தக் கணவனோடு கூடியிருக்கின்றனை?' எனக் கேட்டு, அவளது வாய்ப்பிறப்பையறிந்து உண்மை தெரிந்தபின், அவளுடனிருந்து அவ் அவியைக் கொடுக்கும்வகை நன்கெடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்ஙனமே மகாபாரதம், ஆதிபருவத்தில் (௧௨௨, ௪௭௧௬) "மாதர்கள் தம் கணவரைவிட்டுப் போய்த் தம்மால் விரும்பப்பட்டோருடன் கூடியிருத்தல் குற்றமாகக் கருதப்படவில்லை" என்பது கூறப்பட்டிருக்கின்றது. இன்னும் அதன் வனபர்வத்தில் (௧௨௪௮0), ஒரு மலைப்பாம்பிற்குந் தருமபுத்திரனுக்கும் இடைநிகழ்ந்த உரையாட்டில், அம் மலைப்பாம்பு "ஒருவனது செய்கையைக்கொண்டே அவனைப் பார்ப்பனன் என்று உறுதிப்படுத்தல் வேண்டுமென்றால், செய்கையானது தெரியும் வரையிற் பிறப்புப் பயனற்றதாகின்றது" என்று தருமபுத்திரனை நோக்கிக் கூற, அவன், "எல்லாச் சாதிகளும் ஒன்றோடொன்று கலப்புற்று நிற்கும் இப்போதுள்ள நிலைமையிற், பிறப்பு இன்னதென்று பிரித்துக் காண்டல் இயலாததேயாகும்; எல்லாவகையான ஆண்மக்களும் எல்லாவகையான பெண்மக்களோடுங் கூடித் தொடர்பாகப் பிள்ளைகளைப் பெறுகின்றார்கள். பேச்சும், பிள்ளைப்பெறும் வகையும், பிறப்பும், இறப்பும் எல்லா மக்களுள்ளும் ஒரு தன்மையவாகவே காணப்படுகின்றன. ஆதலால், உண்மையை உற்றுணரும் நுண்ணறிவினோர் உயர்ந்த ஒழுக்கமே முதன்மையாக வேண்டற்பாலதென அறிகின்றார்கள்," என விடை புகலுமாற்றால், தருமபுத்திரன் இருந்த இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னரேயே ஒருசாதிமக்கள் மற்றொரு சாதி மக்களொடு

கலப்புற்று நின்றமை தெற்றென அறியப்படுதலால், அவர் வழியில் வந்தோரான நம்மனோருள் எவரையுங் கலப்பில்லாத் தனி இனத்தவரெனக் கூறுதல் தினைத்தனையும் ஆகாமை காண்க. இவ்வாறே, சாதிக் கலப்பால் வெளிப்படையாக உண்டான பல்வேறு சாதிகளை மநு முதலியோரும் வகுத்துரைக்கின்றனர். "ஒரு பார்ப்பனனுக்கு ஒரு வைசியப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'அம்பட்டன்' எனப்படுவான்; ஒரு சூத்திரப்பெண்ணினிடத்தே பிறந்தவன் 'நிஷாதன்' அல்லது 'பாரசவன்' எனப்படுவான். ஒரு சத்திரியனுக்கு ஒரு சூத்திரப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'உக்ரன்' எனப்படுவான். ஒரு சத்திரியனுக்கு ஒரு பார்ப்பனப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'சூதன்' எனப்படுவான். ஒரு வைசியனுக்கு ஒரு சத்திரியப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'மாகதன்' எனவும், ஒரு பார்ப்பனப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'வைதேகன்' எனவும் பெயர்பெறுவான். ஒரு சூத்திரனுக்கு ஒரு வைசியப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'ஆயோகவன்' எனவும், ஒரு சத்திரியப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'சத்திரி' எனவும், ஒரு பார்ப்பனப் பெண்ணினிடத்தே பிறந்தவன் 'சண்டாளன்' எனவும் பெயர்பெறுவான்." என்றற் றொடக்கத்தனவாக இன்னும் பற்பல கலப்புச் சாதியார்களையும் மனுநூல் பத்தாம் இயலில் ஆறாஞ் செய்யுளிலிருந்து முப்பத்தொன்பதாஞ் செய்யுள்காறும் விரித்துரைத்தல் காண்க. இங்ஙனமே கௌதமர், வசிட்டர், போதாயனர் இயற்றிய தருமநூல்களுங் கலப்புச் சாதிகளை விரிவாயெடுத்துக் கூறுதல் கண்டுகொள்க. இவ்வாறு பண்டைக்காலந்தொட்டே மக்கள் ஒருவரோடு ஒருவர் பலவாறு கலந்து வருதலால், அம்முன்னோர் கால் வழியில் வந்தோரான நம்மனோரில் எவருந் தம்மைக்

கலப்பில்லாத் தனிப்பிறவியாகச் சொல்லிக் கொள்ளு தலினும் பெரும் பேதைமை பிறிதில்லை. காமமுங், காதலும், பசியும் பொருண்மேல் அவாவும் உள்ளவரையில் மக்களுள் எவருங் கலப்பில்லாத் தனியாய் இருந்து உயிர் வாழ்தல் இயலாது. இக்காமம் முதலியவற்றின் சொந்தளிப்பு களைத் தணிக்கும்பொருட்டு அறிவுடையோர் எத்தனையோ நூல்களை எழுதிவைத்தும், எத்தனையோ சாதிக் கட்டுப் பாடுகளைச் செய்துவைத்தும், அவையெல்லாம் அவற்றின் எழுச்சிக்குமுன் பஞ்சாய்ப் பறந்துபோகின்றன. ஆகவே, மக்கட்பிறவி யென்கின்ற பேராற்றிலே இயல்பாக அமைந்த பெருஞ் சுழல்களாகிய காமங் காதல் பசி பொருட்பற்று என்னும் இவைகளைச் சாதிக்கட்டுப்பாடு என்னும் வைக்கோற் றிரணைகொண்டு தடுத்தல் சிறிதும் இயலா தாகையாற், சொல்லளவாயுள்ள அச் சாதிக் கட்டுப்பாடு களைத் தொலைத்து, அறிவுமிக்க உயர்ந்த முறைகளால் அவற்றின் மும்முரத்தைத் தணித்தலே விரைவிற் செயற் பாலதாகும் என்க.

## எ. சாதி வேற்றுமைகளை ஒழிக்கும் வழிகள்

இனி, மக்களுக்குப் பெருந்தீங்கு பயப்பனவாகிய சாதி வேற்றுமைகளை ஒழிக்கும் வழிகள் தெரிதல் வேண்டுமாயின், முன் நாளில் அவ் வேற்றுமைகளைக் கிளறிவிட்ட மூலங்களை அறிந்தே அவ்வாறு செய்தல்வேண்டும். ஒருவனுக்கு ஒரு பொல்லாத நோய்வந்தால் அதனை நீக்கலுறுவோன், அந் நோயை உண்டாக்கின மூலத்தைத் அறிந்தாலன்றி, அவன் அதனை முற்றும் நீக்கமாட்டுவான் அல்லன். ஒரு நோயின் மூலத்தை அறிந்து அதனை அடியோடு களைந்த அளவானே அந் நோய் முற்றும் ஒழிந்துபோம். அதுபோலச் சாதிவேற்றுமைகளை உண்டாக்கிய மூலங்களையும் நன்கு ஆராய்ந்துகண்டு, பின்னரவ் வேற்றுமைகளை ஒழித்தலே இன்றியமையாது செயற்பாலதாகும். அற்றேல், அம் மூலங்கள் யாவையோவெனிற் கூறுதும்:

மேலே நான்காம் இயலில், உழவுதொழிலையறிந்த வேளாளர்கள் அத் தொழிலாற் பல உணவுப்பண்டங்களைப் பெருக்கி, அதற்குமுன் தாம் உண்டுவந்த இறைச்சியுணவை விட்டுச் சைவவுணவே கொள்ளத் தலைப்பட்டமையினையும், அதுமுதல் தம்மில் ஊனுணவு கொள்வாரான ஏனையோரைத் தம்மின் இழிந்தோராக விலக்கிவைத்துத் தாம் அவரின் உயர்ந்தோரானமையினையும், அங்ஙனஞ் சைவரான தம்முள்ளுங் கல்வியினுங் கடவுள்வழிபாட்டினும் அகந் தூய்மை புறந் தூய்மையினும் மேம்பட்டுநின்றோர் 'அந்தணர்,' 'பார்ப்பனர்' என மேற்குலத்தவர் ஆனமையினையும், அந் நெறியில் இயன்றமட்டும் நின்று குடிகளைப் பாதுகாத்தலினும், செல்வம் பெருக்கி உழவுதொழிலை நடப்பித்தலினும், உழவுதொழிலாற் பெற்ற பண்டங்களைக்

கொண்டுவிற்றலினும் நின்றோர் 'அரசர்,' 'வணிகர்' என வேறிரண்டு இனங்களாய்ப் பிரிந்தமையினையும், இம் மூத் திறத்தார்க்கும் இன்றியமையாத பதினெண் டொழில்களை யும் ஏவற்றொழிலையும் புரிந்தோர் 'அடியோர்,' 'வினைவலர்' என்னுஞ் சூத்திராளைமையினையும், இந் நாற்பெரும் பிரிவினரினுந் தத்தம் மகளிரது ஒழுக்கத்தால் மேலும் பற்பல பிரிவுகள் உண்டானமையினையும் விரித்து விளக்கிப் போந்தாம் எனவே, இத் தென்றமிழ் நாட்டின்கட் சாதி வேற்றுமைகளைப் பிறப்பித்தற்கு அடிப்படை மூலங்களாய் நின்றவை: ஊன் உண்ணாமை, கல்வி, கடவுள்வழிபாடு, அகத் தூய்மை, புறத் தூய்மை, மகளிரது ஒழுக்கம் என்ப வைகளேயா மென்பது நன்கு புலனாகின்றதன்றோ? சாதி வேற்றுமைகளைப் பல்குவித்தற்கு ஏதுவாய் நின்ற இம் மூலங்களைக்கொண்டே சாதிவேற்றுமைகளை ஒழித்தற்கு வழிதேடல் வேண்டுமென்று உணர்ந்துகொள்க. அஃது யாங்ஙனமெனின், அதைடவே விளக்கிக் காட்டுதும்.

முதலாவது 'புலால்உண்ணா' ஒழுக்கமே தன்னைக் கைக் கொண்டு ஒழுகிய மக்களை உயர்ந்த சாதியாராக ஆக்கினமை யாற், புலால் உண்ணாதவர் எவராயிருப்பினும் அவரை 'அந்தணர்,' 'பார்ப்பனர்,' 'சைவ வேளாளர்' என்று கூறுதல் வேண்டும். அங்ஙனம் புலால் உண்ணா ஒழுக்கத்தைக் கைக்கொண்டோரை, அவர் பிறந்த இழிகுலப் பெயரால் அழைத்தலும், முன்னரே சைவராய் உள்ளார் அவரைத் தம்முடன் சேர்த்து உண்ணல் கலத்தல்களைச் செய்யாமல் அவரை அவ் விழிகுலத்திலேயே இருக்கவிடுதலும் பெருந் தீவினையாம். எங்ஙனமெனில், ஊன் உண்பார் ஒருவர் அவ்வூன்உணவு கொள்ளும் பெருந் தீவினைப் படுகுழியி னின்றும் மேலேறுவாராயின், ஊன்உண்ணா மேல் நிலையில் நிற்போர் அவரைக் கைகொடுத்துத் தூக்கித் தம்மோடு

உடன்சேர்த்துக்கொள்ளல் வேண்டும்; அவ்வாறு செய்யின் அங்ஙனஞ் சேர்த்துக்கொள்ளப்பட்டோர் கொல்லா அறத்தில் வழுவாதுநிற்பர்; அதனால் எத்தனையோ மீன்கள், கோழிகள், ஆடுகள், மாடுகள் முதலிய உயிர்கள் உயிர் பிழைக்கும்! அவ்வாறு அம் மேலோர் அவரை மேலே தூக்கிவிடாமல் அப் பாழ்ங் குழியிலேயே அவரை மீண்டும் விழ அழுத்துவராயின், மேல்நிலைக்கு வருவோரைக் கெடுத்த பெருந் தீவினைக்கும், ஊன் உண்பார் கூட்டத்தில் மீண்டுஞ் சேர்ப்பிக்கப்பட்ட அவர் மீண்டும் மீன் முதலான உயிர்களின் இறைச்சியை உணவுகொள்ளவேண்டி வருதலால் அதனால் உண்டாகும் அவ்வுயிர்களின் கொலைத் தீவினைக்கும் அம் மேலோர் உள்ளாகிச் சிறிது காலத்தில் தாமுந் தம்மினத்தவரும் இப் பிறவியிலேயும் அல்லது வரும் பிறவியிலேனும் புலையராவர். அற்றன்று, "யாங்கள் பண்டுதொட்டுப் புலால் உண்ணுங் கொல்லா அறத்தில் வழுவாது நிற்றலாற், புதிதாகப் புலால் உணவு நீக்கி வருவாரை எம்முடன் சேர்த்தல் ஆகாது" என்று உரைப்பராயின், அவருரை அருளொழுக்கத்திற்கு மாறுகொள் தீவினை உரையேயாகும். உயிர்க் கொலையும், அதனால் வரும் ஊனுணவும் நீக்கி அருளொழுக்கத்தைக் கைக்கொண்டவர், அங்ஙனமே கொலைபுலை நீக்கிவருவாரைத் தம்முடன் சேர்த்து, ஊன் உண்ணுந் தொகையைப் பெருக்கிவைத்தாலன்றி உலகிற் 'கொல்லா அறம்' பரவமாட்டாது; கொல்லா அறம் பரவாதவரையில், எண்ணிறந்த உயிர்கள் கொல்லப்படுதலால் வருந் தீவினை சைவரையுஞ் சாராது ஒழியாது. ஊனின்பொருட்டுத் தாம் உயிர்களைக் கொல்லாவிடினும், அதற்காகக் கொல்வாரைத் தடைசெய்யாமலுங், கொலைபுலை தவிர்ந்து வருவாரைத் தம்முடன் சேராமலும் விடுதலாற் கொலைபுலை மேன்மேற் பெருகுதற்குத் தாமும் ஏதுவா

யிருத்தல்பற்றிச், சைவர்களுக்கும் அக் கொலைத் தீவினையிற் பெரும்பங்கு உண்டு. சைவராகிய தம்மைக் கொடியார் சிலர் கொல்லவருகையில், அங்ஙனங் கொல்லவருவாரைப் பிறர் விலக்காதிருந்தால் அச் சைவரது நிலை எப்படிப்பட்டதாய் இருக்கும்! விலக்காதிருந்தாரை அச் சைவர் குற்றஞ் சொல்லாதிருப்பரோ! அங்ஙனமே உயிர்க்கொலையை விலக்காத சைவர்க்கும் பெருந் தீவினையிற் பங்கு உண்டென்று அறிந்துகொள்க. உயிர்க்கொலையைத் தடை செய்யாமையால் வருந் தீவினை பெரிதாயினாற்போலவே, அதனைத் தடைசெய்து கொலை புலை தவிர்ந்தாரைத் தம்முடன் சேர்த்துக்கொள்வதாற் சைவர்க்கு வரும் நன்மையும் அளப்பிலதாகும்; புதிய சைவர்களைத் தம்முடன் சேர்த்தலாற் சைவர்களின் தொகை மேன்மேற் பெருகும்; இறைவனாற் படைக்கப்பட்ட எண்ணிறந்த சிற்றுயிர்கள் கத்தியால் வெட்டப்பட்டுத் துடிதுடிக்கும் பெருந்துன்பத்தினின்று தப்பிப் பிழைக்கும்; நாடெங்கும் அருளொழுக்கம் பரவும்; அது பரவவே, பொய்யும், புனைசுருட்டும், ஒருவர் மற்றொருவர்க்குத் தீங்கிழைக்கும் எண்ணிறந்த பொல்லா வழிகளுந் தொலையும். இங்ஙனமெல்லாங், கொலை புலை தவிர்ந்து வருவாரைச் சைவர்கள் தம்முடன் சேர்த்துக் கொள்வதாற் போதரும் நன்மைகளைச் சொல்லப்புகுந்தால், அவை அளவிலவாய் விரியும். அங்ஙனமே புதிது சைவராவாரைச் சேர்த்துக்கொள்ளாமையாற் கிளைக்குந் தீங்குகளுஞ் சொல்லுக்கு அடங்கா. ஆகையால், "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" (திருமந்திரம், கூ௫) என்று சைவசித்தாந்த முதலாசிரியரான திருமூலநாயனார் அருளிச் செய்திருக்கும் விழுமிய அறவுரையைக் கடைப்பிடித் தொழுகவேண்டியவரான சைவர்கள், தாம் கைக்கொண்ட சீரிய சைவவொழுக்கத்தைப் பிறருங் கடைப் பிடிக்குமாறு

செய்து, அங்ஙனம் அதனைப் புதிது கடைப்பிடித்தாரைத் தம்மோடு உடன்வைத்து அளவளாவுதலே இன்றியமையாத செயற்பாலதாம்; அவ்வாறு செய்யாராயின் தம் ஆசிரியர் கற்பித்த சொல்வழி நடவாத பெருங் குற்றத்திற்கு ஆளாகிச், சைவவொழுக்கத்திற்கு இன்றியமையாத அருளிரக்கம் இல்லாமையின் தங்குலமும் வரவர மாய்ந்து ஒழியப்பெறுவர்.

தமது சைவஒழுக்கத்தைப் பரப்புதலிற் கருத்தில்லாமலும், புதிது சைவ வொழுக்கம் பூண்டாரையும் பிறரையுந் தம்மாட்டு அணுகவிடாமலுந் தமது ஊனுடம்பின் பிறப்பையே மேலதாகக் கருதி இறுமாந்தொழுகும் போலிச் சைவ வகுப்பினரின் குடும்பங்கள் கால்வழியின்றி நாளுக்கு நாட் குன்றி மாய்ந்துபோதலைப் பல இடங்களில் எம் கண்ணெதிரே கண்டு வருகின்றோம், அவ் வகுப்பினரிற் பற்பலர் அதனைச் சொல்லக்கேட்டும் வருகின்றோம். இதற்கு ஏது என்னென்றால், தம் போன்ற ஏனை மக்களின் நன்மையைக் கருதாமையும், புது இரத்தக் கலப்பு இன்மையுமேயாம். ஒவ்வொரு போலிச் சைவவகுப்பினரும் "நாங்கள் முப்பது வீட்டுக்காரர்கள்; எங்களுக்குள்ளேதான் உண்ணல் கலத்தல்களைச் செய்கின்றோம்; இந்த முப்பது வீடுகளைத் தாண்டி வேறொரு வீட்டிற் கையைக்கூட நனைக்கமாட்டோம்" என்று மிகுந்த தலையெடுப்போடும் பேசுகின்றார்கள். இப்படித் தம்மிற் சிலர்க்குள் மட்டும் உண்ணல் கலத்தல்களைச் செய்வதால், தமக்காவது பிறர்க்காவது இவர்கள் செய்த நன்மை யாது? அதனால் இவர்கள் தேவர்களாய் விட்டார்களா? அல்லது இவர்களின் உடம்பு எவர்க்கும் இல்லாத பொன்னுடம்பு ஆய்விட்டதா? அல்லது அறிவிற் பெரியவராகிக் கடவுளை நேரே கண்டு விட்டார்களா? அப்படியொன்றும் இல்லையே. மற்றை

எல்லாரையும்போலச்-சில நேரங்களில் மற்றையோரை
விடப்-போலிச்சைவர்கள் மிக இழிந்த செயல்களையுஞ்
செய்யக் காண்கின்றோமே. தம்மைச் சைவரெனக் கருதி
இறுமாப்போரில் எத்தனைபேர் பொதுமகளிர் வீட்டிற்
புலைத்தொழில் செய்து கிடக்கின்றனர்! எத்தனைபேர்
சீமைச் சாராயமும் வறுத்த ஆட்டிறைச்சியுங் கோழி
முட்டையும் மறைவில் உட்கொள்கின்றனர்! எத்தனைபேர்
சூதாட்டத்திற் காலங் கழிக்கின்றனர்! எத்தனைபேர் பிறர்
பொருளை ஏமாற்றிப் பறிக்க மன்றிற் படுபொய்பேசி அழி
வழக்காடுகின்றனர்! எத்தனைபேர் தமக்கு ஆகாதவர்களை
ஆள்விட்டு அடித்துக் கொல்கின்றனர்! எத்தனைபேர்
நோய்வாய்ப் பட்டுப் புழுத்து அழுகி நாறிக் கிடக்கின்றனர்!
எத்தனைபேர் கல்வியறிவு சிறிதும் இல்லாதவர்களாய்
அறியாமைச்சேற்றில் அமிழ்ந்திக் கிடக்கின்றனர்! எத்தனை
பேர் கடவுள் இல்லையென 'நாத்திகம்' பேசி நாத்தழும்பேறி
நிற்கின்றனர்! எத்தனைபேர் எசக்கி, மாரி, வீரன்,
கறுப்பன் முதலான பேய்களை வணங்கி அவற்றிற்கு எண்
ணிறந்த ஆடு, கோழிகளை வெட்டுகின்றனர்! இங்ஙனமே
இன்னும் போலிச் சைவர்களின் இடையே நடைபெறும்
அடாத செயல்களையெல்லாம் எடுத்துரைக்கப்புகின் இவ்
வேடு இடங் காணாது. இத்தகையோரான போலிச்சைவர்
தம்மைத்தாமே உயர்ந்த சாதியாராகச் சொல்லிக்கொண்டு
தம்மில் இறுமாப்புற்றுத், தாந்தாமே கூடிக் களித்தால்,
அதனைக் கண்ட உயர்ந்த அறிவினர் அவரையும் அவர்
சொல்லையும் ஒருபொருட்டாக மதிப்பரோ! 'சைவர்'
என்னுஞ் சொல்லுக்கு ஏற்பத் தாம் அருளொழுக்கத்திலும்,
சிவநேயத்திலும், அடியார் பணியிலுந் தலைசிறந்து நிற்ப
தோடு, தம்மோடொத்த ஏனை மக்களையுந் தமது அரு
ளொழுக்கத்திற் றிருப்பி அவரோடு அளவளாவி, அவ்

வாற்றாற் சைவவொழுக்கத்தை எங்கும் பரவச் செய்பி னன்றோ, அறிவான்மிக்க ஆன்றோர் அவரை உண்மைச் சைவரென உயர்த்துப் பாராட்டுவர்!

மேலும், "முப்பது நாற்பது நூறு இருநூறு வீட்டுக் காரர்களுக்குள்ளேதான் யாங்கள் உண்ணல் கலத்தல்களைச் செய்வோம்" எனத் தருக்கிப் பேசி அவ்வாறு நடந்து வரும் போலிச்சைவரின் குடும்பத்தாருடம்புகளிற் பழைய இரத்தமே வரவர வலிவிழந்து ஓடிவருதலால், அவர்கட்குப் பிள்ளைப்பேறு வாயாமற் போகின்றது; பிள்ளைப்பேறு வாய்ப்பினும் உயர்ந்த அறிவும், திட்பமான மனமும், முறுக்கான யாக்கையும், சிறந்த தன்மையும் வாய்ந்த பிள்ளைகளைப் பெறுதல் அவர்களுள் அரிதினும் அரிதாய்ப் போகின்றது. புதுநீர் வரத்தின்றிப் பழைய கட்டுக்கிடைத் தண்ணீரேயுள்ள ஒரு குளம் நாற்றமெடுத்து, நோய்ப் புழுக்களை யுண்டாக்கி யார்க்கும் பயன்படாமல், வரவர வற்றி வறண்டு முடிவில் நீரற்றுப்போதல் போல, அகல உள்ள குடிகளில் அறிஞராய் வலியராய் நல்லராய்ப் பிறந்தார் தம் புதிய இரத்தமானது, தமது பழங்குடிப் பிறந்தார்தம் உடம்புகளில் வந்து கலத்தற்கு இடங்கொடாத போலிச் சைவக் குடும்பத்தினருந் தமது வலிவிழந்த பழைய இரத்தங் கெட்டு அகத்தும் புறத்தும் நோய்களுக்கு இரையாகி வற்றி வறண்டு போகத் தாமும் இருந்த இடந் தெரியாமற் சில காலத்தில் மாய்ந்துபோகின்றனர்.

பார்மின்கள்! நம் இந்தியநாட்டவர் அல்லாத வெள்ளைக் காரருள்ளும் அவரோடொத்தார் பிறருள்ளும் இத்தகைய பொல்லாப் போலிச்சாதிக் கட்டுப்பாடுகள் இருக்கின் றனவா? இல்லையே; அவை இல்லாமையின், அவர்கள் தம்மில் ஆண்மக்களும் பெண்மக்களும் தத்தம் இயற்கைக்கு

இசைந்தாருடன் இனிதுகூடி வாழ இடந்தந்து, அவ்வாற்றால் அறிவிலும் ஆண்மையிலுஞ் சிறந்த மக்களை அளவின்றிப் பெற்று, உலகமெங்குந் தாமாகவே பரவி, எல்லா நலங்களும் எய்தி, அந் நலங்கள் இல்லாத நம் நாட்டவர்களைத் தம் அடிக்கீழ்ப்படுத்து, நம்மனோர் தம்மைச் சார்ந்து அண்டிப்பிழைக்க நம்மை ஆண்டு நமக்கு உதவியும் புரிந்து வருகின்றனர் இவ்வாறிருக்க, அளவிறந்த சாதிக்கட்டுப் பாடுகளுடைய நம்மனோர், அச் சாதிக்கட்டுப்பாடுகளாற் பெற்ற பயன் ஏதேனும் உண்டா? ஏதுமேயில்லை. அவற்றால் உயர்ந்த பயன்கள் உண்டாகாவிடினும் விடுக; தீமைகளேனும் விளையாமலிருக்கின்றனவா வென்றால் அப்படியுமில்லை; அவை நன்மையைத் தராதமட்டில் அமையாமல், அடுத்தடுத்துப் பல தீமைகளையும் விளைவிக்கின்றன. தம்மை உயர்ந்த சாதியாராக நினைப்பவர்கள் தம்மோடொத்த மக்களை எவ்வளவு இழிவாக நினைத்து இறுமாக்கின்றார்கள்! இழிந்தோராக ஒதுக்கப்பட்டவர்கள் எவ்வளவு துன்பத்தை அடைந்தாலும் அவர்களை உயர்ந்த சாதியார் என்போர் கண்ணெடுத்தும் பார்க்கின்றார்களில்லையே! தாழ்ந்த சாதியாரிடத்தில் எல்லாவகையான ஏவற்றொழிலையும் வாங்கிக்கொண்டு அவ்வாற்றால் மிக்க செல்வமுடையராய் வாழ்கின்றவர்கள், அவ்வேழை ஏவலர் ஒருநாளைக்கு ஒருவேளை கூழ்உணவுகூடக் கிடையாமற் களைத்துக்கிடக்க, அவர்கட்கு ஒருபிடிசோறாவது கொடுக்கின்றார்களா, இல்லையே! இழிந்த சாதியார் கடுவெயிலில் நாள்முழுதும் நின்று கை எரியக் கால் ஓய முதுகுநோவ வெட்டியெடுத்துத் தந்த கிணற்றுநீரைத் தமது வீட்டுநிழலிலிருந்து வெட்டிவேர் இட்டு மணம் ஊட்டிப் பருகுகின்ற மேற்சாதியார், அக் கீழ்ச்சாதியார்கள் வெயிலால் நாவறண்டு உடல்தளர்ந்து ஒரு குடங்கை நீராவது முகந்து குடிக்கலாம் என்று அக்

கிணற்றண்டை வந்தால் அவர்களை எவ்வளவு வன்னெஞ்சத் தோடுந் துரத்துகின்றனர்!

மேற்சாதியா ரென்போராவது தமக்குள் அன்பும் ஒற்றுமையும் பூண்டு ஒழுகுகின்றார்களாவென்றால் அப் படியும் இல்லை. அவர்களுள்ளும் பற்பல சாதிவேற்றுமைகள்! ஒருசிறு வகுப்பினர் மற்றொரு சிறு வகுப்பினரைத் தம்மிற் றாழ்ந்தவர் எனக் கருதி அவரோடு உண்ணல் கலத்தல்களைச் செய்யாமல் இறுமாக்கின்றனர்! எந் நேரமுஞ் சாதியுயர்வு தாழ்வுகளைப்பற்றியே பேசுகின்றனரல்லாமல், வேறு உயர்ந்த பொருள்களைப்பற்றி எட்டுணையும் பேசுகின்றிலர். இன்னகாலத்தில் அழியும் என்று அறியப்படாத ஊனுடம் பின் பிறப்பையே எந் நேரமும் நினைந்து அறியாமையில் மாழ்கிக்கிடக்கும் இப் பேதைமக்கட்கு உயர்ந்த நோக்கங் களும் உயர்ந்த பொருள்களைப்பற்றிய பேச்சுக்களும் எங்கே யிருந்து எப்படிவரும்? இவ் இந்துமக்களைப்போல ஒற்றுமை கெட்ட நெல்லிக்காய் மூட்டைகளை இந் நிலவுலகத்தில் வேறெங்கும் காண்டல் இயலாது. தமக்குள் ஒருவரை யொருவர் தாழ்வாக நினைந்து, போலி மேலோர் போலிக் கீழோரைக் கொடுமையாக நடத்துதலுக்குத் தண்டனையாக வன்றோ, எல்லார்க்குந் தந்தையான கடவுள் நம் இந்து மக்களைச் சென்ற எழுநூறு ஆண்டுகளுக்குமேலாக அயல் நாட்டவர் படையெடுப்பிற் படுத்துத் துன்புறுத்தியும், அவரது ஆட்சியின்கீழ் வைத்துத் திருத்தியும் வருகின்றான். தன் புதல்வர்களுள் எளியாரை வலியார் கொடுமைப் படுத்துதல் கண்டு, பேர்இரக்கமுடையனாகிய இறைவன், நம் இந்துமக்களை அயலவரால் எவ்வளவோ திருத்திவந்தும், நம்மவர்கட்கு இன்னும் நல்லுணர்வும் அன்பும் ஒற்றுமையும் வந்தபாடில்லையே! எழுநூறு ஆண்டுகளுக்கு முற்றொட்டுத் துலுக்கர்கள் படையெடுத்துவந்து நம்மனோரைச் சின்ன

பின்னமாய் வெட்டி வீழ்த்தியும், பொருள்களைச் சூறை யாடியும், பெண்மக்களைக் கற்பழித்தும், ஊர்களைக் கொளுத்தியும், திருக்கோயில்களை இடித்தும் வருத்தி வந்தக்கால் நம்மனோர்தம் சாதிவேற்றுமைகள் எங்கிருந் தன? அவையெல்லாம் பஞ்சாய்ப் பறந்தொழிந்தன வல்லவோ? 'தைமூர் அமீர்' என்னுந் துலுக்கமன்னன் கி-பி கங்கூஅ-இல் வடநாட்டிற் படையெடுத்து வந்த ஞான்று 'துலம்பா' என்னும் ஊரிலிருந்த நம் இந்துக் குடிமக்களைச் சின்னபின்னமாய் வெட்டி வீழ்த்தி, எஞ்சி னோரை அடிமைப்படுத்தினன்! பின்னும் ஒருகால் நம் மனோரில் நூறாயிரம் பேரைக் குருதியொழுகக் கொன்றான்; டில்லி நகரை ஐந்துநாள் வரையிற் கொள்ளையிட்டான்; அப்போது எண்ணிறந்த நம் பெண்மக்களைச் சிறை பிடித் தான்.[1] அக் காலம்முதல் நம்மனோரில் எத்தனைகோடி பேர் துலுக்கராயினர்! எத்தனை யாயிரம்பேர் வறுமைப் பட்டுக் கீழ்ச்சாதியாராயினர்! "அடித்தவனுக்கு ஆமுடை யாள், பிடித்தவனுக்குப் பெண்டாட்டி" என்றபடி நம் பெண்மக்களில் எத்தனையாயிரம்பேர் துலுக்கர் கையிற் சிக்கி மீண்டவர்கள்! அத் துலுக்க அரசர்களால் நேர்ந்த குழப்பங்களின் இடையே, நம் இந்து அரசர்களும், அவர் களின்கீழ்த் தலைமை செலுத்தினவர்களும், ஏனைச்செல்வர் களும், ஆள்வலிமை படைத்தவர்களும் செய்துவந்த தகுதியற்ற கொடுஞ் செயல்களுஞ் சொல்லுக்கு அடங்கா; அவர்களால் துன்புற்றுத் தமது நிறை சிதைந்த நம் இந்துப் பெண்மக்களும் எண்ணிறந்தவர்கள்! அறம் வழுவாத நம் ஆங்கிலவேந்தரின் ஆட்சி இந் நாட்டில் நிலைபெற்றபின்ன ரன்றோ, நாமும் நம் பெண்மக்களும் அச்சமின்றி இனிது

1. See Dr. V. A. Smith's "The Oxford History of India, 1923, p. 252.

வாழ இடம்பெற்றோம். இந்தச் சிறிய அரசியலிலுங்கூட, ஒதுங்கியுள்ள நாட்டுப்புறங்களில் இடம் பொருள் ஏவல்களால் வலியராய் உள்ளார் தம்மைச் சூழ்ந்திருக்குங் குடிமக்கட்குப் பெருந் தீங்குகள் செய்துவருகின்றார்கள்; அத்தீயார் இருக்கும் இடங்களிற் கற்புடைய மகளிரும் இருப்பரோ என்பது ஐயுறற்பாலதாகவே யிருக்கின்றது. சில ஆண்டுகளுக்குமுன் மலையாள நாட்டில் நிகழ்ந்த கொடிய நிகழ்ச்சிகள் இன்னும் நமது நினைவைவிட்டு நீங்கிற்றில. அங்குள்ள நம்பூரிப்பார்ப்பனரும் நாயர்களும் நீள இழைத்து வந்த சாதிவேற்றுமைக் கொடுமைகளைப் பொறுக்க ஏலாமையாலன்றோ, அங்குள்ள துலுக்கர்கள் அவர்களை உயிரோடு வைத்துத் தோலுரித்தும், அவர்களின் மகளிரைச் சிறைபிடித்துச் சென்றும், அவர்களின் இல்லங்களைத் தீயிட்டுக் கொளுத்தியும், அவர்கள் தொழுங் கோயில்களை இடித்துப் பாழாக்கியும் நினைப்பினும் நெஞ்சம் நடுங்கும் வகையாலெல்லாம் அவர்களைத் துன்புறுத்தினார்கள்! அங்குள்ள நம்பூரிகளும் நாயர்களும் தம்மோடொத்த மக்களான 'தீயர்,' 'ஈழுவர்,' 'புலையர்' முதலியோரைக் கொடுமைப்படுத்தாமல் அன்பாக நடத்தியிருந்தாற், பெருந்தொகையினரான அவர்களெல்லாரும் ஒருங்குசேர்ந்து, சிறு தொகையினரான நம்பூரிகளையும் நாயர்களையும் பாதுகாத்துத், துலுக்கர்களை எளிதில் அடக்கியிருப்பரன்றோ! நம் ஆங்கில அரசினர் தம் படைகளை விடுத்து அத் துலுக்கர்களை அடக்கியிராவிட்டால், நம்பூரி நாயர்களின் சாதிக் கட்டுப்பாடுகளெல்லாந் துகளாய்ப் பறந்து, மலையாளம் முற்றுந் துலுக்கநாடாய்ப் போயிருக்குமன்றோ? இவ் விந்திய நாடெங்கும் பார்ப்பனராலும் போலிச் சைவர்களாலும் வேரூன்றி நிற்கும் சாதிவேற்றுமையால், எல்லா மக்களும் எண்ணியடங்காப் பற்பல பிரிவினராகி ஒற்றுமை

கெட்டு, ஒருவரிடத்தொருவர் அன்பிலராய்த், தம்மைத் தாமே பெரியராக நினைந்து இறுமாந்து நடக்கின்றனர்; இவர்களைத் துலுக்கர்கள் மற்றொருமுறை எதிர்க்க நேரம் வாய்க்குமானால், இந்துக்கள் அனைவரும் வேரோடு மாய்க்கப் படுதல் திண்ணமாய் முடியும். சில கிழமைகளுக்குமுன் கல்கத்தாவில் நடந்த 'இந்து முஸ்லீம்' கலகமே இதற் கொரு சான்றாம். அரசியல் நெறிவழுவாத நம் ஆங்கில துரைத்தனத்தார் இக் கலகத்தை உடனே அடக்காதிருந் தால், இக் கலகம் எவ்வளவு அஞ்சத்தக்கதாய் முடிந்திருக் கும்! சாதிவேற்றுமை என்னும் பெரும் புயற்காற்றாற் சின்னபின்னப் படுத்தப்பட்டுச் சிதறிக் கிடக்கும் நம் இந்துமக்களில், தலைவரெனத் தம்மைக் கூறிக்கொள்வோர் இந் நிலைமைகளைச் சிறிதாயினும் ஆராய்ந்துபாராமல், நம் ஆங்கில அரசை இந்நாட்டினின்றுந் துரத்தப்பார்க்கின்றார் களே!

"மாதவர் நோன்பும் மடவார் கற்புங்
காவலன் காவல் இன்றித் தங்கா."

என்று நம் பழைய ஆன்றோராகிய சீத்தலைச்சாத்தனார் 'மணிமேகலை'யில் அருளிச்செய்திருக்கும் அறவுரையை அவர்கள் அறியார்கொல்லோ! ஆங்கில அரசினர் இந் நாட்டைவிட்டு அகலும் அன்றைக்கே இது பிணக்காடாம் என்பதை அவர்கள் உணரார்கொல்லோ! நம் இந்துமக்க ளுக்கு எல்லாவகையானுந் தீராப் பெரும் பகைவராய்த், தம்முள் ஒற்றுமையும் அதனால் வலிமையும் தமக்கு உதவி புரியுந் துலுக்க அரசர்களும் நன்கு வாய்க்கப் பெற்றாராய், இவ்விந்நாடெங்கணும் பெருந்தொகையினராய்க் குடி கொண்டிருக்குந் துலுக்கர்களைப் பார்த்தாயினும் நம்ம வர்கள் சாதிவேற்றுமையினை யொழித்துத் தமக்குள் ஒற்றுமை எய்தலாகாதா! ஓர் எழுநூறு ஆண்டுகளாக இவ்

விந்திய நாடெங்கும் நிகழ்ந்துவரும் மாறுதல்களை நடுவு நிலைமையோடு நின்று ஆராய்ந்து காண்பவர்களுக்கு, இங்குள்ள எந்தச் சாதியாரேனும் பிறசாதிக் கலப்பின்றித் தனிச்சாதியாராய் வாழ்ந்திருக்கலாம் என்று ஐயமின்றிச் சொல்வதற்குச் சிறிதும் இடம் இல்லாமையாலும், வெவ்வேறினமாய் நிற்கும் மக்கள் ஒன்று கலத்தலாற் பிறக்கும் பிள்ளைகள் அறிவு மிகுதியும் உடல் வலிமையும் பெற்று உலகிற்குப் பெரிதும் பயன்படுதலை நாளுங் காண்கின்றோமாகலிற் சாதிக்கலப்பு மிகவும் வேண்டற்பாலதாய்த் தோன்றலாலும், இம்மை மறுமைப் பயன்களை விழையும் உண்மைச் சைவர்கள் பிற சாதியாரிலிருந்து புலாலுண்ணும் புனிதராய் வருவாரைத் தம்மொடு சேர்த்து வலிமையிலும் அறிவிலுந் தொகையிலும் அருளொழுக்கத்திலும் மிகுந்து நலம்பெறக் கடவாராக!

இனி, மற்றைத் தாழ்ந்த வகுப்பினரிற் கொலைபுலை தவிர்ந்தாரை உண்மைச் சைவர்கள் தம்மினத்திற் சேர்த்துக் கொள்வது ஒன்றின் மட்டும் அமையாது, கல்வியில் மிக்காரையுங், கடவுள்வழிபாட்டிற் சிறந்தாரையும், அகந்தூய்மை புறந்தூய்மை வாய்ந்தாரையும் பிறப்பிழிபு நோக்காது தம்மொடுசேர்த்து உண்ணல் கலத்தல்களைச் செய்தல் வேண்டும். எல்லா மக்களிடத்தும் எல்லா நலங்களும் அமைதல் அரிதாகையால், எவ்வெவரிடத்து எவ்வெந் நலங்கள் காணப்படுகின்றனவோ, அவ்வந் நலங்கள் பற்றியே அவ்வவரைப் பாராட்டுதல் வேண்டும்; அவரிடத்திற் காணப்படாத நலங்களுக்காக அவரைக் குறைசொல்லல் ஆகாது. சில நலங்கள் உடையராய் வேறு சில நலங்கள் இலராயினாரையுந் தம்மொடு சேர்த்து அளவளாவிவரின், அவர் உண்மைச் சைவரின் சேர்க்கையால் வரவர எல்லா நலங்களும் நிரம்பப் பெறுவர். தமக்குள்ளேயே சைவவொழுக்கத்தின் வழுவிப்

புலாலுணவு கொண்டுங் குடித்தும் பரத்தையரை மருவியும் ஏமாற்றங்கள் செய்தும் வருவார் பலர் இருக்க, உண்மைச் சைவர்கள் அவர்களை நீக்கமாட்டாமற் சிறப்புநாட்களில் அவர்களோடு உடனிருந்து உண்டும், அவர்கள்பாற் பெண் கொண்டு கொடுத்தும் அளவளாவி வாழவில்லையா? அங்ஙனமே மற்றைத் தாழ்ந்த வகுப்பாரிலுந் திருந்தத்தக்காராய்ச், சில நலங்களேனும் உடையார் இருந்தால், அவர்களை உண்மைச் சைவர்கள் தம்மினத்தில் உடனே சேர்த்தல் இயலாதாயினும், அவர்களொடு முதலில் நெருங்கிப் பழகவேண்டுமளவுக்குப் பழகி, அப்பழக்கத்தால் அவர்கள் முற்றுந் திருந்தக்காணின், பின்னர் அவர்களைத் தம்முடன் சேர்த்துக்கொள்ளல் இன்றியமையாததாகும்.

பிற சாதியார்கள் கல்வியுங் கடவுள்வழிபாடுந் தூய்மையும் இலாதல் பற்றி, அவரை விலக்கி வைத்து, அவர்கள் திருந்துதற்குரிய வழிவகைகளைச் செய்யாமல் நம்மவர் இன்னும் பராமுகமாயிருப்பரானால், அவர்களெல்லாருங் கிறித்துவர், துலுக்கர், பௌத்தர் முதலான பிற சமயத்தவரால் எளிதில் ஏற்றுக்கொள்ளப்பட்டு, நம் இந்து சமயப் பகைவராகிச், சில நூற்றாண்டுகளில் இவ்விந்திய நாடெங்கும் நிறைந்து, நம்மனோரும் நம் சைவவைணவ சமயங்களும் இருந்தவிடமுந் தெரியாமல் வேரோடு அற்றுப் போகச் செய்குவர். நம்மனோர் செய்த கொடிய சாதிக் கட்டுப்பாடுகளின் துன்பம் பொறுக்கமாட்டாமையாலன்றோ, கணக்கிறந்த நம் இந்துமக்கள் கிறித்துவராய்விட்டனர்! நம்மனோரில் நாளொன்றுக்கு மூந்நூறுபேர் விழுக்காடு கிறித்துவராய்விடுகின்றார்களென்று, அதனை ஆராய்ந்த நண்பர் ஒருவர் சொல்லக் கேட்டேம். நாளொன்றுக்கு மூந்நூறுபேர் கிறித்துவராய்விட்டால், ஒரு திங்களுக்கு ஒன்பதினாயிரம் பேரும், ஓர் ஆண்டுக்கு ஓர் இலட்

சத்து எண்ணுயிரம்பேரும் ஆகச் சில நூற்றுண்டுகளில் இந்தியநாடு முழுதுங் கிறித்துவராலேயே நிரப்பப்படும். கிறித்துவர்கள் தங்களது சமயத்தைப் பரப்பும்பொருட்டு ஒவ்வொருநாளும் எண்ணிறந்த நூல்களைப் பரப்பிவருகின்ருர்கள்; தம்மிற் கற்றவராயுள்ள குருமார்களுக்கு மிகுந்த சம்பளங்கள் கொடுத்து, அவர்களை ஆயிரக்கணக்காகப் பலப்பல இடங்களுக்கும் போக்கித், தம்முடைய சமயக் கோட்பாடுகளை எல்லார்க்கும் எடுத்துச்சொல்லி, விரும்பினேரைத் தமது சமயத்தில் ஏற்றுக்கொள்கின்ருர்கள். நம்மனோரால் சிறிதேனும் பாராட்டப்படாமல் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் ஏழை யெளிய சாதியார்கள் இருக்கும் இடங்கள் எங்குங் கிறித்துவக் குருக்கள்மார்போய் ஆங்காங்குப் பள்ளிக்கூடங்கள் திறப்பித்து, அவர்கட்கு ஊண் கொடுத்து உடைகொடுத்துக் கல்வியறிவு புகட்டி, அவர்கள் துப்புரவாயிருக்கக் கற்பித்து, அவர்களைச் சிறந்த அலுவல்களிலும் அமரச் செய்து இங்ஙனமெல்லாம் அவர்கட்குப் பற்பல நன்மைகளைப் புரிந்துவருதலால், அந் நன்மைகளைப் பெற்று உயரும் அவ்வெளிய சாதியார்கள் அக் குருமார்கள் பால் மிக்க நன்றியறிவுடையவர்களாய்த், தமக்கு ஏதோர் உதவியுஞ் செய்யாமல் தம்பால் எல்லா உதவிகளும் பெற்றுக்கொண்டு தம்மைப் பட்டினியிலும் பசியிலும் மிகத் தாழ்ந்த நிலையிலுங் கிடக்கவிட்டுத் தம்மை மீளாத் துன்பத்திற்கு ஆளாக்கிவரும் நம்மனோரையும் நம்முடைய சைவவைணவ சமயங்களையும் நீங்கி அக் கிறித்துவக் குருக்கள்மார் காட்டுங் கிறித்துவ சமயம் புகுகின்ருர்கள். எளிய சாதியார்கட்கு உதவிபுரிவார் இல்லாத காலங்களிலே, மேற்சாதியா ரெனக் கூறிக்கொள்ளும் ஓ இரக்கமற்ற கொடிய இந்துமக்களே! நீங்கள் அவர்களை ஆடு மாடு கழுதை குதிரை பன்றி நாய் முதலான விலங்கினங்களிலுங்

கடைப்பட்டவராக நடத்தியும், அவர்களுக்கு அரை வயிற்றுக் கூழுணவுகூடக் கிடையாமற் செய்தும், அவர்களில் ஆண்மக்களாயினோர் கோவணத்திற்குமேல் ஒருசிறு கந்தைத் துணிகூட உடுக்கவிடாமலும், அவர்களிற் பெண்மக்களாயினோர் தமது மார்பினை மறைத்து மேலாடை உடுப்பதற்குங் கூட மனம்பொறாமற் சினந்தும், அவர்கள் தூய்மையாயிருக்கக் கல்வியறிவுதானும் புகட்டாமலும் நும்மோடொப்ப இறைவனாற் படைக்கப்பட்ட அம்மக்களைப் பெருந் துன்பத்திலும் அறியாமையிலும் இருத்தி, அவர்கள்பால் எல்லா வகையான வேலைகளையும் வாங்கி வந்தீர்கள்! நுங்களுடைய ஈரமற்ற வன்னெஞ்சத்தையும் இரக்கமற்ற கொடுஞ் செயல்களையுங் கண்டன்றோ, அவ் வேழை மக்கட்கு உதவி புரிதற் பொருட்டு அருட்கடலாகிய ஆண்டவன் ஆங்கில நன்மக்களையும் அவர் வழியே கிறித்துவக் குருமார்களையும் இந் நாட்டுக்கு வரும்படி அருள்புரிந்தான்! அவர்கள் வராதிருந்தால் பல கோடிக்கணக்காயுள்ள அத் தாழ்த்தப்பட்ட பழந் தமிழ்மக்களின் நிலைமை இன்னும் எவ்வளவு துன்பத்திற்கு உள்ளாகியிருக்கும்! இவ்வாறு எல்லா இரக்கமும் வாய்ந்த இறைவனால் ஏவப்பட்டு ஆங்கில அரசுங் கிறித்துவக் குருமாரும் இங்குவந்து அவ்வேழைமக்கட்கும் பிறர்க்கும் எல்லாவகையான நலங்களும் புரிந்துவருவதைப் பார்த்தும், ஐயோ! இந்துமக்களே, ஓ போலிச் சைவர்களே, இன்னும் நுங்கட்கு இரக்கமும் நல்லறிவும் வந்தபாடில்லையே! நுங்களை நுங்கள் கால்வழியற்றுப்போக வேரோடு வெட்டி மாய்த்துவரும் பொல்லாத கோடரியாய்ச் சாதி வேற்றுமை இருப்பதுணராது, அதனை நுமக்குச் சிறப்புத் தருவதாக எண்ணி நீங்கள் மகிழ்வது எவ்வளவு பேதைமை! ஊரின் நடுவே வெடிமருந்துக் கொத்தளத்தின்மேலிருந்து கொள்ளிக்கட்டையைச் சுழற்றி மகிழ்வோனுக்கும் நுங்கட்

கும் யாம் வேற்றுமை காண்கிலேம். ஒரு தீப்பொறியா னது அக் கொத்தளத்தை வெடிக்கச் செய்து அவனையும், அவ்வூரிலுள்ள ரனைவரையுஞ் சிறிது நேரத்திற் படுசாம்ப ராக்கிவிடுதல்போலப், பாழுஞ் சாதிவேற்றுமையால் இனி யுண்டாவதற்கு மும்மரித்து நிற்கும் ஒருசிறு கலகமானது நுங்களையும் நுங்களிறுமாப்பினையும் நுங்கள் சாதிக் கட்டுப் பாடுகளையும் எளிதில் மாய்த்தொழிக்குமேயென அஞ்சு கின்றேம்! வெள்ளம் வருவதற்கு முன்னரே அணைகோலி வைத்தல் அறிவுடையார் செயலாதல்போலப், பெருந் தீமைக்கு ஏதுவான கலகம் வருதற்கு முன்னமே அதனை வருவிக்குஞ் சாதிவேற்றுமையினைத் தொலைத்து விடு மின்கள் !

ஆடு மாடு குதிரைகளைப் போலச் சைவவுணவு மட்டுங் கொள்ளுதலால் நீங்கள் நுங்களைச் 'சைவர்' எனச் சொல் லிக்கொள்ளுகின்றீர்கள்; நீங்களேனும் மருத்துவர் சொல்லைக் கேட்டுச் சில காலங்களில் ஊனுணவையும் உட் கொள்வீர்கள்; ஆனல், ஆடு மாடு குதிரைகளோ எக்காலத் தும் ஊனுணவு கொள்ளா; கடவுள் இல்லையென நாத்திகம் பேசும் சமணர்கள் கொல்லா அறத்தில் நுங்களைவிடப் பன் மடங்கு சிறந்தவர்கள்; ஊன் உண்ணுமையே 'சைவம்' என நுவலுவீர்களாயின், ஆடு மாடு குதிரைகளையும் சமண ரையுமன்றோ நுங்களைவிடச் சிறந்த சைவராகச் சொல்லு தல் வேண்டும்? அற்றன்று, நாங்கள் சிவபெருமானை வழி படுகின்றோம், தேவார திருவாசகங்கள் ஓதுகின்றோம், திரு நீறும் சிவமணியும் அணிகின்றோம், ஐந்தெழுத்து மந்திரம் உருவேற்றுகின்றோம், அடியார் திருத்தொண்டின் பெருமை களையும் 'சிவஞான போதம்' முதலான சைவசித்தாந்தத் தனிப்பெரு நூல்களையும் பயின்றறிகின்றோம்; இவைகளே சைவராகிய எமக்குச் சிறப்படையாளங்கள் என்று உரைப்

பிர்களாயின், இவ் வடையாளங்கள் உடையவர் நுங்களில் எத்தனைபேர் உளர்? பதினாயிரவரில் ஒருவரேனும் உளரா? துணிந்து சொல்வீர்களா? சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்பதற்குரிய இலக்கணங்களை நுங்களில் நன்கு உணர்ந்தவர் எவ்வளவுபேர்? தேவார திருவாசகங்களுக்குப் பொருளும் அவற்றைப் பிழையற ஓதுதலுந் தெரிந்தோர் எவ் வளவினர்? திருநீறு, சிவமணி, ஐந்தெழுத்து என்பவற்றின் உண்மையை யாராய்ந்தறிந்தோர் எத்தனைபேர்? 'பெரிய புராணம்,' 'சிவஞான போதம்' என்பவற்றின் பெயர்களையேனுந் தெரிந்தோர் நுங்களில் ஆயிரத்தில் ஒருவரேனும் உளரா? உண்மைச் சைவர்க்குரிய இவ் வடையாளங்களுள் ஒரு சில தாமும் வாய்க்கப் பெறுதார் வெறும் பெயரளவில் தம்மைச் சைவரென இறுமாப்புடன் சொல்லிக்கொள்ளா நிற்கையில், மற்றைச் சாதியாரிலிருந்து இவ் வடையாளங்கள் எல்லாம் முற்றும் உடையராய் வரும் புனிதரை 'உண்மைச் சைவர்' எனக்கொண்டு அவருடன் உண்ணல் கலத்தல்களைச் செய்தலாற் போதருங் குற்றம் என்னை? பிறசாதியாரிற் சைவ நலங்கள் சிலவற்றோடு பெருஞ்செல்வமும் உடையார் இருந்தால், அவருடன் ஏதொரு வேற்றுமையும் பாராமல் உண்ணல் கலத்தல்களைச் செய்யும் சைவர்களைப் பாராதார் யார்? பிற சாதியார்களிற் செல்வம் மிகுந்தோர் எத்தனையோ பெயர் தஞ் சாதியை விடுத்துச் சைவ குலத்தில் எளிதாகப் புகுந்து கலந்து விடுகின்றனர். "பணம் பந்தியிலே குலங் குப்பையிலே" என்னும் பழமொழியும் இவ்வாறு நேருஞ் சாதிக் கலப்புகளையே உணர்த்தா நிற்கின்றது. சைவ குலத்தில் மட்டுமே இத்தகைய கலப்புகள் நேர்கின்றனவென்று நினைத்தல் வேண்டாம். எல்லாச் சாதியாரிலும் இவை போன்ற கலப்புகள் நிகழ்ந்துகொண்டே போகின்றன.

இப்போது எல்லாக் குலத்தினரினும் மேற்பட்ட குலத்தின
ராகக் கருதப்படும் பார்ப்பனருங் கூடத், தம்மினும் மிகத்
தாழ்ந்தவராகக் கருதப்படுஞ் சாதியாரிற் செல்வமுங் கல்வி
யும் முதலான நலங்களுடையார் விரும்பினால் அவர்கட்குத்
தம் பெண்மக்களை மனைவியராக வாழ்க்கைப்படுத்துகின்
றனர்; அவர்கள்பாற் பெண்மக்களிருந்தால் அவர்களைத்
தாமும் மணம் முடித்துக் கொள்கின்றனர். இங்ஙன
மெல்லாம் பிறசாதியாரிற் செல்வம் மிக்கார்பால் ஒருவகை
யாகவும், செல்வங் குறைந்தார்பாற் பிறிதொரு வகையாக
வும் நடக்கும் போலிச் சைவரின் வஞ்சவொழுக்கந் தீயினுங்
கொடியதாமென்க.

இன்னும் பிறசாதியாரிற் றாழ்ந்த குலத்தவராகத் தம்
மாற் கருதப்பட்ட வகுப்பினர் சிலரைத் தென்னாட்டுத்
திருக்கோயில்களினுள் நுழையவிடாத போலிச் சைவரின்
புல்லிய செய்கையால், எத்தனைப் பெருந் தீங்குகள் நிகழ
விருக்கின்றனவோ என்பதை நினைக்க எம்நெஞ்சம் நடுங்கு
கின்றது! இத் தடையால் இதுவரையில் நிகழ்ந்த தீமை
கட்கே அளவில்லை. எல்லா மக்களையுந் தோற்றுவித்த
இறைவனாகிய தம் அப்பன் அமர்ந்திருக்கும் பொது இட
மாகிய கோயிலிற் சென்று மக்கள் எல்லாரும் மனங்
கரைந்து வணங்கவேண்டியவரா யிருக்க, அப் பொது இடத்
திலும் பொல்லாத சாதிவேற்றுமையை நுழைத்து, இறை
வன் படைத்த மக்களுட் பெரும்பாலாரைத் தாழ்ந்த
சாதியாராக்கி, அவர்களைக் கோயிலினுள் நுழையவிடாத
கொடுஞ் செய்கையினுங் கொடியது வேறு யாதிருக்
கின்றது! தாழ்ந்த சாதியார்கள் கோயிலினுட் புகுந்து
தம்மை வணங்கலாகாதென்று கடவுள் தடைசெய்திருக்
கின்றாரா? அப்படியொன்று மில்லையென்பதும், சாதி இறு
மாப்புக்கொண்டோர்க்குக் கடவுள் அருள் புரியாமல்,

தாழ்த்தப்பட்ட சாதியார்க்கே அவர் மிகுதியும் அருள் புரிந்திருக்கின்றா ரென்பதும் உண்மை வரலாறுகள் பல வற்றால் மேலே விளக்கிக் காட்டின மன்றோ? அல்லது கடவுளை நேரேகண்டு அவனதருளைப் பெற்ற உண்மையடியார்களாவது தாழ்த்தப்பட்ட சாதியார்களை உள்ளே விடுதலாகாதென்று விலக்கியிருக்கின்றார்களா? அப்படியும் இல்லையே. அவர்கள், ஈழக்குலச்சான்றாராகிய ஏனாதி நாயனாரையும், பறைக்குடியினரான நந்தனாரையும், பாணர் குடியினரான திருநீலகண்ட யாழ்ப்பாணரையும், செம்படவர் குடியினரான அதிபத்தரையும், குயவர் குடியிற் பிறந்த திருநீலகண்டரையும், வேடர் குடிப்பிறந்த கண்ணப்பரையும், வண்ணார் குடிப்பிறந்த திருக்குறிப்புத் தொண்டரையும், எண்ணெய் விற்கும் வாணிகர் குடிப்பிறந்த கலியனாரையும் வணங்கி அவர்களைக் கோயிலினுள் நுழைய இடங்கொடுத்த மட்டில் அமையாது, அவர்களையெல்லாம் ஏனை நாயன்மார் திருவுருவங்களோடு உடன் வைத்து, அறுபத்து மூவராக ஒவ்வொரு சிவபிரான் திருக்கோயில்களினும் ஒவ்வொரு நாளும் வழிபாடு செய்து வருகவெனவுங் கட்டளையிட்டிருக்கின்றனரல்லரோ? அக் கட்டளைப்படியே அந் நாயன்மார்கட்கு நாள்வழிபாடும் ஆண்டுவிழாவும் ஒவ்வொரு திருக்கோயில்களினுந் தொன்று தொட்டுச் செய்யப்பட்டு வருதலைப் போலிச் சைவர்கள் பார்த்ததில்லையா? இழிந்த சாதியாராகக் கருதப்பட்ட நாயன்மார்கள் சிவபிரானோடு ஒப்பக் கோயில்கடோறும் வைத்து வணங்கப்பட்டு வருகையில், அந் நாயன்மார் மரபிற் பிறக்குந் தவம்உடைய சான்றார், பறையர், செம்படவர், வண்ணார், எண்ணெய் வாணிகர் என்போரைத் தென்னாட்டுச் சிவபிரான் திருக்கோயில்களில் நுழையவிடாத போலிச் சைவரின் புல்லறிவினுந் தலையெடுப்பினுங் கொடியவை வேறுண்டோ கூறு

மின்கள்! இவர்களுடைய இக் கொடுமைக்கு அஞ்சியன்றே திருநெல்வேலி மாகாணத்திலுள்ள தாழ்த்தப்பட்ட சாதியாரில் எண்ணிறந்தோர் கிறித்துவமதம் புகுந்தனர்! இன்னும் புகுகின்றனர்! இவ்வாறு சைவசமயத்திற் பிறந்த மக்களெல்லாரும் நாளுக்குநாட் கிறித்துவராய்விட்டாற் பிறகு சிவபிரான் கோயில்களை வணங்க வருவார்தாம் யார்? இதுதானும் உணர்ந்து பார்க்குஞ் சிறியதோர் அறிவுதானும் இன்றிச், சைவசமயத்தவராய் இருக்கும் வரையில் தாழ்த்தப்பட்ட சாதியாரை முன்னேறவொட்டாமற் பலவகையால் ஈரநெஞ்சமின்றித் துன்புறுத்தித், தாமே அவர்களைக் கிறித்துவமதம் புகுமாறு செய்துவிட்டு, அவர்கள் கிறித்துவமதம் புகுந்து மேல்நிலைக்கு வந்தபின், அவர்கள்முன் அடக்கவொடுக்க வணக்கத்தோடு சென்று, பல்லை இளித்துக் காட்டியுங் கெஞ்சிய முகத்தோடு தலைகுனிந்து நின்றும், அவர்கள்பாற் பல உதவிகளைப்பெறும் போலிச் சைவரின் செயல் பெரிதும் அருவருக்கத்தக்கதா யிருக்கின்றதன்றோ? எல்லாச் சாதியினரையுங் கோயிலினுள் விடுத்து, அவருட் சிவபிரான் திருவடிக்கண் மெய்யன்பு பூண்டு ஒழுகினோர்க்கு, அக் கோயில்களினுள்ளேயே திருவுருவங்கள் சமைத்து நிறுத்தி அவரை வழிபட்டுவரும் வழக்கந் தொன்று தொட்டு நடைபெற்று வாராநிற்பவும், அச் சிறந்த வழக்கத்திற்கு மாறாகப் போலிச் சைவர்கள் தாழ்ந்த வகுப்பினரைக் கோயில்களினுள்ளே விடுவதில்லையெனப் புதியதொரு போலி வழக்கத்தை ஏற்படுத்திக்கொண்டு, அப் போலி வழக்கத்தின் துணையால் ஆங்கில அரசரைத் தமக்குத் துணைகூட்டி வைத்துத், தாழ்ந்த சாதியாரைக் கோயிலினுள்ளே நுழைய விடாமல், அம் முயற்சியில் மட்டும் விடாப்பிடியாய் நிற்கின்றார்களே! நம் நாட்டவரும், நம் சமயத்தவரும், நம்முடைய வாழ்க்கைக்கு இன்றியமையாது

வேண்டும் எல்லா உதவிகளையுஞ் செய்துவருபவருமான பறையர், சான்றார், ஏகாலியர், எண்ணெய் வாணிகர் முதலி யோர்க்குக் கொடுமை செய்வதாகிய தீயவழியில்தானா இப் போலிச் சைவர்களுக்கு இத்துணை முயற்சியும் விடாப் பிடியும் இருத்தல் வேண்டும்! சைவசமயத்தை வேரோடு கல்லிச் சைவரின் வலிவை நாளுக்குநாட் குறைக்கும் இக் கொடிய செயலிற்றானா போலிச் சைவர்களுக்கு இத்துணை முயற்சியும் விடாப்பிடியும் இருத்தல் வேண்டும்! தாழ்த்தப் பட்ட வகுப்பினரைப் போலிச் சைவர்கள் இவ்வாறெல்லாங் கொடுமையாக நடத்துதலைக் கண்டு அறிவுடையாரெல்லாம் மிக வருந்தி அவர்களின் அக் கொடுஞ்செயலை அருவருத்துப் பேசா நிற்ப, அப் போலிகள் எவருடைய மதிப்பைப் பெறல் வேண்டியோ அவ் வேழைகளை இங்ஙனமெல்லாங் கொடுமைப்படுத்துகின்றனர்? அறிவுடையோர் விரும் பாததைச் செய்தலின், அப் போலிகட்கு இம்மையில் இகழ்ச்சியேயல்லாமற் புகழ்ச்சியில்லை. இறைவன் திருவுள் ளத்திற்கு ஆகாததைச் செய்தலின் அவர்கட்கு மறுமை யிலும் பாவமேயல்லாற் புண்ணியமும் இல்லை. இவ்வாறு இம்மை மறுமை யிரண்டினுந் தமக்குத் தீமையேதரும் இக் கொடுஞ்செயலைப் போலிச் சைவர் உடனே நீக்கி, [அனை வரையுஞ் சாதி வேற்றுமை பாராமற் கோயிலினுட் போக விட்டு, அறிவுடையோர் நன்குமதிப்பையும் இறைவனது அருளையும் பெறக்கடவராக]

[இவர்கள் அவ்வாறு செய்யாதொழியின் நம் அருளாள ரான ஆங்கில அரசரே அனைவருந் திருக்கோயிலினுட் புக விடைதரும் நாள் விரைவில் வரும். அப்போது இப் போலிச் சைவர்கள் தம்மால் ஆவதொன்றுமின்றிச் செய லற்று எல்லாராலும் இழிக்கப்பட்டு நிற்பர்.] பாருங்கள்! மலையாளத்திலுள்ள வைக்கத்தில் தாழ்ந்த சாதியாரைத்

'தெருவிற் செல்லவிடோமென்று அங்குள்ள போலி மேற்சாதியார் எவ்வளவு விடாப்பிடியாய் நின்றனர்! மலையாள அரசர் வாளா இருக்கும் வரையில், அப் போலி மேலோர் எவ்வளவு இறுமாப்புடன் அறிவுடையோர் சொல்லைக் கேளாமல் ஏழைவகுப்பினரைத் துரத்தித் தலைவிரித்தாடினர்! ஆனால், இப்போது மலையாள அரசை ஏற்ற அருள் அரசியார் தமது திருவுளமிரங்கித் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எல்லாருந் தமது நாட்டின்கண் உள்ள தெருக்களெல்லாவற்றிலுந் தடையின்றிச் செல்லலாம் என்று கட்டளை பிறப்பித்தபின்னர் அம் மேற்சாதிப் போலிகள் தம் செயல்அவிந்து இப்போது எவ்வளவு இழிக்கத்தக்க நிலையி லிருக்கின்றனர்! இத்தகையநிலை வருதற்கு முன்னமே அவர்கள் தாமாகவே எல்லாரையுந் தாமிருக்குந் தெருக்களிற் செல்லவிட்டிருப்பர்களானால், அவர்களது நற்செயலை உலகம் எவ்வளவு புகழ்ந்து கொண்டாடியிருக்கும்! திருநெல்வேலியிலுள்ள சைவரும் பார்ப்பனரும் இப்போதே எல்லாவகுப்பினரையும் உயர்வுதாழ்வு கருதாது திருக்கோயில்களினுட் செல்லவிடுகுவராயின், அவர்களது அவ்விரக்கச் செயலை உலகம் மீக்கூறிக் கொண்டாடும். அவர்கள் அங்ஙனஞ் செய்யாது தமது கொடுஞ்செயலிற் காழ்ப்பேறி நிற்பராயின், ஆங்கில அரசினரே திருவுளமிரங்கி எல்லாவகுப்பினருங் கோயிலின் உட்செல்லக் கட்டளையிடும்போது அப் போலிச் சைவரும் பிறருந் தம்மாற் செய்யலாவதின்றி இழிபுற்று எல்லாராலும் எள்ளனஞ் செய்யப்பட்டு மாழ்கிநிற்பரென்க.'

இனி, இச்சாதிவேற்றுமைக் கட்டுப்பாடுகளால் நம் தமிழ்மாதர்கள் ஆளாகிவருந் துன்பங்கள் மிகக் கொடியனவாயிருத்தலால், அவற்றை ஒழித்தற்கும் எல்லாரும் விரைவில் முயலல்வேண்டும். 'நமக்குப் படிப்பும் வேண்

டாம், பணமும்வேண்டாம், அழகும்வேண்டாம், நல்ல சாதியானாய் மட்டும் இருந்தாற்போதும், அவன் ஏழையாயிருந்தாலுங் கல்வியில்லாதவனாயிருந்தாலுங் கிழவனாயிருந்தாலுங் குற்றமில்லை' என்று சொல்லி அழகிய அறிவுள்ள நல்ல இளம்பெண்ணை ஒரு மடையனுக்காவது அல்லது ஒரு கிழவனுக்காவது கட்டிவிடுகின்றனர்! ஆண்மக்களைப் போலவே பெண்மக்களுக்கும் அறிவுண்டு, இன்ப துன்பங்கள் உண்டு, விருப்பு வெறுப்புக்கள் உண்டு, பசி காமங்கள் உண்டு என்பதை நம்மனோர் சிறிதாயினும் உணர்ந்துபார்க்கின்றார்களில்லை. மகளிரை அறிவும் உணர்வும் அற்ற இயந்திரங்களாகவே நினைக்கின்றனர். உள்ளநாள் உள்ள மட்டும் ஆடவர்தமக்குக் குற்றேவல் செய்து வயிறுகழுவி அவர்க்கு இன்பந்தந்து தாம் துன்பத்தில் வைகும் எளிய விலங்குகளாகவே மாதர்கள் நடத்தப்படுகின்றனர். இசையாதவனுக்குக் கட்டுப்படுத்தப்பட்ட ஓர் ஏழைச் சிறுமி அவனாற் படுந்துன்பங்களைப் பொறுக்கமாட்டாமல் அவனை விட்டு நீங்குவளாயின், அவளுக்குச் சிறிதும் இரங்காமல் அவள்மேற் பழிகூறுவாரே எங்கும் உளர்! ஒரு கிழவனுக்கு வாழ்க்கைப் படுத்தப்பட்டவள் சில நாட்களில் அவன் இறந்துபோக அழுதகண்ணுஞ் சிந்தியமூக்குமாய் உயிரற்ற பிணம்போற் காலங்கழிக்கும்படி தன் வாழ்நாள் முழுதுங் கட்டாயப்படுத்தப் படுகின்றனள்; அவள் அக் கடுங்கட்டுப்பாட்டிற் சிறிது பிசகுவளாயினும் அவட்கு வரும் பழிச்சொல்லுந் துன்பமும் அளவிடப்படா! இவ்வாறு நம் பெண்மணிகளைத் துன்புறுத்தும் ஆடவர்கள் தாமாவது பிசகுபடாது நடக்கின்றார்களா? எனில், அதுவுமில்லை. ஒரு கெட்டவன் எத்தனைமுறை வேண்டுமானாலுந் தான் சாகுமட்டும் மகளிர் பலரை மணந்துகொள்ளலாம்; வேசி வீட்டிலேயே குடியாயிருக்கலாம்; தனக்குள்ள பொருளை

யெல்லாங் குடிக்குங் கூத்துக்குஞ் சூதுக்கும் வம்புவழக்குக்கும் செலவழித்துவிட்டுத், தம் மனைவி மக்களைச் சோற்றுக்குந் துணிக்கும் அலைந்து திரியவிடலாம்; தான் எழுபது ஆண்டு ஆனாலும் பதினைந்தாண்டுள்ள ஒரு சிறுமியை மணந்துகொள்ளலாம். இவைகளைக் கேட்பாரில்லை. ஆனால், இவனுக்குப் பிணைக்கப்பட்ட ஏழைச் சிறுமியோ இக் கொடிய சாதிக்கிழவனைவிட்டு விலகுவளாயின், அவள் உடனே கற்பொழுக்கத்தில் வழுவியவள் ஆய்விடுவளாம்! ஐயகோ! அவனுக்குத் தாலியறுத்த அவள் பிறகு வேறொருவனை மணந்துகொள்ளலாகாதாம்! அது சாதிக்குறைவாம்! பெண்மக்களை ஈ எறும்பு கொசுகுபோல் நசுக்கும். இத்தனை சாதிக்கொடுமைகள் ஓர் ஆலிலை மூக்குப்போலிருக்கும் இச் சிறிய தென்னாட்டிலன்றி, ஆலிலைபோற் பரந்த வேறெந்த நாட்டிலுங் காணப்படுவதில்லை. மற்றை நாடுகளில் உள்ள பெண்பாலார் ஆண்பாலாரோடொப்ப எல்லா உரிமைகளும் பெற்று இனிது வாழ்ந்துவருதலால், அவர்கள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளும் அறிவிலும் அழகிலும் ஆண்மையிலும் பிறநலங்களிலுஞ் சிறந்து உலகிற் பயன்பட்டு வாழ்கின்றனர். துன்பத்தில் உழலும் நம் இந்துமாதர்களின் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளோ அறிவில்லா மடையராய் அழகில்லா முசுக்களாய் அவற்றிற்கேற்ற தீய தன்மையுந் தீய செயலுமுடையராய்த் துன்பவாழ்விற்பட்டு விரைவில் உயிர்மாளுகின்றனர்! இவ்வளவுஞ் சாதிவேற்றுமையால் விளைந்த தீவினையாகும்! ஒரு பெண்ணுக்கு ஏற்ற இளைஞன் எந்த மரபிற் பிறந்தவனாயிருந்தாலும், அவள் அவனை விரும்புவளாயின் அவனுக்கே அவளை வாழ்க்கைப்படுத்துதல் வேண்டும். அப்போதுதான் மகளிர்க்குக் கற்பொழுக்கம் நிலைபெறும். ஏலாதவன் ஒருவனுக்குப் பிணைக்கப்பட்டவள் தனக் கேற்றவனைக் காண நேருங்கால் அவனை விரும்பாது

இரான். இஃது எல்லா மக்களிடத்தும் மாற்றமுடியாத இயற்கையாக இறைவனால் அமைக்கப்பட்டிருக்கின்றது. முற்றத்துறந்த முனிவர்களும், மக்களினுஞ் சிறந்த தேவர்களும் இவ்வியற்கையைக் கடக்கமாட்டாது தத்தளித்தனரென்றால், எளிய மக்கட்பிறப்பினரான ஏழை இளம்பெண்களைக் குற்றஞ் சொல்லுதல் அடுக்குமோ! ஓர் இளைஞன் தனக்கு இசையாதவளைத், தனக்குமேல் ஆண்டில் மூத்த ஒரு கிழவியை மணக்கும்படி கட்டாயப் படுத்தப்பட்டால், அவன் உள்ளம் எப்படிக் கொதிக்கும்! அவன் அவ்வேற்பாட்டுக்கு இணங்கி நடப்பனா? அப்படித்தானே ஏழை யிளம் பெண்கள் மனமும் இருக்கும்! ஆதலாற் பெண்மக்களை அவர் தமக்கு ஏற்ற ஆண்மக்களோடு மணஞ்செய்வித்தலே உடனே செயற்பாலது. சாதிக் கட்டுப்பாடுகளால் மகளிர் ஒழுக்கப் பிழைபடுதலும், அதனாற் பல தீங்குகள் விளைதலும் நாளுக்குநாட் பெருகுகின்றன! ஒரு சிறு சாதிக்குள்ளேயே நல்ல மணவாளன் கிடைத்தலரிது; ஒருவன் இருந்தாற் பெண்களைப்பெற்றோரிற் செல்வராய் உள்ளோர் போட்டிபோட்டுக்கொண்டு ஆயிரக்கணக்கான தொகைகளைக் கொடுத்து அவனை விலைக்கு வாங்கிவிடுகின்றார்கள்! அங்ஙனம் விலைக்கு வாங்கப்பட்ட மணமகன் மேலுமேலுந் தன் மனைவியின் வழியே பொருள்பறிக்கும் பேரவாவுடையனாய்ப் போதலின், அவன் தன் மனையாளை இடையறாது துன்புறுத்துகின்றான். அதனால் அவ்விருவர்க்குள்ளும் உயர்ந்த காதலன்பு இல்லாதாகின்றது. கொழுநனும் மனைவியும் அன்பிலாரானால் இல்வாழ்க்கை வெறும் பாழாகின்றது. இனிப் பொருள்கொடுத்து மணமகனைப் பெற வழி இலாதவரோ தமது சாதியைக் கடந்து தாண்ட மாட்டாராய் இசையாதவனுக்குங் கிழவனுக்கும் பெண்ணைக் கொடுத்துத் துன்புறுகின்றனர்! தன் கழுத்திற்குக் கயிறு

தானேயிட்டுக்கொண்டதுபோல உண்மையில் இல்லாத சாதிவேற்றுமையினைத் தாமாகவே வகுத்துக்கொண்டு இவர்கள் இங்ஙனமெல்லாந் துன்புறுவதேன்! நல்லராய்த் தூயராய் இருப்பார் எக்குடிப் பிறந்தவராயிருப்பினும் அவர்க்கு மகளைக் கொடுத்தலும் அவர்பால் மகட்கோடலும் எல்லாருந் துணிந்துசெய்குவராயின், மனைவிக்கேற்ற கணவனும், கணவற்கேற்ற மனைவியும் வாய்ப்பர். அதனால், இல்லறவாழ்க்கை உயர்ந்த தூய இன்பவாழ்க்கையாம். இப்போதுள்ள துன்பங்களும், மணமக்களை விலைகொடுத்து வாங்குதலும் ஒழியும். மகளிரது கற்பொழுக்கமும் எவருஞ் சொல்லவேண்டாமலே இனிது நிலைபெறும்.

இனிப், பிறசாதியாரிலிருந்து தூயராய் வருவார் கடைப்பிடியாய்ச் செயற்பாலதும் ஒன்றுண்டு இழிந்தகுடி ஒன்றிற் பிறந்தோர் அதற்குரிய இழிந்ததன்மைகளை விட்டுத் தூயராய் வரும்போது, தம்மை மீண்டும் அவ்விழிந்த குடிக்கு உரிய பெயராற் கூறித் தம்மைத்தாமே தாழ்வுபடுத்திக்கொள்ளல் ஆகாது. ஒரு தூயவர் தம்மைத்தாமே உயர்த்திக்கொள்ள வழிதேடவேண்டுமே யல்லாமற், பிறர் தம்மை உயர்த்துவார் என்று நம்பியிருத்தலாகாது. ஏனெனில், நம்மனோர் சக்கையைப் பிடித்துச் சாற்றை ஒழுகவிடும் பன்னாடையைப்போல்வர்; உயர்ந்தார் ஒருவர்பால் உள்ள குற்றங்களை ஆராய்ந்து அவற்றையே பேசும் நீரர் அல்லாமல், அவர்பால் உள்ள உயர்ந்த நலங்களைப் பேசும் இயல்பினர் அல்லர். ஆதலால், இத்தகைய தீய மக்களிடையே தூயராய் உயர்வார் தமது இழிகுடிப் பிறப்பை யுரையாது, தம்மைச் சைவர் எனவும் பார்ப்பனர் எனவுங் கூறி யொழுகுதல்வேண்டும்; தம்மோடு உடனிருந்து உணவுகொள்ளாதார் வீட்டில் தாமும் உணவெடுத்தல் ஆகாது. இம்முறையை விடாப்பிடியாய்க்கொண்டு

ஒழுகினுற்றான் கீழோரில் தூயராய் வருவோர் உயரக்கூடும். இவ்வாறு நாளடைவிற் செய்தே பார்ப்பனருஞ் சைவரும் உயர்ந்தனர். இம் முறையைக் கைப்பற்றித் தூயராவார் எல்லாருந் தாமும் ஒருமையுற்றுப், பிறர் எல்லாரையுந் தூயராக்கி ஒருமைப்படுத்திச், சாதிவேற்றுமைகளை அறவே யொழித்து எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய தந்தைக்கு இனிய புதல்வராய் இனிது வாழ்வாராக!

மறைத்திரு மறைமலையடிகளார்
எழுதிய
சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்
முற்றும்.

## மறைமலையடிகளாரின்

# தனிச் செந்தமிழ் நூல்கள்

| | ரூ. | காசு |
|---|---|---|
| சாகுந்தல நாடகம் | | |
| விளக்க உரைக் குறிப்புக்களுடன் | 3 | 25 |
| ” கலிக்காக்கட்டு | 4 | 25 |
| சாகுந்தல நாடக ஆராய்ச்சி | 2 | 50 |
| இளைஞர்க்கான இன்றமிழ் | 2 | 50 |
| ” கலிக்காக்கட்டு | 3 | 25 |
| சிறுவர்க்கான செந்தமிழ் | 2 | 25 |
| ” கலிக்காக்கட்டு | 3 | 00 |
| மரணத்தின்பின் மனிதர் நிலை | 3 | 25 |
| தமிழர் மதம் | 5 | 00 |
| திருவொற்றிமுருகர் மும்மணிக்கோவையுரை | 5 | 00 |
| சிந்தனைக் கட்டுரைகள் | 2 | 00 |
| முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை | 2 | 00 |
| ” கலிக்காக்கட்டு | 2 | 75 |
| பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் | 2 | 50 |
| சைவசித்தாந்த ஞானபோதம் | 4 | 00 |
| குமுதவல்லி நாகநாட்டரசி | 4 | 00 |
| தொலைவிலுணர்தல் | 4 | 00 |
| கோகிலாம்பாள் கடிதங்கள் | 6 | 00 |
| முற்காலப்பிற்காலத் தமிழ்ப் புலவோர் | 2 | 25 |
| சோமசுந்தரக் காஞ்சியாக்கம் | 1 | 50 |
| சோமசுந்தர நாயகர் வரலாறு | 1 | 50 |
| வேளாளர் நாகரிகம் | 2 | 00 |
| கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் | | |
| சைவம் ஆகா | 1 | 75 |
| மனிதவசியம் அல்லது மனக்கவர்ச்சி | 5 | 00 |
| ” கலிக்காக்கட்டு | 6 | 00 |